# ஊங்கள் மேனியும்

## சினிமா நட்சத்திரங்களுக்கு
## ஈடாக அழகோங்க முடியும்!

தென்னாட்டின் அழகிய நாட்டிய நட்சத்திரமான ராகினி, மேனியழகின் பராமரிப்புக்கான எளியமுறை யொன்றைக் குறிப்பிடுகிறார்: ''எனது சருமத்தை மழமழப்புடன் வைத்திருக்க நான் அன்றாடம் தூய, வெண்மையான லக்ஸ் டாய்லெட் சோப் உபயோகிக்கிறேன்.'' லக்ஸ் டாய்லெட் சோப் அதி மென்மையானது, நறுமணமுள்ளது, இன்பமயமானது. நீங்களும் ஏன் இன்றுமுதல் அதை உபயோகித்து உங்கள் மேனியழகைப் பராமரிக்கக்கூடாது?

தூய, வெண்மையான

## லக்ஸ் டாய்லெட் சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகுசாதன சோப்






வீனஸ் பிக்சர்ஸ் ''உத்தம புத்திரன்'' படத்தில் தோன்றும் அழகு நட்சத்திரம் ராகினி

ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு.

LTS. 508-50 TM

# கல்கி

## பொருளடக்கம்


| | | | |
|---|---|---|---|
| **அரசியல்** | | | |
| பரம்பர ஒப்பந்தத்தைப் போற்றுவோம் | ராஜாஜி | ... | 3 |
| பரம்பிக்குளம் உடன்பாடு | ... | ... | 6 |
| டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் | ... | ... | 8 |
| **கதைகள்** | | | |
| பாண்டிமாதேவி | நா. பார்த்தசாரதி | ... | 31 |
| ஆவிகள் விஜயம் | ரா. வீ. | ... | 42 |
| மனச்சுமை | ஸ்ரீவத்ஸன் | ... | 48 |
| மூன்று நண்பர்கள் | வரண்டு மாமா | ... | 54 |
| பொங்கிவரும் பெருநிலவு | வி. ராஜேந்திரன் | ... | 60 |
| கருப்பூனை காணவில்லை! | கல்வி கோபாலகிருஷ்ணன் | ... | 75 |
| மனித மனம் | சம்பந்தம் | ... | 83 |
| உப்பும் உவப்பும் | கே. ரகுபதி | ... | 91 |
| **கட்டுரைகள்** | | | |
| வள்ளுவர் வாசகம் | ராஜாஜி | ... | 13 |
| ராஜாஜியின் 'கைவிளக்கு' | ... | ... | 17 |
| தமிழ்க் கடல் ராய. சொ. | ... | ... | 18 |
| பொள்ளாச்சியில் வெள்ளிவிழா | ... | ... | 22 |
| பண்பாட்டைப் பாதுகாப்போம் | ஜி. டி. கல்யாணசுந்தரம் | ... | 24 |
| பக்தி வயல் | பௌராணிகர் | ... | 27 |
| நான் வளர்த்த தங்கை | காந்தன் | ... | 58 |
| நாட்டு வைத்தியம் | ஸ்ரீஹரி | ... | 79 |


''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.




# உற்சாகத்துடன் கால தாமதமின்றி மரியாதையுடன் வாடிக்கையாளர்களின் சேவைக்காகவே இருக்கின்றது

## இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்

பிற்கால உதவிக்கும், குடும்பப் பாதுகாப்புக்கும் பிறரை நாட வேண்டியதைத் தவிர்க்க மக்களுக்கு நீண்டகாலமாக சேவை செய்து வரும் **இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கியில்** சிறு தொகையாகச் சேமியுங்கள்

கீழ்க்கண்ட கிளைகளில் SAFE DEPOSIT LOCKER வசதிகள், இருக்கின்றன

எஸ்பிளனேட் (மதராஸ்), மயிலாப்பூர் (மதராஸ்) புரசைவாக்கம் (மதராஸ்), மாதுங்கா (பம்பாய்) காரைக்குடி, திருச்சிராப்பள்ளி, கல்கத்தா

# தி இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிட். சென்னை

கிளைகள்: பம்பாய் (கோட்டை, மாண்ட்வி, மாதுங்கா), கல்கத்தா, மதராஸ், புது டெல்லி ஹைதராபாத் & தென்னிந்தியாவிலும் உள்ளன.

வெளிநாட்டுக் கிளைகள்: ரங்கூன், கொழும்பு, ஈப்போ, கோலாலம்பூர், பினாங்கு, சிங்கப்பூர் மலாக்கா, பாங்காக், ஹாங்காங், கிளாங்.

சென்னைக் கிளைகள்: எஸ்பிளனேட், மவுண்ட் ரோடு, மயிலாப்பூர், புரசைவாக்கம், தியாகராய நகர், சௌகார்பேட்டை.

188-4-58





மலர் 18 | இதழ் 17

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

விளம்பி ௵ கார்த்திகை 8

# பரஸ்பர ஒப்பந்தத்தைப் போற்றுவோம்

ராஜாஜி

யார் செய்த பாபமோ, பெரிய பிசகு நடந்து விட்டது: விவசாய உற்பத்தி, பாரதநாட்டின் கவலைதரும் பிரச்னையாகி விட்டது. நான் சொல்லுவதைக் கேட்டு, 'இவ்வளவு பெரிய வியாதிக்கு இந்த எளிய சிகிச்சையா?' என்று தோன்றலாம். விபரீதமாகப் போய்க் கொண்டிருக்கும் நாட்டின் நிலைமைக்கு நான் சொல்லுவதே அடிப்படைச் சிகிச்சை என்பது எனது துணிபு.

பரஸ்பரம் ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளுவது. அதைக் கௌரவித்து அதன்படி வேலை நடப்பது. இதுவே நாகரிக நாடுகளின் நடைமுறை. முன்பு ஒப்பந்தங்களை மக்கள் மதித்து நடந்து வந்தார்கள். மீண்டும் அந்தப் பழைய நிலை வரவேணும். பொதுஜன நலன் என்று சொல்லி, ஒப்பந்தம் செய்து கொண்டு அதன்படி நடக்க வேண்டிய இடத்திலெல்லாம் இப்போது சட்டம் வந்து புகுந்து கொண்டிருக்கிறது. "நீங்கள் நிபந்தனைகள் செய்து கொள்ளலாம். செய்து கொண்டாலும் அது செல்லாது. நாம் செய்திருக்கிற சட்டமே நிபந்தனை" என்று அரசியலார் விதித்திருக்கிறார்கள். இந்தப் புதிய நிலை போக வேணும். இந்த மாறுதலே மக்கள் சுபிட்சமடைவதற்கு மந்திரக்கோல்.

எல்லா ஜன சமூகங்களிலும் பரஸ்பரக் கூட்டுறவினால்தான் மக்கள் வாழ்ந்து வந்தார்கள். பண்டைக் காலத்தில் கூட்டுறவு மூலம் ஆற்றப்பட்ட பணி ஒருவனது நிலை, பிறப்பு, சமூகத்தில் அவனுக்கு இருந்த அந்தஸ்து இவைகளை பொட்டி இருந்தது. பிறகு நாளடைவில் பிறப்பையும் அந்தஸ்தையும் ஒட்டிய அந்தக் கூட்டுறவு முறை மாறி, 'நான் செய்ய வேண்டியது இது. நீ செய்யவேண்டியது இது' என்று பரஸ்பர ஒப்பந்தத்தை யொட்டிக் காரியங்கள் நடப்பது என்று ஆயிற்று. அதற்குப் பிறகு நாட்டின் அரசாங்கத்தை வகித்து வரும் கட்சி ஒப்பந்தம் என்ற ஏற்பாட்டைத் தகர்த்துவிட்டுத் தான் வகுக்கும் வழியிலேயே எல்லாச் செயல்களும் நடக்கவேண்டும் என்று அமல் நடத்த இப்போது முனைந்திருக்கிறது.

விவசாய உற்பத்தித் துறையில் சுயேச்சை ஒப்பந்த உரிமை கொடுத்து, பரஸ்பர ஒப்பந்தத்தால் காரியங்களை நடத்தி வந்தால் உண்டாகும் நன்மையை அறிந்துகொள்ள முற்படாமலே, இன்று நமது அரசாங்கம் உணவு உற்பத்தியில் ஈடுபட்டுள்ளவர்களின் பரஸ்பர உறவு இப்படித்தான் இருக்க வேண்டும் என்று சட்டத்தால் நிச்சயிக்கத் துடியாய்த் துடிக்கிறது.

ராமராஜ்யமானால் மக்களுக்கு நலன்கள் உண்டாக அரசாங்கம் எதையும் செய்யலாம். ஆனால் எல்லாம் ராமராஜ்யம் ஆகுமா? ஒரு அரசாங்கத்தை நல்ல அரசாங்கம், தீர்க்கதிருஷ்டியுள்ள அரசாங்கம் என்று எதை வைத்துச் சொல்லுகிறோம்? அதைக் கைப்பற்றி நடத்தும் ஆட்களை மனத்தில் வைத்துத்தான் மதிப்பிடக் கூடும். அவர்களின் தன்மை, தரத்தைப் பொறுத்தது அரசாங்கத்தின் தன்மையோ தரமோ. முடியரசானாலும், குடியரசானாலும் அதிகார வர்க்க ஆட்சியானாலும் எதுவாயினும் இதுவே உண்மை. ஆகவே நமது அரசாங்கம் அவசரப்பட்டு நாகரிக காலத்துக்கு இசைந்த ஒப்பந்த முறையை மாற்றி நாட்டின் விவசாயத் தொழிலை நடத்தத் தாம் வகுத்ததே வழி என்ற புதிய நியதியை வகுக்க முன் வந்துள்ள செயல் நாட்டுக்குப் பயங்கர விபத்தாகி, பெரிய வினையாகி, விளைச்சலில் ஊக்கம் குன்றி, உணவுப் பற்றாக்குறையில் முடிந்து, கடைசியில் பஞ்சத்தில் கொண்டு போய்விடும்.

அடிமை முறை தீர்ந்து ஒப்பந்த முறை ஏற்பட்டு விட்ட இந்த நாளில் வேலையாளை எஜமான் அடிமைப்படுத்தினாலும் ஒன்றே, எஜமானனை வேலையாள் அடிமைப்படுத்தினாலும் ஒன்றே. இரண்டிலும் வித்தியாசமில்லை. சுயேச்சை சுதந்திரமும் ஒப்பந்த சுதந்திரமும் இந்த இரண்டையுமே மதிக்காமல் ஒருவரைவிட இன்னொருவருக்குப் பழிவாங்கும் மனப்பான்மையில் விசேஷ உரிமைகளை அளிக்கச் சட்டம் முன்வருவது பழைய அடிமை நிலைமையேயாகும்.

செல்வமோ, உழைப்போ அவனவனுடைய உரிமை. கட்டாயத்தின்பேரில் உழைக்கச் செய்வதோ, செல்வத்தைப் பறித்து விடுவதோ இரண்டும் கொடுமையாகும்.

ஒருவன் தன் தேக சிரமத்தையோ செல்வத்தையோ எதையுமே ஒப்பந்தத்தின் பேரில் பரஸ்பர லாபத்துக்காகத் தரவேண்டும். அதுவே நாகரிக சுதந்திர வாழ்க்கை. மனிதருக்குள் நிலவும் பரஸ்பர உறவை, ஒப்பந்தத்துக்குப் பதில் சட்டம் முன்வந்து நிர்ணயிப்பது அடிமை நிலையாகும்.

பண்ணையில் உழைப்பவர்களுக்கு சொந்தக்காரர் அடிமையாவதும் முன் இருந்த நிலைமையும் இரண்டுமே தவறு. கட்டாயப்படுத்தப்படும் கொடிய சூழ்நிலையிலிருந்து, விவசாயத்தில் ஈடுபட்டு விளைச்சலைப் பெருக்கக் கூடிய மனித கூட்டுச் சக்தியை விடுவிக்க வேண்டும். செயலாற்றுதலை,—மூலதனம் போடுவதாலோ, சாமர்த்தியத்தினாலோ, நிர்வாகத் திறன் கொண்டோ அல்லது நேர்மையான சரீர உழைப்பினாலோ எல்லாவித செயலாற்றுதலையும்—பரஸ்பர ஒப்பந்த ஏற்பாட்டுக்குள் கொண்டுவந்து விட்டால்தான் விவசாயம் வளரும்; சுதந்திர உணர்ச்சியும் தன் மதிப்பும் புத்துயிர் பெறும். கட்சி நலனையே மனத்தில் கொண்டு நாட்டின் நலத்தை மறந்து தீர்க்காலோசனையின்றி அரசியல் கூட்டத்தாரும் பதவியில் உள்ள அரசியல்வாதிகளும் அவ்வப்போது இயற்றும் சட்டங்களில் எவ்வளவோ தவறுகள் இருக்கும்; இன்று ஒரு விதம் நாளை வேறொருவிதம் என்பதாக அரசியல் வாதிகளின் மனம் போனபடியெல்லாம் அவை உருமாறும். இப்படிப்பட்ட சட்டங்களின் கட்டாயப்படுத்தும் இயல்புக்கு முடிவு தேட வேண்டும். விவசாயத்துக்கு விடுதலை தரவேண்டும்.

முன்பெல்லாம் நாட்டின் வழக்கப்படி எல்லாம் நடந்து வந்தன. மக்களுக்கு வழி காட்டவும், மக்கள் நன்னெறியில் நடக்கவும் அமுலில் இருந்த வழக்கங்கள் போதுமானவையாக இருந்தன. வாழையடி வாழையாக வந்த வழக்கத்தை மக்கள் போற்றி வந்தார்கள். அவர்களது ஆசைகளையும் நடத்தைகளையும் நெறி தவறாமல் வழக்கம் காத்தும் அடக்கியும் வந்தது. இப்போது பழைய வழக்கம் என்பது பல சட்டங்களால் அழித்து விடப்பட்டது.

நாட்டின் பாரம்பரிய வழக்கத்துக்குப் பதில் இப்போது சட்டம் வந்து ஆட்சி நடத்துகிறது. வழக்கத்தைப் பேணிக் காத்து வந்தது மக்களின் பக்தி. பக்திக்குரிய வழக்கத்துக்குப் பதில் சதிகளும் சூழ்ச்சிகளும் கலந்த சட்ட மசோதாக்களும் அரசியல் சச்சரவுகளும் விவசாயத்தைச் சூழ்ந்து உயிரைக் குடித்து வருகின்றன.

விவசாய சம்பந்தமான சட்டங்களைப் பொது நல நோக்கத்தோடு செய்ததாக வெளியே பறைசாற்றப்படுகிறது. எப்படியாயினும் அந்த நோக்கம் நிறைவேறவில்லை. ஆகவே விவசாயத்தில் மக்களுக்கு மீண்டும் ஊக்கமும் ஆர்வமும் உண்டாக வேண்டுமானால் உடனுக்குடனே செய்ய வேண்டிய

தோட்டங்களில் வேலை நிறுத்தம்

கேரள அரசாங்கம்

தோட்ட முதலாளி

தோட்டங்கள் தீப்பிடித்து எரிகிறதே! உங்கள் கண்களில் படவில்லையா?




டி. டி. டி. மருந்துக்கு சாதாரண கொசு இனியும் மசியமாட்டேனென்கிறது என்று ஒரு பத்திரிகைச் செய்தி கூறுகிறது.

காரியம் ஒன்றே. பரஸ்பர ஒப்பந்த அடிப் படையில் விவசாயத்தில் ஈடுபடும் முறையை நிலைநாட்ட வேண்டும். அடிபிடி கட்டாயமின்றி மனமொப்பி பரஸ்பரம் ஒப்பந்தம் செய்து கொண்டு மக்கள் விவசாயத்தில் இறங்கி விளைச்சலைப் பெருக்க வழி செய்ய வேண்டும். அவனவன் தொழிலுக்கு விலை அவனவனுக்குத் தெரியும். இருபாலார் ஒப்புக்கொண்டு நிர்மாணித்துக் கொண்ட சமாதானங்களுக்கும் ஒப்பந்தங்களுக்கும் மீண்டும் மதிப்புதர வேண்டும்.

அரசியல் சூழ்ச்சிக்காக ஒருவர் சொத்தைப் பறித்து இன்னொருவருக்குக் கொடுக்கும் அடாத செயல் இனி வேண்டாம். எந்தக் கட்சி பதவியில் இருந்தாலும் சட்ட சபை அதன் கையில் இருக்கும். ஆகவே சட்டசபை அதிகாரத்தைக் கொண்டு மக்களுக்கு லாப நஷ்டம் பரிமாறி அதன் வழி பதவியைக் காத்துக் கொள்ள முயல்வது சின்னத்தனமாகும். ஏழ்மையின் காரணத்தால் மனிதன் மனிதனுடன் நேர்மையான ஒப்பந்தம் செய்து கொள்ளுவது சாத்தியமாகாது என்று என்றைக்கோ இருந்த நிலைமை இப்போதும் இருந்து வருகிறது என்று எண்ணுவது தவறு. இது ஒரு அர்த்தமில்லாத மந்திரம். இந்த மூட மந்திரத்தைச் சொல்லி அரு[illegible]லிருந்து வந்த ஒப்பந்த முறையை ஒழித்து அரசியல் நோக்கத்துடன் புதியபுதிய விவசாய சட்டத்தைச் செய்த பெரும் தவறை நல்ல காரியம் என்று சாதித்துக் கொள்ளப் பார்க்கிறார்கள். இப்போது நாட்டுக்கு வேண்டியது மீண்டும் மக்கள் மனத்தில் தன்னம்பிக்கையும் துணிவும் தோன்ற வேண்டும். ஒருவருக்கொருவர் ஒப்புரவும் நட்பும் நம்பிக்கையும் ஏற்பட வேண்டும். இவையெல்லாம் சாத்தியமாக ஒரே ஒருவழிதான் உண்டு. கட்சியை வளர்க்கும் நோக்கத்துடன் சட்டங்கள் செய்வது போய், விவசாயத் தொழிலில் ஒருவரையொருவர் நம்பிச் செயலாற்றி, பரஸ்பர ஒப்பந்த முறையை, அதன் பழைய புனித பீடத்தில் அமர்த்தி அதுவே விவசாயத் தொழிலில் மீண்டும் அமுல் நடத்தும்படி செய்ய வேண்டும்.

வேண்டாத காரியங்களில் தலையிட்டு இப்படியெல்லாம் கந்தல் கூளப்படுத்தியாகி விட்டது. பண்டைய ஒப்பந்தம் இருந்த இடத்தில் புதிய சட்டங்கள் வந்து 'என்க்ரோச்மெண்ட்' செய்துவிட்டன. அச் சட்டங்களை வாபஸ் பெறவேண்டும். அப்படிச் செய்வதில் சில இடைக்காலக் கஷ்டங்கள் இருக்கலாம். அந்தக் கஷ்டம் சிறிது காலத்துக்குத் தான் இருக்கும். உள்ளேபுகுந்த முள்ளை வெளியே எடுப்பதில் ஏற்படும் வேதனைபோல. சட்டத்தின் மூலம் விவசாயம் செய்ய முற்பட்டதை வலுவில் துறப்பதே விவேகமாகும். பரஸ்பர ஒப்பந்த முறையின் பலனாக விவசாயமாகிய தொழிலில் மக்களுக்கு மீண்டும் அளவுகடந்த ஆர்வம் உண்டாகும். பாரத நாட்டை உள்நாட்டுப் பஞ்சம், வெளிநாட்டுக் கடன் இந்த இரண்டு விபத்துக்களிலிருந்தும் மற்றும் 'நாட்டுக்கு என்ன கதி நேருமோ?' என்ற கவலையிலிருந்தும் காக்கக்கூடியது விவசாயமாகிற இந்த ஒரு தொழில்தான். அதைக் கட்சிச் சதிகளினின்றும் பறிமுதல் முறையினின்றும் மீட்க வேண்டும்.

விவசாயத்தில் ஈடுபட வேண்டியவர்கள் பரஸ்பர சுதந்திர ஒப்பந்த முறையை அனுசரிக்க வழிதிறக்க வேண்டும்.

# பரம்பிக்குளம் உடன்பாடு

**ப**ரம்பிக்குளம் தண்ணீர் சம்பந்தமாக நல்ல முடிவு ஏற்பட்டது பற்றித் தமிழ் நாட்டில் மகிழ்ச்சியடையாதவர்கள் இல்லை.

தமிழ்நாட்டில் உற்பத்தியாகிக் கேரள நாட்டில் பாய்ந்து கடலில் கலந்து வீணாகப்போகும் தண்ணீரை நாம் கேட்டோம். அதற்குக் கம்யூனிஸ்ட் சர்க்கார் இணங்கி யிருக்கிறது. முந்தைய கேரள சர்க்கார்களும் சரி, காங்கிரஸ் முதலிய கட்சிகளும் சரி, கொஞ்சங்கூட விட்டுக் கொடுக்காத மனப்பான்மை காட்டி வந்தன. கம்யூனிஸ்ட் கேரள சர்க்கார் இவ்விஷயம் சம்பந்தமாகச் சர்வ கட்சி மகாநாடு கூட்டவேண்டும் என்று சொன்ன போது, கேரள காங்கிரஸ் அந்தக் கூட்டத்துக்குக்கூட வராமல் முட்டுக்கட்டை போட்டு வந்தது. ஆனால் கேரள முதன் மந்திரி திரு நம்பூத்ரிபாடு தமது சொந்தப் பொறுப்பில் இவ்விஷயத்தில் முன்னின்று இரண்டு ராஜ்யங்களுக்கும் பயன் அளிக்கும் வகையில் ஒரு நல்ல முடிவு செய்து கொண்டது பற்றி அவரைப் பாராட்ட வேண்டும்.

தமிழ் நாட்டுக்கு வரவேண்டிய தண்ணீருக்கு அணை கேரள நாட்டில் கட்டவேண்டியிருக்கிறது. அந்த அணையில் தேக்கிய நீரைத் தமிழ்நாட்டுக்குக் கொண்டுவர மலையைக் குடைந்து வழி செய்யவேண்டி யிருக்கிறது. அப்படிக் கொண்டு வரப்படும் தண்ணீர் கோவை ஜில்லாவில் நான்கு தாலுக்காக்களில் வறண்டு கிடக்கும் நிலங்களையெல்லாம் பசுமையாக்கும்; நெல் விளைச்சலைப் பெருக்கும்!

''உணவு உற்பத்தியைப் பெருக்கவேண்டும்'' என்று காங்கிரஸ் பெருந் தலைவர்கள் பெரும் கூச்சல் போடுகிறார்கள். காஷ்மீர் முதல் கன்னியாகுமரிவரை இந்தியா ஒரு நாடு, ஓர் நிறை என்றெல்லாம் சொல்லுகிறார்கள். மைசூர் ராஜ்யத்தில் உற்பத்தியாகிப் பெருகும் பாலாற்றுத் தண்ணீரை ஒரு சிறிதளவு விட்டுக் கொடுத்தால் வட ஆற்காடு ஜில்லாவிலும் செங்கல்பட்டு ஜில்லாவிலும் வானம் பார்த்துக் கிடக்கும் பூமி பிழைத்துப் போகும் என்று கெஞ்சினார்கள். ஆனால் விட்டுக் கொடுக்கும் வழியைக் காணோம். அங்கே மைசூரில் ஆட்சியிலிருப்பதும் காங்கிரஸ். இங்கு ஆட்சியிலிருப்பதும் காங்கிரஸ்தான்!

ஆனால் கேரள கம்யூனிஸ்ட் ஆட்சி சென்னை காங்கிரஸ் ஆட்சிக்கு விட்டுக் கொடுத்து, ''எம் மொழியினராயினும் எல்லோரும் இந் நாட்டு மக்கள்'' என்று பரம்பிக்குளம் விஷயத்தில் நடந்து கொண்டிருக்கிறது.

சென்னை சர்க்காரும் கம்யூனிஸ்ட் கட்சியோடு உடன்படிக்கை செய்து கொள்வதாவது என்று 'ஜாதிப் பிரஷ்டம்' பார்க்காமல் தமிழக மக்களுக்கு நன்மை பயக்கும் இந்த முடிவுக்கு ஒப்புக் கொண்டதற்கு அவர்களைப் பாராட்ட வேண்டும்.

''சோலையாற்றுத் தண்ணீர் முழுவதையும் மலையாளத்தாருக்குக் கொடுத்து விட்டார்கள். சென்னை சர்க்கார் ஏமாந்து போய் விட்டார்கள்'' என்று சிலர் கூச்சல் போடுகிறார்கள். பரம்பிக்குளம் திட்டத்துக்கு வேண்டிய தண்ணீரை எடுத்துக் கொண்ட பின்னரே, சோலையாற்றுக்குத் தண்ணீர் வழங்குகிறார்கள் என்பதை மறந்துவிடக் கூடாது.

கேரள நாட்டினர் அரிசிக்குத் தஞ்சை ஜில்லாவை நம்பி வாழ்பவர்களாக இருக்கிறார்கள். அந்த நெல், கோவையில் விளைந்தால் பக்கத்திலேயே கிடைத்து விடுகிறது. தஞ்சையிலிருந்து கொண்டு வரும் வண்டிச் சத்தம் கேரள சர்க்காருக்கு மிச்சம். அதனால் தான் கேரள சர்க்கார் பரம்பிக்குளம் திட்டத்துக்கு இணங்கி யிருக்கிறார்கள் என்பார்கள். என்றாலும், நிலத்தை உழுது வேலை செய்து உணவைப் பெருக்கும் வாய்ப்பு கிடைப்பது தமிழ்நாட்டு விவசாயிக்கு. இதைச் சற்றும் உணராமல் பேசுவது எவ்வளவு அநியாயம்.

பரம்பிக்குளம் திட்டம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நிறைவேற்றப் படவேண்டிய திட்டங்களில் ஒன்று. ஆகவே விரைவில் இந்தத் திட்டத்தை நமது சர்க்கார் நிறைவேற்ற வேண்டும். கேரள ராஜ்யத்தில் கம்யூனிஸ்ட் சர்க்கார் இருக்கும்போதே நிறைவேற்றினால் நன்மையாக இருக்கும்.

## பம்பாயில் தமிழ் நாடக விழா

பதினேழு ஆண்டுகளாகப் பம்பாயில் தமிழ் மொழிக்குப் பணி புரிந்துவரும் பம்பாய்த் தமிழ்ச் சங்கம், சுமார் மூன்று லட்சம் ரூபாய் செலவில் தமிழ் மணி மண்டபம் கட்டி முடித்து, தமிழ் மொழி வளர்ச்சிப் பணியில் ஈடுபட்டிருப்பதை யாவரும் அறிவார்கள். சங்கம் லட்சியப் பாதையில் துரிதமாக முன்னேற, கட்டடம் கட்டுவதில் ஏற்பட்ட கடன் பொறுப்புக்கள் விரைவில் குறைவது இன்றியமையாதது. சங்கக் கட்டட நிதிக்கு உதவும் பொருட்டு, கலைஞர் திரு எஸ். வி. சஹஸ்ரநாமம், 'குலதெய்வம்' புகழ் திரு வி. ஆர். ராஜகோபால், திருமதிகள் பண்டரிபாய், பிரமீளா, மைனாவதி மற்றும் சேவா ஸ்டேஜ் குழுவினர் டிசம்பர் 2-ம் தேதி முதல் 'மல்லியம் மங்களம்', 'தாலுவேலி நிலம்', 'தேரோட்டி மகன்' ஆகிய நாடகங்கள் ஒவ்வொன்றையும் இரு முறைகள் நடத்த இருக்கின்றனர். நாடகங்களுக்கு நூதனமான மேடைக் காட்சி அமைப்புக்களைக் கண்கவர் முறையில் கலாசாகரம் திரு ராஜகோபால் அமைக்கிறார். ஆயிரக்கணக்கான மக்கள் விஜயம் செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் குறைந்த கட்டணத்தில் ஸீசன் டிக்கட்டுகள் வழங்கப்படுகின்றன. சிறந்த நாடகங்களைக் காணும் வாய்ப்பை அடைவதுடன் நல்லதோர் தமிழ்ப் பணிக்கு ஆதரவு நல்குமாறு பம்பாய்வாழ் தென்னிந்தியர்கள் அனைவரையும் வேண்டுகிறோம்.

# அருள் வாக்கு

ஸ்ரீ சங்கராச்சாரியார் - காஞ்சிகாமகோடி பீடம்

நம்முடைய மதத்தை ரட்சிக்க வேண்டும், ஆசாரங்களைக் கடைப்பிடிக்க வேண்டும் என்றெல்லாம் நாம் சொல்லிக் கொண்டிருக்கிறோம். இந்த நவீன காலத்தில் அவரவர்கள் தத்தம் மதத்தை ரட்சித்துக் கொள்ள ஒவ்வொரு வகையில் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார்கள். பணத்தைச் செலவழித்துப் பிற மதஸ்தர்களைத் தங்கள் மதத்துக்குச் சிலர் மாற்றிக் கொள்ளுகிறார்கள். பலாத்காரத்தினால், மிரட்டலினால் பலரைத் தங்கள் மதத்துக்கு மாற்றிக் கொள்ளுவதையும் கண்டிருக்கிறோம். இவற்றைக் காணும் போது, "இதைப் போல் நாம் செய்ய வேண்டாமா?" என்று நாமும் நினைக்கலாம்.

பணம் உண்மையில் ஒரு மதத்துக்குப் பலம் ஆகாது. ஒரு முரடன் சண்டை போட்டுத் தன் மதத்தில் எல்லோரும் சேர வேண்டுமென்று வற்புறுத்தினால் அப்போதைக்குஅவன் மதத்துக்குப் பயம் ஆதாரமாக இருக்கும். எப்போதுமே பஞ்ச காலத்தில் கிறிஸ்தவ மதமும் சண்டைக் காலத்தில் இஸ்லாமிய மதமும் பரவும். சாந்தமாக இருக்கிற காலங்களில்தான் ஒருவன் வேதாந்தி ஆக வருவான். கோடி கோடி மக்கள் வீணாகப் போனாலும் ஒருவன் பூரணத்துவம் அடைந்து விட்டால் அது தான் நம்முடைய மதத்தின் பிரயோசனம். அவன் ஒருவனுடைய அனுக்கிரஹத்தினாலேயே உலகம்க்ஷேமம் அடையும். அப்படிப்பட்ட ஒருவன் உண்டாவதற்குத்தான் நாம் பிரசாரங்களைச் செய்கிறோம். உபந்நியாசங்கள் பண்ணுகிறோம். ஜனங்களுக்கு மதத்தில் பக்தியை உண்டுபண்ணுகிறோம். இல்லையானால் இவை ஒன்றுமே வேண்டாம்.

உறியடி என்று ஒரு உத்ஸவம் உண்டு. அப்போது சறுக்கு மரத்தில் டத்து அல்லது இருபது பேர்கள் ஏறுகிறார்கள். எல்லோரும் ஏறி விட முடியாது. ஒருவன் ஏறுகிறான்; சறுக்கி விழுகிறான். பலர் ஏறி ஏறி விழுகிறார்கள். கடைசியில் ஒருவனாவது ஏறி விடுகிறானல்லவா? அந்த ஒருவன் ஏறுவதற்குத் தான் இத்தனை பிரயாசை; பல பேர்கள் சறுக்கி விழ வேண்டியிருக்கிறது. அது போல், நம்மில் ஒருவன் பூரணத்துவம் அடைந்து விட்டால் போதும். இத்தனை கோயில், இத்தனை மதம், பிரசாரம் எல்லாவற்றுக்கும் அது ஒன்றே லட்சியம். மனித ஜன்மா எடுத்ததற்குப் பிரயோசனமே அதுதான்.

அப்படித்தான் லட்சக் கணக்கில் நாம் இவ்வளவுபேரும் வீணாகப் போய்விட்டாலும் குற்றம் இல்லை. நம்மில் யாராவது ஒருவன் பூரணத்துவம் அடைந்தால் போதும். பூரணத்துவம் இல்லாமல் சிலர் ஏமாற்றக் கூடும். நாம் கூட ஏமாந்து போகலாம். அப்படிப் பத்துப் பேர்கள் உலகை ஏமாற்றினாலும் அவர்களில் ஒருவர் நல்லவராக இருப்பார். கோடி கோடி சரீரம் உண்டாவதற்குப் பயன் அது ஒன்றே போதும். அந்த ஒன்று நமக்கெல்லாம் சக்தி. அந்த ஒரு சக்தியைச் சிருஷ்டி பண்ணுவதற்காகத்தான் இத்தனை சுகம், இத்தனை துக்கம், இத்தனை வியாதிகள். "ஜந்மனாமந்தே ஞானவாந் மாம் ப்ரபத்யதே"—அநேக ஜன்மங்களின் முடிவில் ஞானி என்னை அடைகிறான் என்று இதைத்தான் கீதையில் பகவான் சொல்லுகிறார்.

துணி அழுக்கில்லாமல் இருந்தால் போதாது; உடம்பும் வீடும் அழுக்கில்லாமல் இருந்தால் போதாது; நம் மனம் அழுக்கு இல்லாமல் ஆக வேண்டும். நாம் நல்வழியில் நிறைவு பெற வேண்டும். அப்போதுதான் பிறருக்குச் சொல்ல யோக்கியதை இருக்கும். என்னிடம் குறை இருந்தால் நான் சொல்லுவது பிறரை ஏமாற்றுவது போலத்தான். அவரவர்கள் நிறைவை உண்டு பண்ணிக் கொள்ள வேண்டும் என்பதுதான் நம்முடைய மதம். அதனால் தான் நமது மதத்தை ரட்சிக்கப் பிற மதத்தினர்கள் அனுஷ்டிக்கும் முறைகளை நாம் கையாளுவதில்லை. காயத்ரி, பஞ்சாட்சரம், அஷ்டாட்சரம் இப்படி அவரவர்கள் தங்களுக்- உபதேசமான மந்திரத்தைத் தியானம் பண்ணிக் கொண்டிருந்தால் இன்னொரு மதத்தைப் பற்றிய அவசியம் ஒன்றுமே ஏற்படாது. அதைப் பண்ணாமல் வெறும் பிரசாரம் பண்ணுவதால் மட்டும் மதத்தை வளர்க்க முடியாது. நாம் பூரணத்துவம் பெறவும், உலகம் க்ஷேமம் அடையவும், மதம் வளரவும் நாம் எல்லோரும் அம்பாளுடைய தியானத்தில் ஈடுபடுவது அவசியம், நமது கடமை.

# டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன்

ஒரு அதிசயமான செய்தியைக் கேட்டீர்களா? டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் அவர்களுக்கு அறுபது வயதாகி விட்டதாம்!

ஆம்; டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் அவர்களை அறிந்தவர்களால் அவர் அறுபது வயதானவர் என்று நம்பவே முடியாது. அவருடைய ஹாஸ்யத்தையும் எளிய இனிய சுபாவத்தையும் நன்கு அனுபவித்தவர்கள், "கிருஷ்ணனை அறுபது வயதுக் கிழவர் என்று சொல்லாதே!" என்று கோபித்துக் கொள்ளத் தான்செய்வார்கள்! ஆனாலும் இது உண்மை. அவருக்கு வருகிற டிசம்பர் ஏழாம் தேதியுடன் அறுபது வயது நிறைந்து விடுகிறது. அறுபத்தோராவது பிறந்ததின விழாவைப் புதுதில்லி அன்பர்கள் சிறப்பாகக் கொண்டாடத் திட்டமிட்டிருக்கிறார்கள். அவருக்குப் பல்லாண்டு கூறி வாழ்த்துவதில் நமது பிரதமர் நேரு, உதவி ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் முதலியவர்கள் எல்லோரும் சேர்ந்து கொள்ளப் போகிறார்கள்!



இதையெல்லாம் கேட்கும்போது "வத்திராயிருப்பின் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்!" என்று சொல்லத் தோன்றுகிறது!

"அது என்ன வத்திராயிருப்பு?" என்று யாரோ சிலர் கேட்பது காதில் விழத்தான் செய்கிறது!

வத்திராயிருப்பு என்பது ராமநாதபுரம் ஜில்லாவிலே, இன்றைக்கும் ரயில் வசதியில்லாத சின்னஞ்சிறு ஊர். ரயில்வே ஸ்டேஷனை அந்த ஊர்வாசிகள் ஐம்பது மைல் பஸ் பிரயாணம் செய்தால் தான் பார்க்க முடியும். அந்த ஊரில்தான் அறுபது வருஷங்களுக்கு முன்பு இன்று உலகப் பிரசித்தியடைந்து விட்ட விஞ்ஞானி கிருஷ்ணன் பிறந்தார். அங்கேதான் படித்தார். பிறகு ஸ்ரீவில்லிப்புத்தூரில் படித்தார். கல்லூரிப் படிப்புக்காகச் சென்னை ராஜதானிக் கல்லூரிக்கு ஓடி வராமல், மதுரை அமெரிக்கன் கல்லூரியிலேயே படித்து, இன்று உலகம் புகழும் விஞ்ஞானியாக விளங்குகிறார்.

ஆம்! இங்கு ஒரு விஷயத்தைச் சற்று வற்புறுத்திவிட வேண்டியது அவசியம். கல்லூரிப் படிப்பென்றால், சென்னை நகரக் கல்லூரிகளில் தான் படிக்க வேண்டும் என்ற மூட நம்பிக்கை இன்றும் நிலவி வருகிறது; சென்னையில் படித்தால் மேற்கொண்டு ஆராய்ச்சிக்கு வேண்டிய வாய்ப்புக்கள் கிடைக்கும் என்று சொல்லிக் கொண்டு மாணவர்கள் சென்னை நகருக்கு வந்து, ஹாஸ்டல்களில் தங்கி, சினிமாக்கள் பார்த்துப் பெற்றோரின் பணத்தை விரயமாக்கிவிட்டுப் போவதைப்பார்க்கிறோம்!

டாக்டர் கிருஷ்ணன் விஞ்ஞானத் துறையில் மிகுந்த ஆர்வங்கொண்டு, ஸர் ஸி. வி. ராமனுடன் பணியாற்றினார். "ஸர் ஸி. வி. ராமன் விளைவு" என்ற ஒளிக்கதிர் ஆராய்ச்சியில், டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் அவர்களது ஆராய்ச்சிக் கைங்கரியமும் உண்டு.

அதற்குப் பிறகு கல்கத்தா, டாக்கா முதலிய சர்வகலாசாலைகளுடன் தொடர்பு கொண்டு பலப்பல ஆராய்ச்சிகள் நடத்தி உலகப் புகழ் பெற்றுவிட்டார். அவரால் விஞ்ஞானிகள் உலகத்தில் பாரதம் பெருமையுற்றிருக்கிறது என்று சொன்னால் அது சிறிதும் மிகையாகாது.

மேல்நாட்டில் தற்சமயம் விஞ்ஞானிகள் என்றாலே ஒரு கசப்பு ஏற்பட்டிருக்கிறது. அவர்களுடைய ஆராய்ச்சியெல்லாம் அணுகுண்டு - ஜலஜகுண்டு முதலிய நாசகரமான குண்டுகளைக் கண்டுபிடிக்கப் பயன்பட்டிருப்பதைக் கண்டு ஒரு வெறுப்பு. இதற்கு ஒத்துழைக்க மாட்டோம் என்று விஞ்ஞானிகள் சொல்லாமல் மேலும் மேலும் இந்தப் பயங்கரக் குண்டுகளை உண்டாக்கவே உதவுவதைக் கண்டு கோபம் வேறு ஏற்பட்டுள்ளது. சென்ற வாரம் பிரிட்டனிலிருந்து வெளியாகிய 'நியூ ஸ்டேட்ஸ்மன்' என்ற பத்திரிகையில் ஒரு ஆசிரியர் எழுதுவதைப் பாருங்கள்.

"விஞ்ஞானிகள் தங்களைக் கடவுள் என்றே எண்ணிக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் இந்த அண்டத்தை அழித்துப் புதுவிதமாகச் செய்ய வேண்டும் என்று விரும்புகின்றனர்! இந்தப் பைத்தியக்கார ஆசைக்கு நாம் தண்டிக்கப்படுகிறோம். இந்த விஞ்ஞானிகளை என்று தான் அடக்கியாளப் போகிறோமோ? காலம் கடந்து போவதற்கு முன்னால் அவர்கள் கையிலுள்ள சக்தியைக் கழற்றித் தூர எறியப் போகிறோமோ, என்னவோ!" என்று பெரிதும் அங்கலாய்க்கிறார்.

ஆனால் அந்த விஞ்ஞானிகள் எல்லோரும் நமது டாக்டர் கிருஷ்ணன் அவர்களைப் பின்பற்றினால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று சொல்லத் தோன்றுகிறது. ஏனெனில் அவரது தெய்வபக்தி அப்படிப்பட்டது. அவர் பிறவியில் ஸ்ரீ வைஷ்ணவர்: உள்ளத்திலும் ஸ்ரீ வைஷ்ணவர். அவருக்கு ஆழ்வார்களின் பாடல்களிலும் தமிழிலும் எவ்வளவு ஈடுபாடு! தில்லியில் தமிழ்ச் சங்கத்தை நிறுவியவர் டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் என்று சொன்னாலே போதும், அவரது தமிழ் ஈடுபாடு புரிந்துவிடும்!

விஞ்ஞானத்திலும் தமிழிலும் ஒருங்கே ஈடுபட்ட டாக்டர் கிருஷ்ணன் தமிழ்த் தாயின் அருளால் பல்லாண்டு பல்லாண்டு வாழவேண்டும்! இதுவே தமிழர்களின் விருப்பமும் பிரார்த்தனையும்.

# சமஷ்டி ஆட்சி பெற வழி

கொழும்பு, நவம்பர், 12உ.

இலங்கைத் தமிழரசுக் கட்சியின் மீதிருந்த தடையுத்தரவு நீக்கப்பட்ட பின்னர் முதன் முதலாக அதன் காரியக் கமிட்டி இவ்வாரம் யாழ்ப்பாணத்தில் கூடிச் சில முக்கியமான தீர்மானங்களை நிறைவேற்றியிருக்கிறது. சென்ற மே மாத வகுப்புக் கலகத்தின் போது வகுப்பு வெறியர்களின் தாக்குதலிலிருந்து தமிழ் மக்களின் உயிரையும் உடைமைகளையும் பாதுகாக்கும் முயற்சியில் அநேக சிங்களவர்கள் உயிர் நீத்தார்கள். மகத்தான உயிர்த் தியாகம் செய்த இவர்களுக்கு நன்றி கலந்த பாராட்டு தெரிவிக்கும் தீர்மானத்தைத் தமிழரசுக் கட்சி தனது முதலாவது தீர்மானமாக நிறைவேற்றி உயிர்நீத்தவர்களின் ஆன்மா சாந்தி பெற இரண்டு நிமிட நேரம் மௌனப் பிரார்த்தனையும் செய்தார்கள். பொதுஜனங்களின் உயிருக்கும் உடைமைகளுக்கும் பாதுகாப்பளிப்பது அரசாங்கத்தின் தவிர்க்க முடியாத கடமை. இக்கடமையை அரசாங்கம் செவ்வனே நிறைவேற்ற முடியாத காரணத்தினால் மக்களுக்குக் கஷ்டநஷ்டங்கள் ஏற்படுமாயின் அதற்குரிய நஷ்டஈடு கொடுப்பது அரசாங்கத்தின் கடமை. தமிழரசுக் கட்சியின் இரண்டாவது தீர்மானம் இதைச் சுட்டிக் காட்டி, கலகச் சேதங்களுக்கு அரசாங்கம் உடனே நஷ்டஈடு கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று வற்புறுத்தியது.

இவை எல்லாவற்றையும்விட நான்காவதாக நிறைவேற்றிய தீர்மானம்தான் முக்கியமானது. ஒன்றுக்கு மேற்பட்ட வகுப்பினர் வாழும் நாட்டுக்குச் சமஷ்டி ஆட்சி முறை சிறந்தது என்பதை யாரும் சொல்லத் தேவையில்லை. ஒரே வகுப்பினர் வாழும் நாடுகளில்கூட மாகாண சுயாட்சி வெற்றிகரமாகச் செயல்படுவதற்காக ஐக்கிய அமெரிக்கா, ஸ்விட்ஜர்லாந்து, கனடா, இந்தியா முதலான பல நாடுகளிலும் சமஷ்டி ஆட்சி முறை நல்ல முறையில் செயல்பட்டு வருகிறது. பலாத்காரத்தினாலோ சத்தியாக்கிரகத்தினாலோ ஒருவர் கொடுத்து இன்னொருவர் வாங்கிக் கொள்ளும் கடைச் சரக்கல்ல சமஷ்டி ஆட்சி முறை. எனவே இப்புதிய ஆட்சி முறையின் சிறப்பையும் தேவையையும் பெரும்பான்மை மக்களான சிங்களவர் நன்கு அறியும்படி பிரசாரம் செய்து அவர்களது ஒத்துழைப்பைப் பெற முயற்சி செய்ய வேண்டும். சமஷ்டி ஆட்சி முறையைப் பெற சத்தியாக்கிரகத்தை விட்டு வேறு சாத்வீக முறைகளைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று பலரும் அபிப்பிராயப்பட்டு வருகின்றனர். பிளவுபட்டிருக்கும் தமிழ் மக்களிடையில் ஒற்றுமையையும் கட்டுப்பாட்டையும் ஏற்படுத்துவதும் நிர்மாண வேலைகளில் தீவிரமாக ஈடுபட்டுத் தமிழ்ப் பிரதேசங்களை மின்னல் வேகத்துடன் அபிவிருத்தி செய்வதும் தமிழரசுக் கட்சியின் அவசர வேலையாயிருக்க வேண்டும்.

ஈழத்தின் தலைசிறந்த தமிழ்ப் பேரறிஞரும், சைவப் பெரியாரும் ஆகிய மகா வித்துவான் சி. கணேசையர் இவ்வாரம் தமது 80வது ஆண்டில் காலமாகியது இலங்கைக்கு மட்டும் அல்ல, தமிழ் கூறும் நல்லுலகு முழுவதற்குமே ஒரு மாபெரும் நஷ்டமாகும். தமிழ் உலகின் ஒளியாய்ச் சுடர்விட்டுப் பிரகாசித்த ஒரு மகா மேதையை நாம் இழந்து விட்டோம் என்று அவரது ஈமக்கிரியைகளின் போது முன்னாள் தபால் தந்தி இலாகா அமைச்சர் திரு க. நடேசபிள்ளை துக்கம் தோய்ந்த தொனியில் கூறியது தமிழ் மக்கள் ஒவ்வொருவரது ஆழ்ந்த துக்கத்தையும் பிரதிபலிப்பதாகும்.

தொல்காப்பியம், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் ஆகியவற்றுக்குக் குறிப்புரைகளும் விளக்கவுரைகளும் எழுதிப் பல அறிஞர்களது பாராட்டையும் பெற்ற மகா வித்துவான் கணேசையரிடம் பாடம் படித்த பண்டிதர்கள் பலர். ஈழத் தமிழ்ப் புலவர்களின் வரலாற்றையும் அவர் தொகுத்தெழுதித் தமிழன்னைக்கு அரும்பணியாற்றினார். தாயகமாகிய இந்தியாவும் சேயகமான ஈழமும் ஒருங்கே போற்றிவந்த ஒரு அறிஞர் மறைந்துவிட்டார். தமிழ்ப் பற்றுள்ள ஒவ்வொருவரும் அவரது ஆன்மா சாந்தியடைய இறைவனைப் பிரார்த்திப்போமாக. —ரஜனி.





அகில இந்திய ரேடியோ நிலையத்தார் நவம்பர் 2ந் தேதியிலிருந்து எட்டாம் தேதி வரையில் சங்கீத சம்மேளன விழா நடத்தினர். இந்த விழாவில் புகழ் பெற்ற சங்கீத வித்வான்கள் கலந்து கொண்டு இசை விருந்து அளித்துச் சிறப்பித்தனர். சென்னையில் ரசிகர்கள் முன்னிலையில் நடைபெற்ற கச்சேரிகளை இந்தப் பக்கங்களில் காணலாம்.

1. மதுரை மணி அய்யரின் கச்சேரி நடைபெறுகிறது. இந்தக் கச்சேரிக்கு ஹார்வுட் பிரபு தம்பதிகள் விஜயம் செய்து சிறப்பித்தார்கள். 2. ராதா ஜயலக்ஷ்மியின் இன்னிசை. 3. கே. வி. நாராயணசாமியின் இசை நிகழ்ச்சி. 4. செம்பை வைத்தியநாத பாகவதர் கானமழை பொழிகிறார். 5 சூரிய குமாரியின் லளித சங்கீதம் 6. பி. சுசீலாவின் மெல்லிசை விருந்து 7. துவாரம் வெங்கடசாமி நாயுடுவின் வயலின் இசை.





★ தீபாவளி மலரைப் பாராட்டி எண்ணற்ற நேயர்கள் தங்கள் இதயங்களைத் திறந்து எழுதியிருக்கிறார்கள். அந்தக் கடிதங்களில் சிலவற்றைக் கீழே பிரசுரித்திருக்கிறோம். பாராட்டு கூறிய நேயர்களுக்கெல்லாம் நமது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

—ஆசிரியர்.

# மணம் பரப்பும் தீபாவளி மலர்

தீபாவளி மலரில் மனத்தைக் கவர்ந்த அம்சம்: எம்பெருமான் உயர்திரு ஆசானுடைய திவ்ய திருவுருவை முகப்புப் படமாக வெளியிட்டிருப்பது.

பெரியவர்களுடைய பாத கமலங்கள் 'கல்கி' காரியாலயத்தில் பட்டது என்று படிக்கும்போது வாசக நேயர்கள் யாவருக்கும் ஸ்ரீ ஜகத்குருவைத் தத்தம் இல்லங்களிலேயே வரவேற்ற களிப்பு உண்டாகிறது. ஞான மலையின் பாத மலர்களைக் காணக் கலை வழிபடும் பாங்கு. இசைக் கலையின் முடிவு இறைவன் இணையடிகளைக் காட்டிக் கொடுப்பதே என்று சொல்வது போலிருக்கிறது. ஸ்ரீ முகத்தைப் பற்றி என்ன சொல்ல? அம்பிகை நாமங்களைச் சொல்லிச் சொல்லி அமுதமாய்ப் போன பாரிஜாத மலர் வாயிலிருந்து தெளிந்த தேன்துளி அல்லவா அது?

சென்னை
12-11-58

ஆர். கணபதி

★

கல்கி மலர் கண்டேன்; களிப்பு மிகக் கொண்டேன். அட்டைப்படமே வைத்த கண் வாங்காமல் பார்க்கும் வண்ணம் அற்புதமாக அமைந்துள்ளது. உள்ளேயோ கேட்கவே வேண்டாம். ஒவ்வொரு பக்கமும் உயர்ந்த முறையில் உள்ளது. இவ்வாண்டு மலர் மகாப் பிரமாதம்.

தென்காசி
10-11-58

கி ரா. திருமலையப்பன்

★

கல்கி தீபாவளி மலர் வெகு நேர்த்தியாக அமைந்திருக்கிறது. ஆசார்ய சுவாமிகள் ஸ்ரீமுகமும், தேர்ந்தெடுத்த ஆசிரியர்களின் கதைகளும் கட்டுரைகளும் இந்த 'மலரில்' சிறப்பாக அமைந்துள்ளன. 'இலக்கிய காட்சிகள்' மனத்தைக் கவர்ந்துவிட்டன.

மேட்டூர் அணை
12—11—58

லக்ஷ்மிரமணி

★

தீபாவளித் திருநாளில் 'கல்கி' மலர் கிடைத்தது. புத்தாடையின் பொலிவைப் போல் புதுத் தம்பதிகளின் தேனாறும் இன்மொழிபோல் இனித்தது! வண்ணப் படங்கள் உள்ளத்தை மகிழ வைத்தன. அழகான காகிதத்தில் உயர்ந்த இலக்கியம் சுடர்விட்டு ஒளிவீசியது.

குமரிமாவட்டம்
12-11-58

"வனமாலிகை"

★

மலரில் ஸ்ரீ மணியம் அவர்களின் 'தம்பி கலைமடல்' ஒரு கலைக்கடல். ஸ்ரீ ராஜம் அவர்களின் 'புத்தர் வாழ்க்கைக் காட்சி' சித்திரக்கு ஒரு காட்சி. மற்றும் ஸ்ரீலதாவின் 'ஆண்டாள்' ஸ்ரீவினுவின் 'மங்கையர்க்கரசி' கதைச் சித்திரங்கள் அற்புதம். ஸ்ரீ சாமா, ஸ்ரீ உமாபதி ஆகியோரின் ஹாஸ்யச் சித்திரங்கள் ஒவ்வொன்றும் அபாரம்.

திருச்சி
8-11-58

ரா. ஆறுமுகம்

★

கல்கி தீபாவளி மலரைப் பார்த்தேன். என் கையில் கிடைத்த மலரைக் கீழே வைக்க மனமில்லாமல் கையிலேயே வைத்து ஆசை தீரப் பார்த்துக் கொண்டே இருக்கிறேன்.

கடந்த ஆண்டு மலர்களைக் காட்டிலும் இவ்வாண்டின் மலர் நன்றாக உள்ளது.

உதகமண்டலம்
9-11-58

எஸ். ராமகிருஷ்ணன்

★

இவ்வருஷம் நீங்கள் உங்கள் வாசகர்களாகிய எங்களுக்கு அளித்த தீபாவளிப் பரிசு மிகவும் பாராட்டத் தக்கதும், விலை மதிக்க வொண்ணாததுமான அளவில் அமைந்து விட்டது. ஆம். அதுதான் தீபாவளி மலர்.

முழுதும் படித்து முடித்த பின்னரே புத்தகத்தைக் கீழே வைத்தேன். மலரில் எந்த அம்சம் சிறப்பாக இருக்கிறது என்று கண்டு பிடிக்க விரும்பினேன். அது, "கற்கண்டில் எந்தப்பக்கம் இனிப்பாக இருக்கிறது?" என்ற ஆராய்ச்சியைப் போல் முடிந்துவிட்டது.

சென்னை - 5
11-11-58

க. மாரியப்பன்

★

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளின் ஸ்ரீமுகம் பிரேம் போட்டுப் பூஜை அறையில் வைக்கக் கூடியது. தலைவர் ஸ்ரீ ராஜாஜி அவர்களின் 'மோர்த் துளி' மலருக்குத் தனிச் சிறப்பைக் கொடுக்கிறது. திரு பாஸ்கரத் தொண்டைமானின் உள்ளம் உருகும் கட்டுரை வாராவாரம் வாராதா என ஏங்குகிறேன்.

தாரமங்கலம், சேலம்
9-11-58

ஆ. நடராஜன்

★

கல்கி தீபாவளி மலர் ஓர் அற்புத வாசனை மலர். புத்துயிர் பெற்றுத் தோன்றும் சித்திர ஹாரங்களில் மங்கையர்க்கரசி கதைச் சித்திரம், ஆசாரிய சுவாமிகளின் முகப்புப் படம், ஆண்டாள் கதைச் சித்திரம் தம்பி கலைமடல் எல்லாம் அற்புதமாக ஜ்வலிக்கின்றன.

ஆசார்ய ஸ்வாமிகளின பொன்மொழிகள் கல்வெட்டுக்களில் வரவேண்டிய மொழிகள்.

மைசூர்
10-11-58

ராஜா. ஹரிணி

## 57

திருவள்ளுவர் காலத்திலும் அதற்கு முந்தியும் நம் நாட்டில் துறவு நிலையை மேற்கொண்டு தனியாகவும் மடங்களிலும் பெருங்கணக்கில் மக்கள் தவம் நடத்தி வந்தார்கள். ஆனபடியால் துறவு நிலையைப் பற்றியும் தவத்தைப் பற்றியும் முனிவர் பல குறள்கள் பாடியிருக்கிறார்.

தவம் என்றால் என்ன, தவத்தின் உண்மைப் பொருள் என்ன என்பதை ஒரு குறளில் சொல்லுகிறார் :

**உற்றநோய் நோன்றல்**
**உயிர்க்குஉறுகண் செய்யாமை**
**அற்றே தவத்திற்கு**
**உரு**

வந்த கஷ்டத்தைத் தைரியம் இழக்காமல் பொறுத்தல். உணர்ச்சியும் உயிரும் கொண்ட பிற பிராணிகளுக்குத் துன்பம் இழைக்காமல் இருத்தல்,- இதுவே தவம் என்கிறார் முனிவர்.

தம் உடலைப் பலவிதத்தில் துன்புறுத்திச் செய்யும் தவங்களில் பயனில்லை என்று இந்தக் குறளில் சொல்லாமல் சொல்லிவிட்டார். சமயவாதங்களில் பிரவேசிக்காமல் ஜபம் நிரச் சொல்லி விட்டார். "அற்றே தவத்திற்கு உரு" வேறு அல்ல 'உற்ற நோய் நோன்றல்'. நீயாக வேண்டுமென்று செய்து கொண்ட நோயல்ல. "நான் தீரன், பொறுப்பேன்" என்று காட்டிக் கொள்வதற்காக நீயாக உன் உடலை வருத்துவது தவமல்ல. உற்ற நோயைப் பொறுத்தலே தவம். மேலுலகம் பெறுவேன் என்று தானே தன் உடலுக்குத் துன்பம் செய்வது தவமல்ல என்பதை ஆரவாரமில்லாமல் வள்ளுவர் இந்தக் குறளில் சொல்லி விட்டார்.

பிற உயிர்களுக்கு எந்த உயிருக்கும், உறுகண் (துன்பம்) செய்யாமையே தவம். உயிர் வாழ்க்கையில் இது எளிதல்ல. பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாமல் தன் வாழ்க்கையை நடத்துவதே தவமாகும்.

* * *

துறவு பூணுவது எல்லாராலும் முடியாத காரியம். அதற்குத் தகுதி பெறுவது முன் செய்த நற் கருமங்களின் பயன். தகுதி பெற்றவர் சிலரே. ஆகையால் எல்லாரும் அதில் இறங்குவது நல்லதல்ல. தன் சக்தியைச் சோதித்து நன்றாக யோசித்தே ஒருவன் துறவு மார்க்கத்தில் இறங்க வேண்டும். தன்னுடைய சக்திக்கு மீறிய காரியத்தில் ஒருவன் இறங்கலாகாது.

**தவமும் தவமுடையார்க்கு**
**ஆகும் ; அவம்அதனை**
**அஃதுஇலார் மேற்கொள்**
**வது.**

தன் சக்தியின் வரம்பை அறியாமல் அல்லது புகழுக்கு ஆசைப்பட்டுத் துறவு பூண்டால் 'அவம்,' அதாவது பயனின்மை. 'தவமுடையார்' என்றால் முன் ஜன்மத்தில் நற்கருமங்கள் செய்து அதன் பயனாக ஆற்றல் பெற்றவர்களும் இந்தப் பிறப்பில் நல்வினைகள் செய்து அதன் வழி ஆன்ம சக்தி அடைந்தவர்களும் 'தவம் உடையார்' என்பதில் நல்வினைகளின் பயனைப் பூரணமாக அடைந்து ஆற்றலை ஒரு உடைமையாகப் பெற்றவர் என்கிற கருத்து அடங்கியிருக்கிறது.

## "அல்டோபெக்ஸ்"

ஹோமியோபதி வைத்திய முறையில் 50 வருடங்களாகப் புகழ்பெற்ற "அல்பால்பா டானிக்" உடன் வைட்டமின் B-Complex சேர்ந்த ஒரு சக்தி வாய்ந்த டானிக் பொதுவான பலவீனத்துக்கும், கடுமையான வியாதிகள், பிரசவம், இவைகளுக்குப் பிறகும், வளரும் குழந்தைகளுக்கும் மிகவும் உபயோகமுள்ளது.

சோர்வை நீக்கி அதி சீக்கிரத்தில் புது சக்தியையும் ஊக்கத்தையும் அளிக்கிறது. பாலர் முதல் விருத்தர் வரை ஆண், பெண் இரு பாலரும் உபயோகிக்கலாம்.

4 அவுன்ஸ் பாட்டில் ரூ. 3-50 — 16 அவுன்ஸ் பாட்டில் ரூ. 12

### இந்தியன் ஹோமியோபதி இன்ஸ்டிடியூட்

ஹோமியோ ஹவுஸ் — கும்பகோணம்

சென்னையில்: 6, ஸ்டிரிஞ்சர் தெரு, ஜி. டி.

(ஸ்டாக்கிஸ்டுகள் இல்லாத ஊர்களில் ஸ்டாக்கிஸ்டுகள் தேவை)

---



# இதோ! பாமாலிவ்–

## இந்தியாவின் மிகப்பிரசித்தியுற்ற அழகுத் தைலங்களினுல் செய்தது

### உங்கள் வனப்பைக் காக்க

இந்த இருகுண அழகு முறையை இன்றுமுதல் கையாளுக!

1. சுத்தம் பெறுக பாமாலிவ்வின் நிறைந்த நுரையினுல். அது சருமத்தை அணைத்து அழுக்கை இருந்த இடம் தெரியாமல் அகற்றுகிறது.

2. அழகு பெறுக பாமாலிவ்வில் உள்ள சுத்தமான, மணங் கமழும் எண்ணெய்களைத் தேய்ப்பதன்மூலம், பாமாலிவ் உங்கள் சருமத்தை மிருதுவாக, வழ வழப்பாக, இளமை ததும்ப வைக்க உதவட்டும்.




# பாமாலிவ்

பியூடி சோப்

புதியது! நீடிக்கும், புஷ்பம்போன்ற புதுமை மணம்!

PLO/6/135

---

## தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிட்.

★

## ஓ. கே. வனஸ்பதி

தயாரிப்பாளர்கள்

9-11-58ந் தேதி கல்கி இதழில் அறிவித்திருந்த வெகுமதித் திட்டத்தைத் தவிர்க்க முடியாத சில காரணங்களால் ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறார்கள். இந்த எதிர்பாராத நிலைமைக்கு வருந்துகிறார்கள்.

# வட்ட மேஜை

## வள்ளுவர் வாசகம்

ராஜாஜி அவர்கள் 'வள்ளுவர் வாசக'த்தில் புலால் உணவைப்பற்றி மிகவும் அழகாகப் படிப்பவர்கள் நெஞ்சைத் தொடும் வண்ணம் எழுதியிருப்பதைப் படித்துப் பார்த்த சில நண்பர்கள் மனம் மாறி மாமிச உணவுப் பழக்கமாகிய கொடிய வழக்கத்தை விட்டு விட்டனர் என்ற புனிதமான செய்தியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

உணவுக்காக அநியாயமாகக் கொல்லப்படும் உயிரினங்களுக்குத் தமிழ் மொழியைப் படித்துப் புரிந்து கொள்ளும் ஆற்றலை மட்டும் ஈசன் அளித்திருப்பானாகில் நவம்பர் 2-ந்தேதி "வள்ளுவர் வாசக"த்தின் அத்தியாயத்தைப் படித்துப் பார்த்து ஆனந்தக் கூத்தாடி, அப்புனிதவாசகத்தை எழுதிய ராஜாஜி அவர்களை அவ்வுயிரினங்கள் தங்கள் இருதயக் கோயிலில் பிரதிஷ்டை செய்து வணங்கி வழிபடும்.

சேலம்
1-11-58 ஆர். வள்ளியண்ணன்

## வழி பிறக்குமா?

நான் ஒரு சென்னை சர்க்கார் கதர் விற்பனை ஏஜண்ட். அதுவும் கிராமத்தில் நிறுவப்பட்டது எனது கடை. சுற்றுப்புறம் மிகவும் செழிப்பான இடம். தனவந்தர்களிடமிருந்தும் நூல் நூற்றுக் கிடைக்கிறது. நூற்றே ஜீவனம் செய்ய வேண்டும் என்பவர்களிடமிருந்தும் நூல் கிடைக்கிறது. அவர்கள் பல ராட்டைகளை வேண்டுகிறார்கள். பலர் ஒரு நூற்பு சங்கம் ஸ்தாபிக்க விரும்புகிறார்கள். ஆனால் நூலை வாங்கி, பஞ்சு விநியோகம் செய்ய எங்களுக்கு எந்தவிதமான அதிகாரமோ, வசதியோ கிடைக்கவில்லை. பலமுறை உரியவர்களுக்கு எழுதிச் சரியான பதில் இல்லை. நூற்ற நூலை விற்க இயலாது பலர் விழிக்கிறார்கள். வாங்கிய நூலை என்ன செய்வதென்று நாங்கள் விழிக்கிறோம். தினமும் பத்திரிகைகளில் 'கதர் பிரசாரம்' நடக்கிறது. 'உற்பத்தி ஸ்தானத்திலும் விற்பனை ஸ்தானத்திலும்' எங்களுக்கு இன்னும் எவ்வித வழியும் தோன்றவில்லை. இவ்வளவுக்கும் கதரைக் கடனுக்குக் கொடுத்து விற்பனை செய்கிறோம்! இதற்கு வழி பிறக்குமா அல்லது கடையை மூடிவிட வேண்டுமா?

விக்கிரவாண்டி
30-10-58 எஸ். திருநாவுக்கரசு

## "கையிலே மலர்ந்த ஒரு கலை"

கல்கி 2-11-58 இதழில் பிரசுரிக்கப்பட்டிருக்கும் 'கையிலே மலர்ந்த ஒரு கலை' ஒரு மணம் வீசும் கட்டுரையாக விளங்குகிறது.

மகாத்மா காந்தி அருளிய ஒரு உயரிய தத்துவத்தை மிக எளிய நடையில், ரஸமான முறையில், தகுந்த ஓர் உபமானத்துடன், சுவாரஸ்யமாக விளக்கியிருப்பது போற்றத்தக்கது. அதில் குறிப்பிடும் 'கையிலே மலர்ந்த கலை'யை நம்மில் பலர் மறக்க முயலுகிறோம்; பலர் அந்தக் கலையை மதிக்காமல் வெறுக்கிறோம்; பலர் அதைப் பழி சொல்கிறோம். ஆயினும் அது வாடா மலராக இருந்து காந்திஜி அன்று அருளியது போல், வாடிய ஏழை கிராம மக்களுக்குக் காமதேனுவாகத் திகழ்ந்து வருகிறது கைராட்டை.

ஆயினும் நம்மிடையே இதைப் பற்றிப் பரிகாசமாகவும், தாங்கள்தான் பொருளாதாரத்தில் கரைகண்டவர்கள் போல் கண்டித்தும் பேசுகிறவர்கள் இருக்கிறார்கள். இவ்விரண்டு இனத்தாருக்குமிடையே கைராட்டையால் என்ன பிரயோசனம் என்று சந்தேகப்படுகிறவர்களும் இருக்கிறார்கள்.

இவர்கள் ஒவ்வொருவரும் "கையிலே மலர்ந்த ஒரு கலை" என்ற கட்டுரையைப் படித்தால் மூடியுள்ள அவர்கள் உள்ளம் மலரும் என்பதில் சந்தேகமில்லை.

சென்னை
2-11-58 ரா. பார்த்தசாரதி

## சொல்லும், செயலும்

நவம்பர் 2-ந் தேதி 'கல்கி' இதழில் "மந்திரியும் ஹிந்தியும்" என்ற உப தலையங்கத்தைப் படித்தோம்.

காங்கிரஸ் மந்திரிகளின் சொல் வேறு, செயல் வேறாக இருப்பதைத் தகுந்த உதாரணத்துடன் காட்டியிருக்கிறீர்கள்.

மேலும், திரு சி. சுப்பிரமணியம் அவர்கள் 24-10-58 அன்று ஹைதராபாத் பாரதி சங்கத்தின் வரவேற்பில் பேசும்பொழுது, "சில பெரிய மனிதர்கள் ஆங்கிலம் இல்லாவிடில் நாம் வாழவே முடியாது என்று சொல்லுகிறார்கள். இது தவறு" என்று பேசினார். ஆங்கிலம் இல்லாவிடில் நாம் வாழவே முடியாது என்று திரு ராஜாஜி அவர்கள் சொன்னதில்லை. ஆனால், ஆங்கிலம் நம் நாட்டை விட்டு அகன்று விட்டால் நாம் கிணற்றுத் தவளைகளைப் போல்தான் வாழ முடியும் என்று சொன்னார்கள்.

சொல்வேறு, செயல்வேறாகச் செய்வதோடல்லாமல் மந்திரிகள் மற்றவர்களின் சொல்லை மாற்றிச் சொல்லவும் இப்பொழுது ஆரம்பித்து விட்டனர்.

ஹைதராபாத் எஸ். கிருஷ்ணமூர்த்தி
எஸ். சம்பத்
31—10—58 என். ராமமூர்த்தி

## நிலச் சீர்திருத்தம்

உணவு நெருக்கடி மக்களை முன்பே வாட்ட ஆரம்பித்து விட்ட போதிலும், அதற்கான காரணத்தை ஆளும் கட்சியினர் இப்பொழுதுதான் உணர்ந்து வருகிறார்கள் என்பதைச் சமீபகால நிகழ்ச்சிகள் தெரிவிக்கின்றன. தஞ்சை ஜில்லாவில் அறுபது நாற்பது வாரம் என்ற சட்டம் அமுலானதிலிருந்து உணவு உற்பத்தியில் இரண்டு நேர் மாறான விளைவுகள் தோன்றியிருக்கின்றன. நல்ல முறையில் சாகுபடி செய்து வந்தவர்கள் அதிகப்படியான வாரத்தை (லாபத்தை)ப் பெற்றதன் மூலம் இரண்டு மூன்று சாகுபடிகளில் போதுமான பொருளைச் சேர்த்துச் சிறுகச் சிறுகத் தங்களுக்கென்று நிலங்களைக்

கிரயம் செய்து வாங்கியிருக்கிறார்கள். அதிகமான நிலங்களைக் குத்தகைக்கு வைத்திருந்தவர்கள் ஒரு நிரந்தர மிராசுதார்களாகவே ஆகியிருக்கிறார்கள். குடும்பத்திலுள்ள ஒவ்வொரு நபரின் பெயராலும் ஒவ்வொரு இடத்திலும் குத்தகை நிலம் வைத்திருக்கிறார்கள். இவர்கள் நிலத்தில் இறங்கி வேலை செய்பவர்களல்ல. சகல வேலைகளையும் கூலி ஆட்களை அமைத்தே வெற்றிகரமாக லாபத்தைப் பெறுபவர்கள். ஆனால் சட்டத்தின் முன் இவர்களெல்லாம் அதிக வாரம் பெற உரிமை பெற்ற சாகுபடியாளர்களே. சிறு நிலச் சுவான்தாரர்கள் கூட இவர்களிடமுள்ள குத்தகை நிலங்களைச் சொந்தச் சாகுபடிக்கு மீட்டுக்கொள்ள முடியாதபடி குத்தகையைத் தங்கள் குடும்பத்திலுள்ள பலரது பெயர்களில் நாளாவட்டத்தில் மாற்றிக் கொண்டு விட்டார்கள்! உணவு நெருக்கடி என்ற சிந்தனையில் இவர்களால் உற்பத்தி பாதிக்கப்பட்டதா என்று உறுதியாகச் சொல்ல முடியாது. ஆனால் மற்றொரு வகையினர் இருக்கிறார்களே அவர்கள் மிகவும் பாதகமானவர்கள். அதிக வாரமும், சாசுவதமான குத்தகையும் பெற்றுவிட்ட காரணத்தால், எப்பொழுதுமுள்ள வருமானமே போதுமானதாக இருக்கட்டுமென்ற முறையில் சாகுபடியில் போதுமான கவனமோ ஆர்வமோ செலுத்தாது நிலத்தையும் கெடுத்து நடுத்தர நிலவுடைமையாளர் வயிற்றிலும் மண்ணைப் போட்டு நாட்டையும் நெருக்கடிக்குள்ளாக்குகிறார்கள். ஒரு காலத்தில் நிலமே தனக்கென்றுதான் ஆகப் போகிறதென்ற முடிவில் மமதையுடன் நிலக்காரரையும் வம்புக்கு இழுக்கிறார்கள். அறுவடை சமயத்தில், ஏக்கருக்கு நாற்பது கலம் விளையும் போலிருந்தால் ''முப்பது கலமே விளையாது போல் இருக்கிறது. உனக்கு வாரம் பன்னிரண்டு கலம் தான் அளப்பேன். வேண்டுமானால் நீயே இருந்து அறுவடை செய்து பார்'' என்று சிறு நிலக்காரரைத் திண்டாட்டத்தில் விடுவார். இவ்வருட விளைவில் மறுவருடம் பாதிதான் இருக்கும். சாதாரணமாக ஏக்கருக்கு நாற்பத்தைந்து கலமாவது விளைவிப்பவர்களுக்குத் தான் புதுச் சட்டம் பொருந்தும் என்ற நியதியில்லாதவரை இவர்கள் நாட்டையும், நிலக்காரர்களையும் ஆபத்தில் கொண்டுவிடுவார்கள்.

*மாயூரம்*
*1—11—58* — **ஏ. அப்துல் றஹீம்**

## பிரதிக்ஞை

“முன்னால் போகிறவன் இடறி விழுந்தால் பின்னால் போகிறவனுக்கு விளக்கு பிடித்த மாதிரி'' என்பதைப் ‘பாகிஸ்தான் கற்பிக்கும் பாடம்' என்ற தலையங்கத்தில், நம் அரசாங்கத்தை நடத்துகிறவர்களுக்குப் புரிகிற விதத்தில் தெளிவாக எழுதியிருப்பதை மெச்சுகிறேன். நம் தலைவர்கள் முக்கியமாக, தமிழ் நாட்டுத் தலைவர்கள், மேற்படி தலையங்கம் எடுத்துக் காட்டும் தீய சக்திகளையெல்லாம் ஒதுக்கி, மக்கள் சுபிட்சமாக வாழ்வதற்கு வழி வகுக்க இன்றிலிருந்தே பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளவேண்டும்.

*சென்னை-6*
*17-10-58* — **கி. நாகராசன்**

# ராஜாஜியின் 'கைவிளக்கு'

நம் நாட்டில் இன்னும் பகவத்கீதை, உபநிஷதம் முதலிய வேதாந்தப் புஸ்தகங்கள் என்றால் அறுபது வயதுக்கு மேல், தலை நரைத்து, பல் போய், முதுகு கூன் விழுந்தவர்கள்தான் படிக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

உபநிஷதங்கள் பெரும்பாலும் ரிஷிகள், தங்களிடம் குருகுல வாசம் செய்ய வந்த இளைஞர்களுக்கு உபதேசிக்கப்பட்டதாகும்.

யுத்தசன்னத்தனாகக் குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் காண்டீபத்தை டங்காரம் செய்து கொண்டு வந்த வீர அர்ஜுனன், எதிர் வரிசையில் தனக்கு மிக நெருங்கிய உற்றார் உறவினர் நிற்பதைப் பார்த்து, "அவர்களை வெல்லாமா கொல்ல வேண்டும்; அவர்களை அழித்து விட்டு நான் அடையும் பயன்தான் என்ன?" என்று உள்ளம் சோர்ந்து, காண்டீபத்தைக் கீழே போட்டபோது, கண்ணன் அவன் சோர்வை நீக்கி, கடமையை உணர்த்தி, கீழே போட்ட காண்டீபத்தைக் கையில் எடுக்கச் செய்து வீரப் போர் புரியவைத்தான். இப்படி அர்ஜுனனை மகத்தான செயலில் ஈடுபடுத்திய உபதேசம்தான் கீதை!

ஆகவே நமது வேதாந்த நூல்கள் செயலிழந்தவர்கள், செய்கை ஓய்ந்தவர்கள் படிக்க வேண்டிய நூல்கள் அல்ல. இளமையின் மிடுக்கும், செயலில் இறங்க வேண்டும் என்ற துடிப்பும் உள்ளவர்கள் படிக்க வேண்டிய நூல்கள். அப்படிப்பட்ட இளைஞர்களின் உள்ளத்தில் எழும் சந்தேகங்களை நீக்கி, எவ்விஷயத்தையும் எப்படி நோக்க வேண்டும் என்ற அறிவு புகட்டி, உள்ளத்துக்கு ஆனந்தமும் இறைவன் அருளையும் பெற்றுத் தரும் நூல்களாகும்.

இதனால்தான் நம் தாய்த் திருநாட்டின் சுதந்திரத்தைப் பற்றியும் பாரத மக்களின் உயர்வாழ்வைப் பற்றியும் அல்லும் பகலும் சிந்தித்துத் தொண்டு புரிந்து வந்த தேச பக்த மகான்களாகிய திலகர் காந்தி போன்றவர்கள் தங்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் கொடுக்கும் நூல்களாகப் பகவத் கீதையை ஓயாமல் படித்து வந்தனர், விளக்கவுரைகள் அளித்து வந்தனர். லோகமான்ய திலகரின் கீதா ரகசியம் மிகப் பிரசித்தி பெற்ற நூலாகும்.

அப்படியே நம் நாட்களில் கண்ணன் காட்டிய வழியை விட்டுச் சற்றும் பிறழாமல் வாழ்ந்து வருபவர் ராஜாஜி. இந்த எண்பது வயதிலும், தமது கடமை முடிந்தது என்று சும்மா இருந்து விடாமல், தாய்த் திருநாட்டுக்குத் தமது அறவுரைகளைக் கூறி வருகிறார்.

நாட்டு மக்களின் நலனில் அக்கறை கொண்டு ஓயாமல் தமது எண்ணங்களை நாட்டுக்கும் உலகத்துக்கும் பயன் கருதாப் பணி புரிந்து வருகிறார்.

அப்படிப்பட்ட மகான் தமிழ் நாட்டு மக்களுக்கும் முக்கியமாகப் பயன் அளிக்கக்கூடிய தீபாவளிப் பரிசாக ஒரு கைவிளக்கு வழங்கியிருக்கிறார்.

கண்ணன் அருளிய பகவத்கீதை யென்னும் பெரும் சுரங்கத்தில் இறங்கிப் பொக்கிஷங்களைத் தேடி எடுத்துப் பயசுடைய ஒரு அருமையான கை விளக்கைத் தீபாவளி நன்னாளில் அளித்திருக்கிறார்.




பகவத்கீதை என்பது பதினெட்டு அத்தியாயங்கள். அதில் ஒவ்வொரு சுலோகத்தையும் எளிய தமிழில் மொழிபெயர்த்துத் தந்திருக்கிறார்.

உதாரணத்துக்கு ஒரு சுலோகத்தினுடைய மொழிபெயர்ப்பைக் கீழே தருகிறோம்.

"பாரத புத்திரனே! பாமரர்கள் பற்றுவைத்து எவ்வாறு தத்தம்தொழில்களில் ஈடுபடுகிறார்களோ அவ்வாறே அறிஞன் சமுதாய நன்மைக்காகப் பற்றையொழித்து எல்லாக் காரியங்களையும் செய்து கொண்டு போவான்."

எவ்வளவு அழகாக இருக்கிறது! பல இடங்களில் விசேஷ விளக்கங்களை ராஜாஜி தமக்கே உரிய முறையில் தந்திருக்கிறார். ஆழ்வார்கள், குறளாசிரியர் முதலியோரின் பாக்களை ஆங்காங்கு மேற்கோள் காட்டி விளக்கியிருப்பது அழகுக்கு அழகு செய்தாற் போலிருக்கிறது.

இந்தக் கைவிளக்கு, வடமொழி முற்றும் தெரியாதவர்கள் கூட, பகவத்கீதையின் சாரத்தை எளிதில் புரிந்து கொள்வதற்கு மிகவும் உதவுகிறது. ஓரளவு வடமொழி தெரிந்தவர்கள், இந்தப் புஸ்தகத்தின் உதவியால் மூலத்தைப் படித்து விளங்கிக் கொள்ளலாம்.

பகவத்கீதையைப் பன்முறை படித்தவர்களுக்கும் ராஜாஜியின் விசேஷ விளக்கங்கள் புதுக் கருத்துக்களைக் காட்டி மகிழ்விக்கும்.

கீதையை முன்பே படித்தவர்களுக்கும், படியாதவர்களுக்கும் பயன்படக் கூடிய இந்த அரிய நூல் மிக உயரிய தாளில் பெரிய எழுத்தில் நன்றாக அச்சிடப்பட்டிருக்கிறது.

பிரசுரம்: சம்பா நூலகம், 59, பிராட்வே சென்னை—1; விலை: ரூ. 2—50.

# தமிழ்க் கடல் ராய. சொ.

தமிழ் நாடு நன்றியுள்ள நாடு என்பதைச் சென்ற மாதம் 30ம் தேதி மீண்டும் ஒருமுறை நிரூபித்து விட்டது.

அன்று காரைக்குடியில் தமிழறிஞர் ராய. சொ. அவர்களின் சஷ்டியப்த பூர்த்தி மணி விழா வெகு சிறப்பாக நடைபெற்றது. அந்த விழாவில் ரூபாய் இருபத்தையாயிரம் கொண்ட பண முடிப்பு ஒன்று திரு ராய. சொ. அவர்களுக்கு நல்கி, தமிழ் மக்கள் நன்றியுள்ளவர்கள் என்பதைக் காண்பித்துக் கொண்டு விட்டார்கள்.

செட்டி நாட்டுப் பக்கங்களில் ராய. சொ. என்றால் அழுத பிள்ளை வாய் மூடும். அவரிடம் அவ்வளவு பயமும், பக்தியும் செட்டி நாட்டு மக்களுக்கு உண்டு. பணக்காரர்கள் முதல் பரம ஏழை வரையில் ராய. சொ. என்று சொல்லி விட்டால் மிகவும் அடக்க ஒடுக்கமாகி விடுவார்கள்.



இப்படிப்பட்ட பெரும் செல்வாக்கு ராய. சொ. அவர்களுக்கு எவை தேடித் தந்தன, தெரியுமா?

1. அவர்களது உறுதியான தேச பக்தி.
2. தமிழ்ப் பற்று.
3. ஒழுக்கம் தவறா சீரிய வாழ்வு.

தனவைசிய சமூகம், "தேச பக்தி என்றால் விசை எவ்வளவு?" என்று கேட்டுக் கொண்டிருந்த நாட்களில் ராய. சொ. காங்கிரஸில் ஈடுபட்டார். சமூக சீர்திருத்தப் பணிகளில் இறங்கினார். வ. வே. சு. ஐயர், சுப்பிரமண்ய பாரதி, சுப்பிரமண்ய சிவா முதலிய பெரும் தேசபக்தர்களுடைய தொடர்பு பெற்றார். தீவிர தேசபக்திப் பிரசாரம் செய்தார்: சிறை சென்றார். செட்டி நாட்டில் பெரும் கிளர்ச்சியை உண்டு பண்ணி விட்டார்.

அவருடைய எழுத்துவன்மையைப் பற்றி என்னவென்பது! செட்டி நாட்டிலிருந்து 'ஊழியன்' என்ற பத்திரிகையின் ஆசிரியராக இருபது வருஷ காலம் பணியாற்றி யிருக்கிறார். 'ஊழியனி'ல் வரும் தலையங்கங்கள் தேச பக்தி கொப்புளிக்கும். அதைப் படிப்பவர்கள் தேசபக்தர்களாகாமல் இருக்க முடியாது.

தேசபக்திக்கு அடுத்தாற்போல், ராய. சொ. வின் உள்ளத்தைப் பெரிதும் ஆட்கொண்டது தமிழ் இலக்கியம். கம்பராமாயணத்திலும் மற்ற இலக்கியங்களிலும் அவருக்குள்ள ஈடுபாட்டை நேரில் அவருடன் அளவளாவியவர்களே அறிவார்கள். சிறிய பிரபந்த நூல்களிலும் சரி, பெரும் காப்பிய நூல்களிலும் சரி ராய. சொ. வுக்கு நல்ல ஈடுபாடு உண்டு. இனிய தமிழ்ச்சுவை எங்கு கண்டாலும், தாமும் அனுபவித்து, பிறரையும் அனுபவிக்கச் செய்ய வேண்டும் என்ற பெரும் நோக்குடையவர். அதனாலே அவரிடம் இலக்கியப் பாடம் கேட்க வேண்டும் என்று இளைஞர்களும் பெரியவர்களும் ஆவலுடன் குழுமுவதைப் பார்க்கலாம்.

இவை எல்லாவற்றையும் விட, சமய இலக்கியங்களில் அவருடைய ஈடுபாடு சொல்லி முடியாது. சைவ வைணவ பேதமின்றி ஆழ்வாராதிகளின் பாடல்களிலும் சமய குரவர்களின் பாடல்களிலும் மெய்யுருகி நிற்பார். இவை இரண்டிலுமே ஆழ்ந்த ஆராய்ச்சிப் புலமையுண்டு. செட்டி நாட்டுப் பக்கங்களில், யாருக்காகிலும் இந்த நூல்களில் ஏதாகிலும் சந்தேகம் வந்தால், "ராய. சொ. என்ன அபிப்பிராயப் படுகிறார்?" என்றுதான் கேட்பார்கள்.

அவரது தமிழ்ப் புலமையின் பயனாகப் பல நூல்கள் வெளிவந்திருக்கின்றன. இன்னும் அவர் தமிழகத்துக்கு வழங்க வேண்டிய நூல்கள் பல இருக்கின்றன!

சென்ற 30-ம் தேதி மணி விழாவில் அவருக்குத் **தமிழ்க் கடல்** என்ற பட்டமளித்துக் கௌரவித்திருக்கிறார்கள்.

சிலருக்குப் பட்டம் கொஞ்சங்கூடப் பொருந்தாது. ஆனால் ராய. சொ. அவர்களுக்கு இப்பட்டம் நூற்றுக்கு நூற்றுப் பத்து பங்கு பொருந்தும்.

ராய. சொ. அவர்கள் தமிழ் நாட்டுக்குத் தமிழ் இலக்கிய நூல்கள் என்னும் நன்முத்துக்களை அளித்துக் கொண்டு, அந்தப் பட்டத்திலுள்ள தமிழ் உள்ளளவும், கடலுள்ளளவும் வாழ வேண்டும் என்று இறைவனை இறைஞ்சுகிறோம்!

# பாரதீய பவனத்தின் வெளியீடுகள்







பம்பாயில் பாரதீய வித்யா பவனம் என்றொரு ஸ்தாபனம், பாரத நாட்டின் பழம் பெரு பண்பாட்டைப் பேணிப் பாதுகாக்கும் நோக்குடன் சிறந்த பணியாற்றி வருகிறது.

வேதகால ரிஷிகளின் பண்பை நிலை நாட்டும் வகையில் பவனத்தார் ஒரு வித்யாலயம் நடத்தி வருகிறார்கள். ஆங்கிலத்திலும் இந்தியிலும் பத்திரிகை நடத்தி வருகிறார்கள். நல்ல புத்தகங்களைச் சொற்ப விலை வைத்து வெளியிட்டு வருகிறார்கள்.

ராஜாஜி 'கல்கி'யில் எழுதிய வியாசர் விருந்தும், சக்கரவர்த்தித் திருமகனும், ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு, பாரதீயபவனத்தார் புத்தகமாக வெளியிட்டிருக்கிறார்கள். இதுவரை ராஜாஜியின் மகா பாரதம் ஒரு லட்சம் பிரதிகள் விற்றிருக்கிறார்கள்.

ராமாயணமும் இதுவரை ஐம்பதினாயிரம் பிரதிகள் வெளியிட்டு விற்றிருக்கிறார்கள்.

இதை ஒரு பெரு விழாவாகச் சென்னை ரஸிகரஞ்சனி சபை மண்டபத்தில் பாரதீய வித்யா பவனத்தார் தீபாவளிக்கு முதல் நாள் மாலை கொண்டாடினார்கள்.

இவ் விழாவுக்குச் சென்னை கவர்னர் ஸ்ரீ விஷ்ணுராம் மேதி தலைமை வகித்துச் சிறப்பித்தார்.

இந்தப் பவனத்தின் உயிர் நாடியாக இருந்து பணியாற்றி வரும் குலபதி திரு கே.எம். முன்ஷி பவனத்தின் தொண்டுகளைப் பற்றிப் பேசினார்.

இந்த பவனத்தின் முக்கியஸ்தர்களில் ஒருவரான திரு திவேகர் நன்றி செலுத்தினார். இவ்விழாவில் ராஜாஜி கலந்து கொள்வதாக இருந்தது. ராஜாஜி சில நாட்களாக உடல் நலக் குறைவுற்றிருந்ததால் வர இயலவில்லை. அவர் வாழ்த்துரை ஒன்று அனுப்பியிருந்தார்.

மொத்தத்தில் தீபாவளிக்கு முதல் நாள் வெகு சிறப்பாக இவ்வைபவம் சென்னையில் நடைபெற்றது.

கல்கியில் வந்த இரு நூல்கள் உலகம் முழுவதும் பரவி ஒரு லட்சத்துக்கு மேற்பட்ட பிரதிகள் விற்பனையாகியிருக்கின்றன என்பது தமிழ் மக்கள் பெருமைப்பட வேண்டிய விஷயமல்லவா?

கல்கியில் இவையிரண்டும் வாராவாரம் வந்தபோதே பல லட்சக்கணக்கான மக்கள் படித்தார்கள்.

பின்னர் வியாசர் விருந்து புத்தகவடிவில் பல பதிப்புகள் வெளிவந்து விட்டன. சமீபத்தில் எக்ஸ்பிரஸ் கூட்டுப் பத்திரிகைகளின் அதிபர் திரு கோயங்கா தமிழில் வியாசர் விருந்தை ஒரு லட்சம் பிரதிகள் அச்சடித்து ஒரு சில நாட்களில் விற்றுக் காண்பித்தார்.

பாரத நாட்டுப் பண்பாடு நாகரிகம் எல்லாம் இந்த மகாபாரதம், ராமாயணம் ஆகிய இரண்டு நூல்களில்தான் அடங்கியிருக்கின்றன. இதைப் பாரத மக்கள் மட்டுமல்ல, உலக மக்களும் அறியத் தொடங்கி விட்டனர்.

சென்னையில் நடந்த பாரதீய வித்யாபவன் வெளியீட்டு வைபவக் காட்சிகளை மேலேயிருக்கும் படத்தில் காணலாம்.

# கனிவுடைமையே பண்புடைமை

பஸ் பிரயாணம் பல ரகம். ஜன்னலருகே உட்கார்ந்து பல காட்சிகளைக் கண்டு ஆனந்திக்கும் குழந்தை; வேலை தேடும் தாபத்துடன் செல்லும் யுவர், யுவதிகள்; கலியாண மோகத்தில் மூழ்கும் இளம் தம்பதிகள். இவர்கள் ஆனந்த வாழ்வில் குதூகலிப்போர்கள்.

மற்றொருபுறம் வயோதிகர்களும், பிணியால் வாடும் தங்கள் உறவினரைப் பார்க்கத் துடிப்போர்களும், சுக துக்கங்களில், பஸ் பிரயாணம் இவ்வாறு இழைந்திருக்கிறது.

“அப்பனே, திருச்சிக்கு எப்பதாம்பா போய்ச் சேருவோம்?” என்று கண்டக்டரை அடுத்து - அடுத்து கேட்டுக்கொண்டே வந்தாள் அந்தப் பாட்டி. “அப்பனே, என் பேரன் சிக்கா யிருக்கிறான். ஊருக்குப் போக இன்னும் எவ்வளவு நேரந்தானாகும்பா, சொல்ல மாட்டியா?” என்று மீண்டும் அவள் கேள்வி எழுந்தது. இந்த பஸ் இன்னும் வேகமாகப் போகாதா என்பது போன்று பாட்டி குரல் ஒலித்தது.

“பாட்டி, கவலைப்படாதீங்க; இன்னும் ஒரே மணி நேரத்துக்குள் திருச்சி சேர்வோம். நம்ம சின்னதுரையை உங்க வீட்டுக்கு வழிகாட்ட வேண்டி யிருக்கேன்” என்றார் கண்டக்டர். வினயமும் அன்பும் கலந்த இப்பதில் பாட்டியை மனங்குளிரச் செய்தது. இவ்வித உருக்க மான அனுபவங்களே எங்கள் வாழ்க்கை.

பஸ்கள் பல ஓட்டுகிறோம். 41,929 மைல்கள் பிரயாணிகளைக் கொண்டு செல்கிறோம். ஆயிரக்கணக்கான நபர்களுக்கு ஊழிய, ஊதிய வசதி யளிக்கிறோம். இவை பெருமைப்படக் கூடிய சாதனைகளே. ஆனால் நாங்கள் போற்றுவது ஒரு பிரயாணியின் சிறப்புரையே — “டி. வி. எஸ். பஸ் கட்டணம் வாங்குவதில் மட்டும் குறியில்லை. நம்மை, அண்டை வீட்டார்போல அன்புடனும், ஆதரவுடனும் நடத்துகிறார்கள்.”

வினயத்துடன், பிரயாணிகளின் சௌகரியத்தை வளர்ப்பதே எங்கள் சுபாவம்.




சதர்ன் ரோட்வேஸ்



பிரைவேட் லிமிடெட், மதுரை

(டி. வி. எஸ். ஸ்தாபனம்)

# பொள்ளாச்சியில் வெள்ளிவிழா

சுமார் இருபத்தேழு ஆண்டுகளுக்கு முன்னால் திரு ப. நாச்சிமுத்துக் கவுண்டரின் பெருமுயற்சியால் ஆரம்பிக்கப்பட்ட 'கூட்டுப் பொருள் இரும்புக் கம்பெனி' தான் பின்னால் 'ஆனைமலை பஸ் டிரான்ஸ்போர்ட்' டாக மாறியது. இந்த ஸ்தாபனத்தைத் தான் கோவை, பொள்ளாச்சி முதலிய இடங்களில் உள்ள மக்கள் 'ஏ. பி. டி.' என்று அன்புடன் அழைத்து வருகிறார்கள். ஏ. பி டி. என்றால் அந்தப் பக்கத்தில் தெரியாதவர்களே இல்லை. அவ்வளவு தூரத்துக்கு மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெற்ற ஸ்தாபனம் ஏ. பி. டி. ஸ்தாபனம். ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்து நாலாம் ஆண்டு ஏ. பி. டி. ஸ்தாபனத்தின் தலைவர் திரு நாச்சிமுத்துக் கவுண்டரின் மறைவுக்குப் பின் அவருடைய குமாரர் திரு என். மகாலிங்கம் அவர்கள் ஏ.பி.டி.யின் நிர்வாகப் பொறுப்பை ஏற்று மிகத் திறம்பட நடத்தி வருகிறார். தம் தந்தையின் பெயரால் பொள்ளாச்சியில் ஒரு பிரசவ விடுதியைக் கட்டினார். இன்னும் 'நாச்சிமுத்து இண்டஸ்டிரீஸ் அஸோஸியேஷன்' என்று ஒரு தர்ம ஸ்தாபனத்தை நிறுவி அதன் நிர்வாகத்துக்காக அதன் பெயருக்குக் கோவை நகரில் செல்லும் இருபத்து இரண்டு பஸ்களையும் மாற்றினார். அந்த பஸ்களின் வருவாயில் 'நாச்சிமுத்து பாலிடெக்னிக்' என்னும் பலதுறைத் தொழில் நுணுக்கப் பள்ளி ஒன்றையும் நடத்தி வருகிறார். இவ்வாறு தற்போது ஏ. பி. டி. ஸ்தாபனத்தின் தலைவராக விளங்கும் திரு என். மகாலிங்கம் எம்.எல்.ஏ. அவர்கள் மக்களுக்குப் பயன் தரும் தொழிலையும் தொழில் கல்வியையும் சேர்த்து வளர்த்து வருகிறார். இந்த ஸ்தாபனத்தின் வெள்ளி விழா தான் பொள்ளாச்சியிலும் வால்பாறையிலும் நவம்பர் 31, அக்டோபர் 1, 2, ஆகிய தேதிகளில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

முதல் நாள் சக்தி நிலையத்திலிருந்து வெள்ளி விழா ஊர்வலம் ஆரம்பமாயிற்று. அலங்காரம் செய்யப்பட்ட இரண்டு யானைகள் முன்னால் செல்ல, ஏ. பி. டி. ஸ்தாபகர் திரு நாச்சிமுத்துக் கவுண்டரின் திருவுருவப்படம் அலங்கரிக்கப்பட்ட பெரிய லாரியில் வைத்துப் பவனி வந்தது. காருகுறிச்சி திரு அருணாசலம் குழுவினர் நாகஸ்வர இன்னிசை பொழிந்தனர். இந்த ஊர்வலத்தில் நாச்சிமுத்து பாலிடெக்னிக் மாணவர்கள், ஏ.பி.டி. ஸ்தாபனம், அதன் கிளை ஸ்தாபனமான கவுண்டர் அண்டு கம்பெனி ஆகியவற்றின் தொழிலாளர்கள், நகரப் பிரமுகர்கள், பொள்ளாச்சி மக்கள் எல்லாரும் அணிவகுத்து நடந்துவர ஊர்வலம் ஏ. பி. டி. ஸ்தாபனத்தின் தலைமைக் காரியாலயத்துக்கு வந்து சேர்ந்தது.

வெள்ளைக்கிணறு திரு வி. வி. பழனிசாமிக் கவுண்டர் தேசியக்கொடி ஏற்றி வைக்க ஏ. பி. டி. வெள்ளி விழா ஆரம்பமாயிற்று.

மாலையில் நடைபெற்ற விளையாட்டுப் பந்தயத்துக்கு திரு பி. ஆர். ராமகிருஷ்ணன் எம். பி. தலைமை வகித்தார். வெள்ளி விழாவை யொட்டி நடைபெற்ற விளையாட்டுப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு நகரசபைத்தலைவர் திரு கே. ஆறுமுகம் பரிசுகள் வழங்கினார்.

இரண்டாம் நாள் விழா நவம்பர் 31-ந் தேதி மாலையில் ஆரம்பமாயிற்று. வெள்ளி விழாவுக்கென்று அமைக்கப்பட்டிருந்த விசேஷப் பந்தல் நிறைந்து வழியும்படி மக்கள் வெள்ளம்போல் வந்து குழுமியிருந்தனர். முதன் மந்திரி திரு கே. காமராஜ் நாடார் விழாவைத் துவக்கிவைத்தார். நிதி மந்திரி திரு சி. சுப்பிரமணியம் விழாவுக்குத் தலைமை தாங்கினார். திரு என். மகாலிங்கம் எம். எல். ஏ. வரவேற்புரை நிகழ்த்தினார். ஏ. பி. டி. ஸ்தாபன டைரக்டர்களில் ஒருவரான திரு ஏ. வி. கிரி வெள்ளிவிழா அறிக்கையை வாசித்தார். ஏ. பி. டி. ஸ்தாபனத்தின் பழைய டைரக்டர்களின் திருவுருவப் படங்களைத் திரு கந்தசாமிக் கவுண்டர் திறந்து வைத்தார். தற்பொழுது ஏ. பி. டி. ஸ்தாபனத்தின் டைரக்டர்களாக இருந்து பணியாற்றி வரும் திரு என். பழனியப்ப கவுண்டர், திரு என். மகாலிங்கம், திரு ஏ. வெள்ளியங்கிரி ஆகியவர்களின் திருஉருவப்படங்களை வேட்டைக்காரன் புதூர் திரு வி. கே. பழனிசாமிக் கவுண்டர் எம். எல். சி. திறந்து வைத்தார். இருபது ஆண்டுகளுக்கு மேல் ஏ. பி. டி.யில் தொண்டாற்றி வரும் தொழிலாளர்களுக்குத் தங்கப் பதக்கங்கள் பரிசு வழங்கப்பட்டன. வெள்ளிவிழா வைபவத்தை யொட்டித் தொழிலாளர்களுக்குப் பதினைந்து நாள் சம்பளம் போனஸாக வழங்கினார்கள்.

தொழிலாளர்கள் எல்லாரும் சேர்ந்து திரு என். மகாலிங்கம் எம். எல். ஏ., அவர்களுக்கு ஒரு பெரிய வெள்ளிக் கேடயமும், பாராட்டுப் பத்திரமும் வாசித்தளித்தனர்.

அக்டோபர் 1உ காலை வால்பாறையில் மூன்றாம் நாள் விழா ஆரம்பமாயிற்று. வால்பாறையில் புதிதாகக் கட்டப்பட்டிருந்த ஏ. பி. டி. வெள்ளி விழாவின் ஞாபகார்த்தக் கட்டடத்தின் திறப்பு விழா வெகு சிறப்பாக நடைபெற்றது. இந்த விழாவுக்கு, சிம்ஸன் கம்பெனியின் அதிபர் திரு எஸ். அனந்தராமகிருஷ்ணன் தலைமை வகித்தார். திரு கே. காமராஜ் நாடார் அவர்கள் வெள்ளி விழாக் கட்டடத்தைத் திறந்து வைத்தார்.

மூன்று தினங்களும் மாலையில் கலை நிகழ்ச்சிகள் இருந்தன. ஏ. பி டி. ஸ்தாபனத்தைச் சேர்ந்த தொழிலாளர்களே கலை நிகழ்ச்சிகளை நடத்தியது குறிப்பிடத்தக்கது. மலையாள நாடகமும், வில்லுப்பாட்டும், மனோன்மணி நாடகமும் நடத்தினார்கள். இந்தக் கலை நிகழ்ச்சிகளில் இரவு பன்னிரண்டு மணி வரையில் திரளாக மக்கள் கலந்து கொண்டு மகிழ்ந்தனர். வாழ்க, ஏ. பி. டி. ஸ்தாபனம்!

வெள்ளி விழாக் காட்சிகள் சிலவற்றை எதிர்ப் பக்கத்தில் காணலாம்.







௧. விளையாட்டுப் போட்டிக்குத் தலைமை தாங்கிய திரு பி. ஆர். ராமகிருஷ்ணன் தலைமையுரை நிகழ்த்துகிறார். அருகில் அமர்ந்திருப்பவர்தான் திரு என். மகாலிங்கம். 2. வால்பாறையில் கட்டியிருக்கும் வெள்ளி விழாக் கட்டடம். 3. வெள்ளி விழாக்கட்டடத் திறப்பு விழாத் தலைவர் திரு எஸ். அனந்தராம கிருஷ்ணன் பேசுகிறார். கோடியில் அமர்ந்திருப்பவர்தான் ஏ. பி. டி. ஸ்தாபன டைரக்டர் ஏ. வி. கிரி. 4. ஏ. பி. டி. தொழிற்சாலையில் ஒரு பகுதி. 5. வெள்ளி விழாவில் கலந்து கொண்ட தலைவர்கள். 6. திரு ப. நாச்சிமுத்துக் கவுண்டர் பொள்ளாச்சியில் கட்டியிருக்கும் மாரியம்மன் கோயில்.



# பண்பாட்டைப் பாதுகாப்போம்

ஜி. டி. கல்யாணசுந்தரம்

**தொ**ன்றுதொட்டு நெய்து வரும் நம் நாட்டுக் கைத்தறித் துணிகளுடைய பழைமைக்கு இப்பொழுது ஒரு அபாயம் ஏற்பட்டிருக்கிறது. பழைய மோஸ்தர்களையே இக்கைத்தறிக்காரர்கள் தொடர்ந்து பலவித கவர்ச்சிகரமான மாறுதல்களைப் புகுத்தி தொழிலை மூத்தைய பண்பு குன்றாமல் காப்பாற்றி வருவதா அல்லது அன்னிய நாட்டின் ஏற்றுமதியின் தேவைக்கு ஏற்றபடி மோஸ்தர்களை மாற்றுவதா என்பதே பிரச்னை.

நம் நாட்டின் அழகிய கைத்தறி கைவேலை ஆடைகள் அமெரிக்காவின் விருப்பத்துக்குத் தற்சமயம் ஏற்றவைகளாக இருந்து வருகின்றன. எனவே சில அமெரிக்க வியாபாரிகள் இவைகளைப் பார்த்து விட்டு, இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்பு ஏராளமாகக் கைத்தறித் துணிகளை இங்கிருந்து அவர்கள் தேசத்து மக்களுக்கு வாங்கிச் சென்று விற்று வந்தனர்.

ஆனால் இப்பொழுது நமக்கு வேண்டிய அமெரிக்க டாலர்களைச் சம்பாதிக்க, ஏற்றுமதியை அதிகரிக்க, அமெரிக்க மக்களுக்கு ஏற்றபடி கைத்தறித் துணிகளின் மோஸ்தர்களை மாற்றலாமா என்று நம் சர்க்கார் யோசித்து வருகின்றனர்.

சென்ற வாரம் சென்னைக்கு வந்திருந்த அமெரிக்கக் கோஷ்டியின் தலைவர் ஸ்ரீ எமில் கரோக் இதைப் பற்றியும் கைத்தறி கைவேலைப் பண்டங்கள் பற்றியும் இந்திய சர்க்காருக்கு யோசனை புகட்ட வேண்டியதைப் பற்றியும் சென்னை பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் முக்கியமாகக் குறிப்பிட்டார்.

"இந்தியக் கைத்தறிச் சாமான்களையோ அல்லது கைவேலைப் பண்டங்களையோ அமெரிக்கத் தேவைக்கு உகந்ததாகச் செய்வதற்கு, இந்த நாட்டின் கைத்தறித் துணியின் பிலைப்பாட்டை அமெரிக்க விருப்பத்துக்குத் தக்கபடி மாற்றிவிட வேண்டுமா?" என்பது ஒரு நிருபரின் கேள்வி.

இதற்கு ஸ்ரீ கரோக் அளித்த திட்டமான பதிலை நம் சர்க்காரும் கைத்தறியாளர்களும் நன்கு கவனிக்க வேண்டும். அவர் வெளியிட்ட கருத்தாவது:

"இந்தியக் கைத்தறிச் சாமான்கள் எப்பொழுதும் போலவே இந்திய புராதனத்தைத் தழுவியே இருந்து வரவேண்டும். அப்படியில்லாமல் அமெரிக்கத் துணிகளின் மோஸ்தரைக் கைத்தறியில் காப்பியடிக்கும் பட்சத்தில், இந்தியக் கைத்தறித் தொழில் மறைந்து விடுவதற்கு வேறு வினை வேண்டியதில்லை

"இந்த ரகங்கள் கவர்ச்சிகரமாக இருப்பதற்குக் காரணம், இந்திய பழைய பண்பாட்டின் உயர்வும் கைத்தறிக்காரர்களுடைய உயர்ந்த அரிய கைப்பழக்கமும்தான். இப்படிப்பட்ட நாகரிகப் பண்பானது இந்தியக் கைத்தறி ஆடைகளில் பிரதிபலிக்கிறது. எனவே இவைகளில் துளிக்கூட மாறுதல் ஏற்படக் கூடாது. அப்படி வேண்டுமானால் ஆடைகளின் நீளத்தையோ அல்லது அகலத்தையோ குறைத்தோ நீட்டியோ அல்லது இன்னும் சிற்சில சிறு மாறுதல்களை மட்டும், அமெரிக்கர்களுடைய விருப்பத்தை மேலும் அதிகரிக்கும் அளவில் மாற்ற வேண்டும். அப்படியல்லாமல் அமெரிக்கத் துணிகளைக் காப்பி அடித்தால் இந்தியக் கைத்தறியின் ஏற்றுமதிக்கு முற்றுப் புள்ளி வைக்க வேண்டியிருக்கும்.

இக்கருத்தை நன்கு கவனிக்கவேண்டும். நம் கைத்தறி ஆடை உற்பத்தியாளர்கள் இந்தியக் கைத்தறியின் புராதன சரித்திரத்தை நழுவ விடாமல் பாதுகாக்க வேண்டும். இது மிகவும் முக்கியம்.

சென்ற சிலகாலமாகத் தென்னிந்தியாவில் இருபது அல்லது முப்பது வருஷங்களுக்கு முன்பு நம் ஸ்திரீகள் அணிந்த ஆடை ரகங்கள் இப்பொழுது புது ரீதியென்றும் மோஸ்தர் என்றும் வழங்குவதை நாம் காண்கிறோம். நாற்பது வருஷங்களுக்கு முன்பு நம் ஸ்திரீகள் அணிந்து வந்த சேலையேதான் இன்று புது நாகரிகமாகத் தோன்றுகிறது.

எனவே, கைத்தறி ஆடைகளை ஏற்றுமதிக்கு ஏற்பாடு செய்து வரும் நமது சர்க்கார் கூர்ந்து கவனிக்கவேண்டிய விஷயம்—பழைய தொரு வழக்கத்தை நழுவவிடாமல், அவைகளை மறுபடியும் புத்துயிர் அளித்துப் பாதுகாக்க வேண்டும். நம் கைத்தறியாளர்கள் பல ஆயிரம் நிறுகைகளை நெய்து பழக்கப் பட்டவர்கள் இவைகளையே நன்றாக ஆராய்ந்து வேண்டியபடி மாற்றி அமைத்து வெளிநாட்டின் கவர்ச்சியைப் பெறவேண்டும்.

இதைத்தான் ஸ்ரீ கரோக் சுட்டிக் காண்பித்தார். இந்தியப் பெண்கள் அணிந்து வரும் சேலைகள் அழகுதான் என்பதை ஒப்புக் கொண்டு அவர் ஒரு எச்சரிக்கையும் செய்தார்.

"உங்கள் பெண்கள் கட்டும் சேலை மிக்க எழில் கொடுப்பவைகளாயிருந்தாலும் அவைகளை அமெரிக்கப் பெண்கள் விரும்ப மாட்டார்கள். இந்தியாவைச் சுற்றிப் பார்ப்பவர்கள் அடையாளத்துக்காகச் சில சேலைகளை வாங்கிச் செல்லலாம். எனவே, நீங்கள் சேலைகளை அமெரிக்காவுக்கு ஏற்றுமதி செய்து, அவைகளை விற்றுவிட முடியும் என்று எண்ணுவது முற்றிலும் தவறு."

இந்தியக் கைத்தறியை இந்தியாவின் பழைமையானதையே குறிப்பிட வேண்டுமே தவிர தற்காலத்துக்குத் தேவையான டாலர்களைப் பெற வேண்டி, நம் பண்பாட்டைக் கைவிடக் கூடாது.

இந்த அபாயம் இப்பொழுது நம் கைத்தறிகளைத் தழுவியிருக்கிறது. பிறநாட்டின் பணத்துக்காக நாம் எவ்விதத்திலும், அவர்களுக்கு அடிமையாக முடியாது.

சில காலமாக, பொருளாதாரத் துறையில் நேர்ந்திருக்கும் நெருக்கடியை முன்னிட்டு நமது சர்க்கார் செய்துவரும் ஏற்றுமதி ஏற்பாட்டினால் ஏற்பட்டதொரு அபாயம் இது. இதைத் தவிர்ப்பது நமது கடமை.

நவம்பர்

7 ம் முதல்

சென்னை
கெயிட்டி
பிராட்வே
சயானி மற்றும்

தென்னாடெங்கும்





"அற்புதக் கலையின் அழகுப்படையல்
அனைத்தும் நிறைந்த கருத்துக் காவியம்"



ஆர். ஆர். பிக்சர்ஸ்

# காத்தவராயன்

டைரக்ஷன்... ராமண்ணா




நெசவில் செய்யப்படும் நுட்பமான மாறுபாடுகளால் ஸ்ரீ ராம் மில்ஸின் லீனோக்கள் சரிகை போன்ற மெல்லிய பல ரகங்களில் உற்பத்தியாகின்றன. முற்றிலும் புது விதமான சோளிக்கு உங்கள் அபிமான SRM லீனோவை, பிரகாசமான, சேர்மானமுள்ள வர்ணத்தில் அமைத்துக் கொள்ளுங்கள்.

ஸ்ரீ ராம் மில்ஸின் துணிகள் வேண்டுமென்றால், மேன்மையான சூடான் பருத்தியில் தயாரான தரமான, சரக்கு கிடைப்பது நிச்சயம்.

உறுதி வாய்ந்த SRM லீனோக்கள் அழகான, மெல்லிய ரகங்களிலும், வித்தியாசமான நூல் வகைகளில் நெய்யப்பட்டும், அனைவரும் வாங்கக் கூடிய விலையிலும் கிடைக்கின்றன.

* ஞாபகமிருக்கட்டும்:
ஒவ்வொருவருக்கும் ஏற்ற ரகம் ஒன்று
SRM துணிகளில் நிச்சயமாக உண்டு!

**SRM**

ஸ்ரீ ராம் மில்ஸ் லிமிடெட், பெர்குஸன் ரோட், பம்பாய்-13

SRM.58.58 TM. EVEREST

பாகவதமாகிய

# பக்தி வயல்

## 12. பிரசேதர்களின் பெரும் தவம்

அச்வமேத யாகம் முடிவடைந்ததும், பிருது, தம் தலைநகருக்குத் திரும்பினார். அவரை நகரவாசிகள் தோரணங்களுடனும், வாத்திய கோஷத்துடனும் வரவேற்றார்கள். பிருது வசித்து வந்தது கங்கைக்கும் யமுனைக்கும் நடுவே இருக்கும் புண்ணிய பூமி. ஆனால் அவர் ஏழு பிரிவு பெற்ற பூமண்டலமெல்லாம் தம் ஆணைக்குள் அடக்கி ஆண்டார்.

ஒரு சமயம் பிருது, தம் குடிகளுக்கு, அரசனுடைய தர்மத்தையும், வேள்வியில் விஷ்ணுவே அமர்ந்திருப்பதையும், பக்தியின் பெருமையையும், நெறி தவறாத அந்தணர்கள் நடத்தையையும் குறித்து உபதேசம் செய்தார். அப்பொழுது அவ்விடத்துக்கு ஸனகர் தம் மூன்று சகோதரர்களுடன் வந்தார். அவர்களை அரசன் எதிர்கொண்டழைத்துப் பலவாறு உபசரித்துத் தோத்திரம் செய்தார். பிறகு, பிருது அவர்களைப் பின்வருமாறு வினவினார்: "துன்புறும் மாந்தர்க்கு நற்றோழரான உங்களை நம்பி நான் ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன்; இந்தப் பிறவிக் கடலினின்று ஒருவன் கஷ்டமில்லாமல் கடைத்தேறுவது எவ்விதம்?"

அதற்கு ஸனத்குமாரர் பதில் அளித்தார். "சாஸ்திரங்களில் மனிதன் மோக்ஷம் அடைவதற்கு வகுத்திருக்கும் வழி ஒன்றே: தன்னுள் கோயில் கொண்டிருக்கும் குணமில்லா பிரமத்தினிடம் அளவிலா அன்பும், மற்றெல்லாவற்றிலும் ஆசையற்றிருப்பதுவுமே. இந்த நிலையை எவ்வாறு அடைவது? முதலில் அடைய வேண்டும் என்ற அவா நிலைக்க வேண்டும். பிறகு பூஜை, யோகம், அனந்தனுடைய கதைகளைக் கேட்பது, சிற்றின்பத்தில் சிந்தை செலுத்தியவரை விட்டு விலகுவது, தனிமையில் இருந்து தன்னையே நினைப்பது, துன்பாற்றாமை, துறவியின் போக்கு, பன்னிரண்டு விதமான நல்லொழுக்கங்கள், (அதாவது, அகிம்சை, பொய்யாமை, திருடாமை, பற்றின்றி வாழ்வு, அடக்கம், பிறருக்கேயன்றித் தனக்கெனத் திரவியம் தேடாமை, கடவுள் உண்டென்ற திண்ணம், புலன்களை அடக்கி ஆள்வது, கடவுளிடம் மனம் செலுத்தி வருதல், நிச்சய புத்தி, மன்னிக்கும் தன்மை, பயமற்ற மனம்) பன்னிரண்டு புனிதமான விரதங்கள் (அதாவது உள்ளும் புறமும் தூய்மை, அனந்தனுடைய நாமத்தையும் மந்திரத்தையும் ஓதுவது, இன்ப துன்பங்களில் விருப்பமற்றிருப்பது, அக்னியில் செய்யும் ஓமம், மரியாதை, கடவுளை வழிபடுதல், புண்ய ஸ்தலங்களுக்குப் போவது, பிறருக்கு உழைப்பது, போதுமென்ற மனம், ஆசிரியனுக்குப் பணிவிடை, சுகத்தையும், துக்கத்தையும் ஒன்றாகக் கருதுவது, ஹரியின் பெயரைப் புகலும் இயல்பு) இவைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். இவ்வாறு ஆண்டவனிடம் அன்பானது வேரூன்றிய பிறகு தானாகவே நல்லாசிரியனைத் தேட வேண்டும் என்ற எண்ணம் பிறக்கும். தான் என்பது உடலையும், உள்ளையும் தாண்டி நிற்கும் ஆத்மா என்று அறிவதற்கு இதுவே வழி. தேகம், இந்திரியம், பிராணன், புத்தி, அகங்காரம் இவைகளால் மூடப்பட்ட ஜீவன்களுக்கும் உள்ளிருக்கும் உள்ளானையே தான் என்று தெரிந்து கொள்ள வேண்டும். ஐம்புலனும் மனமும் ஆன முதலைகள் மிகுந்த பிறவிக் கடலைக் கடப்பதற்கு அவன்தான் படகு என்பதைத் தீர்மானம் செய்து கொள்வீர்!"

பௌராணிகர்

ஸனகாதிகள் சென்ற பிறகு, பிருது அவர்கள் செய்த உபதேசத்தைச் செயலில் நடத்தி, சேற்றில் ஒளி தரும் கதிரவன் சேற்றின் அழுக்கணுகாது விளங்குவதுபோல், அரசாங்க வைபவங்கள் எல்லாம் காத்திருந்தும், இன்பங்களில் பற்றில்லாமல் ஆட்சி செலுத்தி வந்தான். வயது முதிர்ந்ததும், பூமியை மைந்தரிடம் ஒப்புவித்து விட்டு வெளியேறி, ஒரு ஆசிரமத்தில் காலம் கழித்து வந்தான். துறவறம்பூண்டு, தவம்செய்து, கர்மாவைக் கழித்து, ஸனகாதிகள் சொன்ன வழியில் கடவுளை வழிபட்டு, முக்தியை அடைந்தான்.

பிருதுவின் மகன் விஜிதாச்வன் பிறகு பூமியைச் சிறப்புடன் ஆண்டான். அவனுக்குத் தன் முதல் மனைவியினிடம்



பாவகன், பவமானன், சுவுசி என்று மூன்று மைந்தர்கள் பிறந்தனர். இரண்டாவது மனைவியினிடம் ஹவிர்தானன் என்று ஒரு மகன் பிறந்தான். ஹவிர்தானனுக்கு ஆறு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களுள் முதல்வனை பர்ஹிஷத் என்பவன் நாளடைவில் பட்டத்துக்கு வந்தான். பர்ஹிஷத் மன்னனுக்கு யாகங்கள் செய்வதில் மிகுந்த ஆசை இருந்தது. ஒன்றின் பின் ஒன்றாக அனேக யாகங்களைச் செய்தான். யாகத்துக்கென்று பரப்பின தர்ப்பை காடாக ஊரெங்கும் பரவியது. பர்ஹிஷத் மன்னன், கடல் பெற்ற கன்னிகையான சதத்ருதி என்பவளை மணந்து கொண்டான். மணக்கோலத்துடன் அவள் அக்னியை வலம் வந்து கொண்டிருக்கும் பொழுது அவளுடைய பேரழகைக் கண்டு அக்னியே மயங்கினுன் என்று புராணம் கூறுகிறது.

பர்ஹிஷத் மன்னனுக்குப் பத்துப் புதல்வர்கள் பிறந்தார்கள். அவர்கள் அனைவருக்கும் "ப்ரசேதர்கள்" என்ற பொதுப் பெயர் வாய்ந்தது. "மக்களைப் பெற்றிடுவீர்" என்று தந்தை அவர்களுக்குக் கட்டளை இட்டார். முதலில் தவம் புரிந்து வரம்பெறவேண்டும் என்று எண்ணி அவர்கள் அரண்மனையை விட்டு வெளியேறி, மேற்கு திசையாகச் சென்றார்கள்.

வெகு தூரத்தில் ஒரு பெரிய தடாகம் அவர்களுடைய கண்களுக்குத் தென்பட்டது. அது கடல்போல் அகன்றும், பெரியோர் மனத்தைப் போல் மாசற்றதுமாயும் விளங்கியது. அல்லியும் தாமரையும் அங்கு அடர்ந்து கிடந்தன. பறவைகளின் பேரொலியால் கலகலத்திருந்தது. மதமுண்டவண்டுகளின்கானத்தில் மயங்கியதுபோல் மரங்களின் கிளைகளும் ஆடி அசைந்தன. அப்பொழுது மிருதங்கத்துடன் கூடிய இன்னிசை அரசிளங்குமாரர்கள் காதில் விழுந்தது. அவர்கள் ஓசை வரும் திக்கை நோக்கினார்கள். தடாகத்தினின்று, கந்தர்வரும் கின்னரரும் புகழ் பாட, பரிவாரங்கள் சூழ்ந்திருக்க, நீலநிறக் கழுத்துடனும், முக்கண் பார்வையுடனும், உருக்கிய பொன்னார்மேனியோடு சிவபெருமான் வெளிவருவதைக் கண்ணுற்று வியந்தார்கள்; அருளை அளிக்கும் பெருமானை வணங்கி நின்றனர்.

சிவன் அரசகுமாரர்களிடம் தாமாகவே மகிழ்ச்சியுடன் பின்வருமாறு மொழிந்தார்: "உங்களுக்கு என் அருளை அளிக்கவே நான் இங்கு தோன்றியிருக்கிறேன். உங்கள் எண்ணத்தை நான் அறிவேன். ஹரியின் பக்தர்களான நீங்கள் என் அன்புக்குப் பாத்திரமானீர். ஆகையால் நான் சொல்லும் துதியைக் கவனித்துக் கேட்பீர்" என்று சொல்லிவிட்டுத் தாம் விஷ்ணுவுக்குச் செய்யும் தோத்திரத்தை மொழியலானார்.

அதில் சில செய்யுள்களை மட்டும் இங்கு எடுத்துரைப்போம்.

## சிவன் செய்த துதி

தன்னையே தானறிந்த பேரறிஞர் இன்புறவே,
உன்னையே வெற்றியுடன் வீற்றிருக்கும்
பண்பறிந்த
என்னையே எப்பொழுதும் நன்மையிலே
நாட்டிடுவாய்!
இன்னதென்றில்லாது எவ்வுருவும்
எய்தினவா.
மண்ணிலே தருமமாகிக் கபிலராய்ச்
சாங்கியம் சொல்லிக்
கண்ணனென்றறிவே உருவாய்த்திரண்ட
திருமேனியானை
எண்ணிலே உள்ளடங்கா முதல்வோனை
முக்கியனைத்
திண்ணமாய்த் தாள்கள்பற்றித் தோத்திரம்
செய்து கொண்டேன்.
அடர்ந்து நீண்ட கார்மேக மேனியும்
படர்ந்து நிற்கின்ற சுந்தரத்தோற்றமும்
தொடர்ந்தெழில் வாய்ந்த (நான்கு)
புயங்களும்
உடன் மலர்ந்ததோர் புன்னகை வதனமும்.
தாமரையின் உள்ளிருக்கும் இதழொத்த
கண்களும்,
காமுறுவோர்க் கமுதானபுருவமும் பற்களும்,
பாமரரும் இன்புறவே அன்பான பார்வையும்
யாமறியும் நகையெலாம் பூண்டதோர்
தேகமும்
பங்கயத்தின் நூலொத்த மஞ்சற் கூந்
பட்டாடையும்.
சங்கமும், சக்கரமும், கதையும்
செந்தாமரையும்,
அங்கத்தி லொளிவீசும் மணிமாலையும்
தோடும்,
கந்தரத்திலே துலங்கும் கௌஸ்துபமாம்
ரத்தினமும்:
உரைக்கல்மேல் தோன்றுகின்ற
தங்கத்தின் கோடென்று
திரைக்கடலின் தேவியரைத் தாங்கியதோர்
மார்பும்
கரையேற்றவே சுழிந்த சுழல்போன்ற
நாபியும்
அரையிலே அணிந்திருக்கும் ஒளிவீசும்
மேகலையும்.
அடியிலே செம்மலர் போல் சேவைதரும்
சேவடியே
நாடிவரும் எம்மனத்தின் இருளகற்றும்
பேரொளியாம்
தேடிவந்த எங்களுக்குத் திருவடியில்
புகல்தருவாய்
ஓடிப்போய் ஒழிந்ததே இகலென்று
போற்றிடுவோம்.
விண்ணுலகே வேண்டாத உன் அடியார்
ஆனந்தம்
மண்ணுலகில் உன்கதையைச் செவியுற்றும்
சொல்லியுமே
தண்ணெனக் கரைந்தோடும் பக்தியதன்
பெருமைக்கு
எண்ணுக ஒன்றுமே ஒருபொழுதும்
ஒப்பில்லை.
வரமொன்று கேட்டிடுவேன்:
அடியேனுக்கருள்வாயே,
பரமனின் பெருமையிலே ஆழ்ந்திருக்கும்
அடியாரோ(டு)
அரைநிமிடப் பிரியாமல் பற்றிநிற்கும்
பேரின்பம்
கரையேறத் தந்தளிக்கும் தனியனுக்குத்
தந்திடுவாய்.
புயல்போலவேவீசி மூவுலகைத் துகளாக்கி
அயலாரை உயிர்வாங்கும் கூற்றத்தின்
தீயுருவாய்
மயலால் மயங்கிநிற்கும் மாந்தர்களை
அழித்துவரும்
இயல்புடையாய் என்றுன்னைப் பாவிகளில
யாரறிவார்?
பிரமனும் பிறவிக்குப் பயந்தே
உன் மலரடியை
தருமத்தின் புகலிடமென்றறிந்தே
சரண்புகுந்தான்.
கருமத்தின் பயனாலே ருத்திரனைக்
கண்டஞ்சும்
மருமத்தை அறிந்தோர்க்குத் தஞ்சமாய்த்
தோன்றியவா!

"அரசகுமாரர்களே! இந்தத் துதியைத் தூயமனத்துடன் விடாது சொல்லி வாருங்கள். ஹரியையே பூஜை செய்



யுங்கள். உள்ளும் புறமும் இருப்பவன் அவனே. இந்தத் துதிக்கு "யோகாதேசம்" என்று பெயர். ("யோகத்துக்கேற்ற தூது", என்று பொருள்.) முனிவரைப் போல் 'மனத்தை அடக்கிக்கொண்டு இத்துதியைத் திரும்பத் திரும்பப் பாட வேண்டும். காலையில் எழுந்து, கதிரவன் தோன்றுவதற்கு முன் கை கூப்பிக் கூறினாலும் கேட்டாலும் கர்மத்தை அகற்றும் அருமருந்து" என்று சிவபிரான் உபதேசம் செய்தார். செய்துவிட்டுப் பிரசேதர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே மறைந்து விட்டார்.

இந்தத் துதியை நீரில் நின்று கொண்டு பாடிப் பிரசேதர்கள் பல்லாண்டுகள் தவம் புரிந்தனர்.

# கால்கேட் குளோரோபில் டூத் பவுடர்

வெளியிடுகிறது

## வீரிய குளோரோபிலின் பூரணநன்மைகள்




ஜயண்ட்
சைஸ்
லாபகரம்

### வீரிய குளோரோபில்தான் உங்களுக்கு நன்மைதரவல்லது!

வாயில் தோன்றும் துர் நாற்றத்தை ஒழிக்கிறது. அதி துரிதமாக, பூர்த்தியாகச் செயலாற்றுகிறது! வாய்க்குப் புதிய நறுமணத்தைத் தருகிறது!

பற்கள் சொத்தையாகாமல் காக்கிறது! சொத்தை யாக்கும் காரணம் என பல் டாக்டர்களால் கருதப் படும் தீய அமிலங்களை ஒழிக்கிறது!

ஈறுகளை பலப்படுத்துகிறது! உங்கள் ஈறுகளைப் பாதுகாக்க குளோரோபிலின் தீவிர நன்மைகளைத் தருகிறது.

* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது.

---

# மேலும் மலிவானது!

## குடும்பம் முழுவதற்கும் ஒரே டால்க்








# ப்ரோடெக்ஸ்

## சர்வ பிரயோக டாய்லட் பவுடர்

ஜயண்ட் சைஸ் அழகிய பப்புடன் கிடைக்கும்!

# பாண்டிமாதேவி

## இரண்டாம் அத்தியாயம்

## கொற்கையில் குழப்பம்

சிவந்த வாயும், வெள்ளிய நகையும், பிறழும் கண்களும், சுருண்ட கூந்தலும், துவண்ட நடையுமாக முத்துச் சலாபத்துக்கு அருகிலிருந்த கடல் துறையில் இளம் பெண்கள் நீராடிக் கொண்டிருந்தனர். வேறு சில சிறுமிகள் கடற்கரை ஈர மணலில் வீடு கட்டி விளையாடினர். அவர்களுடைய மணல் வீட்டைக் கடல் அலை அழித்தது. அதைக் கண்டு நினைவு மலராப் பருவத்தையுடைய அந்தச் சிறுமிகளுக்குக் கடலின்மேல் சினம் மூண்டது. "ஏ! கடலே! இரு, இரு! என் அம்மாவிடம் சொல்லிக் கண்டிக்கச் சொல்கிறேன்" என்று கடலைப் பயமுறுத்திவிட்டு ஆத்திரமும் அழுகையுமாக வெறுப்போடு தன் கழுத்திலிருந்த முத்துமாலையை அறுத்துச் சிதறி அடம் பிடித்தாள் ஒரு சிறுமி. கடற்கரையோரத்துப் புன்னை மரத்திலிருந்து உதிர்ந்த அரும்புகளுக்கும், இப்படிச் சிதறப்பட்ட முத்துக்களுக்கும் வேறுபாடு தெரியாமல் அந்தப் பக்கம் நடந்து வருவோர் திகைத்தனர்.

கொற்கைக் கடலில் இளம் பெண்கள் நீராடி மகிழ்வதே ஒரு தனி அழகு. இளம் பெண் ஒருத்தி தன் தோழியின் தோள் மேல் வாரி இறைப்பதற்காக இரண்டு உள்ளங் கைகளிலும் நீரை அள்ளினாள். அதில் அவள் கண்கள் தெரிந்தன. "ஐயோ மீன்!" என்று தண்ணீரை விட்டுக் கரையேறிப் பயந்து போய் மணலில் உட்கார்ந்து விட்டாள் அந்தப் பெண்.



"தொக்குத் துறைபடியும் தொண்டைஅம்
செவ்வாய் மகளிர் தோள்மேற் செய்வான்
கைக்கொண்ட நீருள் கருங்கண்
பிறழ்வ கயலென் றெண்ணி
மெய்க்கென்றும் பெய்கல்லார் மீண்டு"
கரைக்கே சொரிந்து மீள்வார் காணார்
எக்கர் மணற்கிளைக்கும் ஏழை
மகளிர்க்கே எதிர்க் கொற்கை." [5]

என்று இப்படியெல்லாம் முத்துவிளையும்கொற்கைத் துறையைப் பற்றி முத்து முத்தான தமிழ்ப் பாடல்களைப் பழம் புலவர்கள் பாடியிருந்தார்கள். பல்லாயிரங் காலத்துப் பயிர் அந்தப் பெருமை. மானமும், வீரமும், புகழும், பண்பும், பாண்டிய மரபுக்குக் கொடுத்த பெருமை அது! பாண்டிய நாட்டு மண்ணைத்தான் தங்கள் மறத்தினாற் காத்தனர் பாண்டியர். ஆனால் முத்து விளையும் கொற்கைக்கடலை அறத்தினாற் காத்தார்கள். "மறப் போர்ப் பாண்டியர் அறத்திற் காக்கும் கொற்கையம் பெருந்துறைமுத்து" என்று எவ்வளவு நன்றாகச் சங்கநூற் கவிஞர் அந்தப் பெருந் தன்மையைப் பாராட்டியிருக்கிறார்.

இப்போதுள்ள சூழ்நிலையில் இந்தப் பாராட்டெல்லாம் வெறும் பழம் பெருமையாகி விட்டனவே. அறத்தினால் காத்த கொற்கையை மறத்தினாற் காக்க வேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது. பகைமையும் பூசலும் வளரும்போது உலகத்தில் எந்தப் பொருளையுமே அறத்தினால் காக்க முடிவதில்லை. தங்க நகையை இரும்புப் பெட்டியில் பூட்டுவதுபோல் மெய்யைக் கூடப் பொய்யால்தான் பாதுகாக்க வேண்டியிருக்கிறது. வலிமையுள்ளவனுக்கு ஆசைகள் வளரும்போது வலிமையற்றவன் தன் பொருள்களை அறத்தினால் எப்படிக் காக்க முடியும்?

முடியாதுதான்! முடியவும் இல்லை. முத்துக் குளி விழாவுக்கு மறுநாள் கொற்கையில் நடந்த குழப்பங்கள் இந்த உண்மையை விளக்கி விட்டன. கரவந்தபுரத்து அரசனும், அரசியும் பரிவாரங்களும், விழாவன்றைக்கு மாலையிலேயே பொருநைப் புனலாட்டு விழாவுக்காகத் திரும்பிச் சென்று விட்டனர். முத்துச் சலாபத்துக்குக் காவலாகச் சில வீரர்களே இருந்தனர். தொடர்ந்து முத்துச் சலாபத்தில் நடைபெற வேண்டிய வாணிகத்தை மேற்பார்வை செய்வதற்குக் கரவந்தபுரத்து அரசாங்கப் பிரதிநிதிகளாகக் 'காவிதி'ப் பட்டம் பெற்ற அதிகாரி ஒருவரும், 'ஏனாதி'ப் பட்டம்பெற்ற உள்படு கருமத்தலைவர் ஒருவரும், 'எட்டி'ப் பட்டம் பெற்ற வாணிகர் ஒருவரும் கொற்கையில் தங்கியிருந்தார்கள். பாண்டிய மன்னர்கள் இளவரசர்களாக இருக்



கும் காலத்தில் வந்து தங்கியிருப்பதற்காகப் பழங் காலத்தில் கட்டப்பட்ட அரச மாளிகை ஒன்று கொற்கையில் உண்டு. அது கடல் துறையிலிருந்து சிறிது தொலைவு உள்ளி இருந்தது.

முத்துச் சலாபத்தை மேற்பார்வையிடக் கொற்கையில் இருந்த அரசாங்கப் பிரதிநிதிகள் மூவரும் அரச மாளிகையில்தான் தங்கியிருந்தனர்.

காலையில் விழாவுக்காக வந்து கூடியிருந்த கூட்டம் இப்போது இல்லை. அரசன் புனலாட்டு விழாவுக்காகப் பொதியமலைச் சாரலுக்குத் திரும்பியதும் கூட்டமும் கலைந்திருந்தது. ஆனாலும் அதனால் கொற்கைத் துறையின் கலகலப்பு குறைந்து விடவில்லை. ஈழம், கடாரம், புட்பகம், சாவகம், சீனம், யவனம் முதலிய பல நாட்டு வணிகர்களும், கப்பல்களும் நிறைந்திருக்கும்போது கொற்கைத் துறையின் ஆரவாரத்துக்கு எப்படிக் குறைவு வரும்?

பேரரசன் மறைந்த பின் குறும்பு செய்யத் தலை எடுக்கும் சிறு பகைவர்களைப் போல் கதிரவன் ஒளியிழந்த வானில் விண்மீன்கள் மினுக்கின. சுற்றுப் புறம் இருண்டது. மணற் பரப்பில் தெரிந்த வெண்மையான கூடாரங்களின் தீபங்கள் ஒளி பரப்பத் தொடங்கும் நேரம். கப்பல்களைக் கரையோரமாக இழுத்து நங்கூரம் பாய்ச்சுவோர் அலுப்புத் தெரியாமல் இருப்பதற்காக ஒருவகைப் பாட்டு பாடுவார்கள். துறைமுகப் பகுதியில் அந்தப் பாட்டொலி எப்போதும் ஒலித்த வண்ணம் இருக்கும். அது கூட அடங்கி விட்டது. துறைப் பக்கமாகச் சிறு கோபுரம் போல் உயர்ந்திருந்த கலங்கரை விளக்கின் உச்சியில் தீ கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது. வரிசையாக நின்ற பாய்மரக் கப்பல்களில் காற்று உரசும்போது ஒரு வகை அழுத்தமான ஓசை உண்டாயிற்று. மற்றப்படி துறையின் ஆரவாரத்தை இரவின் அமைதி குறைத்து விட்டிருந்தது.

ஆனால் வணிகர்களின் கூடாரங்கள் இருந்த பகுதிகளிலோ இதற்கு நேர் மாறாகப் பாட்டும், கூத்துமாய் ஆரவாரம் அதிகரித்திருந்தது. நீண்ட தொலைவு பயணம் செய்து வியாபாரத்துக்காக வந்து தங்கியுள்ள இடத்திலும் தங்கள் இன்பப் பொழுதுபோக்குகளை, அவர்கள் விட்டுக் கொடுக்கத் தயாராயில்லை. அவர்களுடைய கூடாரங்களிலெல்லாம் விளக்கொளி இரவைப் பகலாக்கியது. பூக்களின் நறுமணமும், அகிற்புகையின் வாசனையும், யாழிசை

யும், நாட்டியக் கணிகையரின் பாதச் சிலம்பொலியும், மனத்தை முறுக்கேற்றித் துள்ள வைக்கும் பாடல்களும் காற்று வழியாகக் கலந்து வந்து கொண்டிருந்தன. எங்கும், எதற்காகவும் தங்கள் சுகபோகங்களைக் குறைத்துக் கொள்ளாத அளவுக்கு வளமும் வசதியும் உள்ளவர்கள் அவர்கள். முத்துக் குளிக்கும் பரதவர்களும், கடல் துறையில் பணி புரிவோரும் வசிக்கும் மற்றோர் பகுதி இருளில் மூழ்கியிருந்தது. இவை தவிர முத்துக்குளி விழாவைக் காண வந்து, மறுநாள் காலை ஊருக்குத் திரும்பிக் கொள்ளலாம் என்ற எண்ணத்துடன் அன்றிரவு அங்கேயே தங்கிவிட்ட மக்களும் இருந்தனர். அவர்களும் கூடாரங்கள் அமைத்தே தங்கியிருந்தனர்.

அந்தமாதிரி சாதாரண மனிதர்கள் தங்கியிருந்த கூடாரங்கள் ஒன்றிலிருந்து நமக்கு முன்பே பழக்கமானவர்களின் பேச்சுக் குரல் கேட்கிறது. ஒன்று அடங்கிய ஆண் குரல். மற்றொன்று துடுக்குத்தனம் நிறைந்த பெண் குரல். 'யார் இவர்கள்?' என்று அருகில் நெருங்கிப் பார்த்ததும் வியப்படைகிறோம்!

அந்த ஆடம்பரமற்ற எளிமையான சிறிய கூடாரத்தின் உட்புறம் அகல் விளக்கின் மங்கலான வெளிச்சத்தில் நமக்கு முன்பே பழக்கமான முன்சிறை அறக்கோட்டத்து மணியகாரன் அண்டராதித்த வைணவனையும், அவன் மனைவி கோதையையும் காண்கிறோம். அந்த வேடிக்கைத் தம்பதிகள் வழக்கம்போல் உலகத்தையே மறந்து, நகைச்சுவை உரையாடலில் மூழ்கியிருக்கின்றனர்.

"உன்னுடைய ஆவல் நிறைவேறி விட்டதா? முத்துக்குளி விழா பார்க்க வேண்டுமென்று மூன்று ஆண்டுகளாக உயிரை வாங்கிக் கொண்டிருந்தாய். கொண்டுவந்து காண்பித்தாகிவிட்டது. இனி நான் நிம்மதியா யிருக்கலாம்."

"அதுதான் இல்லை! நாளைக் காலையில் நாம் இங்கிருந்து புறப்பட்டு விடுவதற்கு முன்னால் நீங்கள் எனக்கு ஒரு முத்து மாலையை வாங்கித் தரவேண்டும். இவ்வளவு பிரமாதமான முத்துக்களெல்லாம் விளைகின்ற கொற்கைக்கு வந்துவிட்டு வெறுங்கையோடு போவது நன்றாயிருக்காது!" கோதை இதைக் கூறிவிட்டு மெதுவாக நகைத்தாள்.

"அதெல்லாம் மூச்சு விடக்கூடாது. பொழுது விடிந்ததும் ஊருக்குக் கிளம்பிவிட வேண்டும். இரண்டுபேருமே இங்கு வந்து விட்டோம். அறக்கோட்டத்தில் ஆள் இல்லை. நாட்டு நிலைமையும் பலவிதமாகக் கலவரமுற்றிருக்கிறது."

"முத்துமாலை வாங்கிக் கொள்ளாமல் ஒரு அடி கூட இங்கிருந்து நான் நகரமாட்டேன். முத்து விளையும் கொற்கைக்கு வந்துவிட்டு முத்து வாங்காமற் போனால் மிகவும் பாவமாம்."

"அடேடே! அப்படிக்கூட ஒரு சாஸ்திரம் இருக்கிறதா? எனக்கு இது வரையில் தெரியாதே?"

கோதை அண்டராதித்தனுக்கு, முகத்தைக் கோணிக்கொண்டு அழகு காட்டிவிட்டுச் சிரித்தாள்.

"பெண்ணே! நீ சிரிக்கிறாய். அழகு காட்டுகிறாய். முத்துமாலை வாங்கிக் கொடு, வைரமாலை வாங்கிக் கொடு என்று பிடிவாதம் செய்கிறாய். நான் ஒரு ஏழை மணியகாரன் என்பதை நீ மறந்துவிட்டாய் போலிருக்கிறது."

"ஆகா! இந்தப் பசப்பு வார்த்தைகளுக்கு ஒன்றும் குறைவில்லை. உங்கள் உடன்பிறந்த தம்பி இந்த நாட்டு மகாமண்டலேசுவரருக்கு வலது கை போன்றவர். அவர் மனம் வைத்தால் எதை எதையோ செய்ய முடிகிறது. உங்களை இந்த அறக்கோட்டத்து மணியகாரர் பதவியிலிருந்து வேறு பதவிக்கு உயர்த்த மட்டும் அவருக்கு மனம் வரவில்லை."

"அவன் என்ன செய்வான்? அவனுக்கு எத்தனையோ அரசாங்கக் கவலைகள். அவனுக்கு இருக்கிற நேரத்தில் அவன் மகாமண்டலேசுவரருக்கு நல்ல பிள்ளையானால் போதும்."

"விநாடிக்கு ஒருதரம் தம்பியின் பெயரைச் சொல்லிப் பெருமை அடித்துக் கொள்வதில் ஒன்றும் குறைவில்லை."

"இதற்காக அதை நான் விட்டுவிட முடியுமா, கோதை?" அவள் கையைப் பற்றிக் கெஞ்சும் பாவனையில் சமாதானத்துக்குக் கொண்டு வர முயன்றான் அண்டராதித்த வைணவன்.

அதே சமயம் முத்துச் சலாபம் இருந்த பகுதியிலிருந்து பெருங் கூப்பாடு எழுந்தது. கோதையும், வைணவனும் பதற்றமடைந்து என்னவென்று அறிந்து கொள்ளும் ஆவலுடன் கூடாரத்துக்கு வெளியே வந்து பார்த்தார்கள். சலாபத்தைச் சுற்றிலும் இருந்த கூடாரங்கள் தீப்பற்றிப் பெரிதாக எரிந்து கொண்டிருந்தன. மணற்பரப்பில் குதிரைகள் பாய்ந்து வரும் ஓசையும், வாளோடு வாள் மோதும் ஒலிகளும், ஓலங்களும், பயம் தொனிக்கும் கூக்குரல்களுமாக ஒரே குழப்பமா யிருந்தது. கடல் அலைகளின் ஓசையும் உடன் சேர்ந்து கொண்டதனால் ஒன்றும் தெளிவாக விளங்கிக் கொள்ள முடியவில்லை. யார் யாரோ திடுதிடுவென்று இருளில் ஓடினார்கள் போனார்கள், வந்தார்கள்.

"ஏதோ பெரிய கலவரம் நடக்கிறாற் போலிருக்கிறது" என்றான் வைணவன்.

"கூடாரத்துக்குள் வாருங்கள். விளக்கை அணைத்துவிட்டுப் படுத்துக் கொள்ளலாம்" என்றாள் கோதை.

அவர்கள் கூடாரத்துக்குள் திரும்ப இருந்தபோது அந்தப் பக்கமாக யாரோ ஒரு ஆள் தீப்பந்தத்தோடு விழுந்தடித்துக் கொண்டு ஓடி வருவது தெரிந்தது. பின்னால் கூட்டமாகச் சிலர் அப்படி ஓடி வந்த ஆளைத் துரத்திக் கொண்டு வந்தார்கள். ஓடி வந்தவன் எப்படியாவது தப்பினால் போதுமென்ற எண்ணத்துடன் தலைதெறிக்க ஓடிவந்து கொண்டிருந்தான். அவன் கோதையும், வைணவனும் நின்று கொண்டிருந்த பக்கமாக வந்தபோது அவ்விருவரும் அவனுடைய முகத்தைத் தீவட்டி வெளிச்சத்தில் ஒரு கணம் நன்றாகப் பார்க்க முடிந்தது.

"ஐயோ! இந்தப் பாதகனா?" என்ற வார்த்தைகள் கோதையின் வாயிலிருந்து மெதுவாக ஒலித்தன. வைணவனுக்கும் அவன் இன்னாரென்று புரிந்து விட்டது. உடல் ஒரு விநாடி மெதுவாக நடுங்கியது; புல்லரித்து ஓய்ந்தது. "கோதை! உள்ளே வந்துவிடு. துரத்திக் கொண்டு வருகிறவர்கள் நம்மைப் பிடித்துக் கொண்டு எதையாவது விசாரித்துத் தொந்தரவு செய்யப் போகிறார்கள்" என்று அவள் கையைப் பற்றிப் பரபரவென்று இழுத்துக் கொண்டு கூடாரத்துக்குள் போய் விட்டான். உள்ளே எரிந்து கொண்டிருந்த விளக்கையும் அணைத்து விட்டான். ஓடி வந்தவன் வேறு யாரும் இல்லை. முன்பொரு நாள் முன்சிறை அறக்கோட்டத்தில் நடு இரவில் வந்து தங்க இடம் கேட்டு வம்பு செய்த மூன்று முரட்டு ஆட்களில் ஒருவன்தான் அவன். என்ன நடந்தது? அவனை ஏன் துரத்திக் கொண்டு வருகிறார்கள்? சலாபத்துக்கு அருகில் கூடாரங்கள் ஏன் தீப்பிடித்து எரிகின்றன? — இவற்றையெல்லாம் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆசையும், தெரிந்துகொள்ள முடியாத சூழ்நிலையுமாகக் குழம்பிக் கலவரமுற்ற மனநிலையோடு விடிகிறவரை அந்தக் கூடாரத்து இருளிலேயே அடைபட்டுக் கிடந்தனர் அவர்கள் இருவரும்.

இரவின் நீண்ட யாமங்கள் எப்படித்தான் ஒவ்வொன்றாக விரைவில் கழிந்தனவோ? பொழுது விடிந்தபோது போர் நடந்து முடிந்த களம்போல் எல்லா ஒலிகளையும் விழுங்கித் தனதாக்கிக் கொள்ளும் ஒரு நீண்ட மோனம் அந்தப் பிரதேசத்தில் சூழ்ந்திருந்தது.

அண்டராதித்தனும் கோதையும் எழுந்திருந்து ஊருக்குப் புறப்படத் தயாரானார்கள். புறப்படுவதற்கு முன் முத்துச் சலாபமும், துறையின் பிரதான வீதிகளும், சிப்பிகளைக் குவித்து வீரர்கள் காத்து நிற்கும் சிப்பிக் கிடங்குகளும் இருந்த பகுதியில் போய்ப் பார்த்தனர்.

அந்தப் பகுதியில் கூடாரங்கள் எரிந்து சின்னாபின்னமாகக் கிடந்தன. ஆள் நடமாட்டம் இல்லாமல் களையின்றி ஒளியின்றி இருந்தது அப்பகுதி. கடைகளெல்லாம் மூடி அடைக்கப் பெற்றிருந்தன. கிடங்குகளில் பத்திரமாகக் குவிக்கப்பட்டிருந்த சிப்பிகள் மணற்பரப்பில் தாறுமாறாகச் சிதறிக் கிடந்தன. சில குவியல்களைக் காணவே இல்லை. நெடுந்தொலைவிலிருந்து வந்திருந்த வியாபாரிகள் பயத்துடனும், பதற்றத்துடனும் அவசரம் அவசரமாகக் கப்பலேறிக் கொண்டிருந்தார்கள். முதல் நாள்



இரவில் பாட்டும் கூத்துமாக அவர்கள் கூடாரங்கள் இருந்த இடத்தில் இப்போது வெறும் மணற் பரப்புத்தான் இருந்தது. கரவந்தபுரத்து வீரர்கள் சிலரும், முத்துக் குளிப்பைத் தொடர்ந்து மேற்பார்வை செய்து நிர்வகிப்பதற்காக நியமிக்கப்பட்டிருந்த அரசாங்கப் பிரதிநிதிகள் மூவரும் சலாபத்துக்கருகே அழிவு நடந்த இடங்களையும் சிப்பிக் கிடங்குகளையும் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் முகங்களில் கவலை தேங்கியிருந்தது. அங்கே யாரிடமாவது இரவு நிகழ்ந்த குழப்பத்தைப் பற்றி விசாரிக்க வேண்டுமென்று கோதைக்கும் அண்டராதித்தனுக்கும் ஆசை துருதுருத்தது.

"பார்த்தீர்களா? இதைக் காணும் போது அந்த முரடனும் அவனைச் சேர்ந்தவர்களும் செய்த வேலைதானென்று தோன்றுகிறது" என்றாள் கோதை.

# முதல் கட்டம்




1958 அக்டோபர் 1-ம் தேதி மெட்ரிக் முறை எடைகளும் அளவுகளும் அமுலுக்கு வந்துள்ளன. இந்தத் தேதியிலிருந்து. இராஜ்யங்களின் குறிப்பிட்ட சில பகுதிகளில் மெட்ரிக் எடைகள் சட்டப்படி புழக்கத்துக்கு வந்திருக்கின்றன.

அதேவிதமாக, அரசாங்க இலாக்காக்களிலும், தொழில்களிலும், குறிப்பாக—பருத்தி ஆலைகள், இரும்பு-உருக்கு ஆலைகள், எஞ்சினியரிங் தொழில்கள், கனரக கெமிகல் ஆலைகள், காகிதத் தொழில்கள், சிமெண்ட் தொழில்கள், சணல் தொழில்கள் ஆகியவற்றில் மெட்ரிக் முறை அமுலுக்கு வந்திருக்கிறது.

இந்தச் சீர்திருத்தம் சிறிது சிறிதாக நாடு முழுவதும் அமுலாக்கப்படும்.

## மெட்ரிக் முறை

சுலபமானது

ஒரே சீரானது

இப்போதுள்ள எடைகளும் அவைகளுக்குச் சமமான மெட்ரிக் எடைகளும்



இந்திய அரசாங்கத்தால் வெளியிடப்பட்டது

# மெட்ரிக் எடை மாற்றுப் பட்டியல்

உங்களுக்குத் தேவைப்படும் - வைத்திருங்கள்

| பலம் | கிராம் |
|---|---|
| 1 | 35 |
| 2 | 70 |
| 3 | 105 |
| 4 | 140 |
| 5 | 175 |
| 6 | 210 |
| 7 | 245 |
| 8 | 280 |
| 9 | 315 |
| 10 | 350 |
| 11 | 385 |
| 12 | 420 |
| 13 | 455 |
| 14 | 490 |
| 15 | 525 |
| 16 | 560 |
| 17 | 595 |
| 18 | 630 |
| 19 | 665 |
| 20 | 700 |
| 21 | 735 |
| 22 | 770 |
| 23 | 805 |
| 24 | 840 |
| 25 | 875 |
| 26 | 910 |
| 27 | 945 |
| 28 | 980 |
| 29 | 1015 |
| 30 | 1050 |
| 31 | 1085 |
| 32 | 1120 |
| 33 | 1155 |
| 34 | 1190 |
| 35 | 1225 |
| 36 | 1260 |
| 37 | 1295 |
| 38 | 1330 |
| 39 | 1365 |

| வீசை : 1 வீசை 40 பலம் | கிலோகிராம் | கிராம் |
|---|---|---|
| 1 | 1 | 400 |
| 2 | 2 | 800 |
| 3 | 4 | 200 |
| 4 | 5 | 600 |
| 5 | 7 | 000 |
| 6 | 8 | 400 |
| 7 | 9 | 800 |

| மணங்கு : 1 மணு 8 வீசை | கிலோகிராம் | கிராம் |
|---|---|---|
| 1 | 11 | 200 |
| 2 | 22 | 400 |
| 3 | 33 | 600 |
| 4 | 44 | 800 |
| 5 | 56 | 000 |
| 6 | 67 | 200 |
| 7 | 78 | 300 |
| 8 | 89 | 500 |
| 9 | 100 | 700 |
| 10 | 111 | 900 |
| 11 | 123 | 100 |
| 12 | 134 | 300 |
| 13 | 145 | 500 |
| 14 | 156 | 700 |
| 15 | 167 | 900 |
| 16 | 179 | 100 |
| 17 | 190 | 200 |
| 18 | 201 | 400 |
| 19 | 212 | 600 |

| கண்டி : 1 கண்டி 20 மணங்கு | கிலோகிராம் | கிராம் (100 கிராம் சுத்தமாக) |
|---|---|---|
| 1 | 223 | 900 |
| 2 | 447 | 700 |
| 3 | 671 | 600 |
| 4 | 895 | 400 |
| 5 | 1119 | 300 |

**1 கிலோகிராம் = 1,000 கிராம்**

DA 58/247 (1) TML

"பேசாமல் இரு! நமக்கு எதற்கு இந்த வம்பெல்லாம்? நிலைமை சரியில்லை. ஊருக்குப் போய்ச் சேருவோம்" என்று அவள் வாயை அடக்கி அழைத்துக் கொண்டு புறப்பட்டான் அண்டராதித்தன். சுகமாக முன்சிறைக்குப் போய்ச் சேருவதற்குள் இடைவழியில் கலவரங்கள், பூசல்களில் மாட்டிக் கொள்ளாமல் போய்ச் சேர வேண்டுமே என்று நினைத்துப் பயப்படுகிற அளவுக் குக் குழம்பியிருந்தன, புறப்படும்போது அவர்கள் மனங்கள்.

மறப்போர்ப் பாண்டியர் அறத்தினால் காத்து வந்த கொற்கைப் பெருந் துறையில் மறம் நிகழ்ந்து விட்டது. அலைகள் சங்குகளை ஒதுக்கிக் கரை சேர்த்து விளையாடும்துறையில் அநியாயம் நடந்து விட்டது. கடல் ஓலமிடுதல் தவிர மனிதர் ஓலமிட்டறியாத கொற்கையில் மனிதர் ஓலமிடும் கலவரமும் நடந்து விட்டது.

## மூன்றும் அத்தியாயம்

# நெருங்கிவரும் நெடும் போர்

அடுத்தடுத்து வந்த பயங்கரச் செய்திகளைக் கேள்விப்பட்டுப் பெரும் பெயர்ச் சாத்தன் பதறிப் போனான். நிலைமையை விவரித்து எழுதிய திருமுகத்துடன் அப்போதுதான் மானகவசனைத் தூதனுப்பி யிருந்தான். தூதுவன் புறப்பட்டுப் போன சிறிது நேரத்துக்குள் கொற்கையிலிருந்து அந்தப் புதிய செய்தி வந்தது.

"இரவில் ஆயுதபாணிகளான முரட்டு வீரர்கள் சிலர் தீப்பந்தங்களோடு கூட்டமாக வந்தார்கள். முத்துச்சலாபத்துக்கு அண்மையிலிருந்த கூடாரங்களுக்குத் தீவைத்து விட்டுக் காவலுக்கு இருந்த நம் வீரர்களோடு போரிட்டனர். குவித்து வைக்கப்பட்டிருந்த சிப்பிக் குவியல்கள் சூறையாடப்பட்டு விட்டன. அந்த முரட்டுக் கூட்டத்தில் யாருமே அகப்படவில்லை. சிலரைத் துரத்திப் பிடிக்க முயன்றும் முடியாமல் போய் விட்டது." கொற்கையிலிருந்து செய்தி கொண்டுவந்த ஆள் இப்படிக் கூறிய போது பெரும் பெயர்ச்சாத்தன் திகைத்துப் போய்விட்டான்.

"தொடர்ந்து முத்துக்குளிப்பு நடைபெறுகிறதோ, இல்லையோ?"

"இல்லை! தாற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. முத்துவாணிபத்துக்காக நெடுந் தொலைவிலிருந்து கடல் கடந்து வந்திருந்த வாணிகர்களெல்லாம் பயந்து போய்த் திரும்பிச் சென்று விட்டனர்."

"என்ன ஆனாலும் முத்துக்குளிப்போ, சலாபத்து வேலைகளோ தடைப்பட்டு நிற்கக் கூடாது. நம்மைப் பலவீனப் படுத்த விரும்புகிறவர்களுக்கு முன் நாம் பலவீனமடைவதுபோல் காட்டிக் கொள்வது நல்லதல்ல. இந்தத் திருமுகம் கொண்டு வரும் தூதனோடு பொறுக்கி எடுத்த வீரர்களாக நூறுபேர் அனுப்பி யிருக்கிறேன். இவர்களைக் காவலுக்கு வைத்துக் கொண்டு தொடர்ந்து முத்துக் குளிப்பை நடத்துங்கள். மற்ற ஏற்பாடுகளை இங்கே நான் கவனித்துக் கொள்கிறேன்" என்று முக்கியமான ஆள் வசம் ஒரு ஓலையும் நூறு வீரர்களையும் ஒப்படைத்து உடனே கொற்கைக்கு அனுப்பினான் பெரும்பெயர்ச் சாத்தன்.

பயமும், திகைப்பும், மேலும், மேலும் திடுக்கிடும் செய்திகளும் அவனைக் கவலைக்குள்ளாக்கிக் கொண்டிருந்தாலும் தன்னைப் பொறுத்த வரையில் உறுதியாக இருந்து காரியங்களைச்செய்து வரவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டிருந்தான் அவன்.

வடக்கு எல்லைப் பகுதிகளில் பலமான காவல் ஏற்பாடுகளைச் செய்திருந்த போதிலும் அங்கிருந்தும் சில கலவரச் செய்திகள் காதுக்கு எட்டிக் கொண்டுதான் இருந்தன. எல்லை முடியும் இடத்தில் நடப்பட்டிருந்த கொழுக்குத்துக் கற்கள் (எல்லை பிரியும் இடத்தை விளக்கும் அடையாளக் கற்கள்) இரவோடு இரவாகப் பிடுங்கி எறிந்து உடைக்கப் பட்டிருந்தனவாம்.

தன்னால் முடிந்த காவல் ஏற்பாடுகளைச் செய்து விட்டு அரண்மனைக்குச் செய்தி கொண்டுபோன மானகவசன் திரும்ப வருவதை எதிர்பார்த்திருந்தான் பெரும் பெயர்ச் சாத்தன். ஏற்கெனவே சந்தேகத்தின் பேரில் சிறை பிடிக்கப் பட்டிருந்த வடதிசை ஒற்றர்கள் சிலரைப் பயமுறுத்தியும், துன்புறுத்தியும், அவர்களிடமிருந்து ஒரு சில உண்மைகளை அறிய முடிந்திருந்தது.

படையெடுக்க முனைந்திருப்பவர்கள் யார் யாரென்றும், அவர்களுடைய நோக்கங்கள் என்னென்னவென்றும் பெரும் பெயர்ச்சாத்தன் ஒருவாறு தெரிந்து கொண்டிருந்தான். அரண்மனைக்கு அனுப்பிய திருமுகத்திலும் அதைக் குறிப்பிட்டிருந்தான். கரவந்த

புரத்துக் கோட்டை சிறந்த பாதுகாவல் அமைப்புக்களைக் கொண்டது. பராந்தக பாண்டியரும், பெரும் பெயர்ச் சாத்தவின் தந்தை உக்கிரனும் அவர்கள் காலத்தில் வடக்கு எல்லைப் பாதுகாப்பையும் வேறு சில வசதிகளையும் எண்ணித் திட்டமிட்டு உருவாக்கிய கோட்டை அது. ஆழமான அகன்ற அகழி எந்திரப் பொறிகளும் தந்திரச் செயல்களும் மிக்க உயரமான மதிற்சுவர். சிலப்பதிகாரத்து மதுரைக் காண்டத்தில் வருணிக்கப்பட்டிருந்த அந்நாளைய மதுரைக் கோட்டையை மனத்தில் கொண்டு கட்டப்பட்டிருந்தது கரவந்தபுரத்துக் கோட்டை. கோட்டைக் கதவுகளை அடைத்து, முட்டுக் கொடுப்பதற்கு மூன்று பெரிய கணையமரங்கள் தேவையென்றால் அதன் பெருமையை வேறு எப்படிக்கூறமுடியும்? இப்படியெல்லாம் இருந்தும் பாதுகாப்புக்காக மேலும் கவலை எடுத்துக் கொண்டான், அந்தக் கோட்டையின் சிற்றரசன். மகாமண்டலேசுவரரிடமிருந்தும், மகாராணியிடமிருந்தும் மறுமொழி கிடைப்பதற்கு முன்னால் தன்னால் ஆனவற்றை யெல்லாம் தயங்காமல், மயங்காமல் செய்ய வேண்டுமென்ற துடிதுடிப்பு அவனுக்கு இருந்தது.

அன்று மாலைக்குள் மானகவசன் மறுமொழி ஓலையோடு திரும்பி விடுவான் என்று அவன் ஒவ்வொரு விநாடியும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஆனால் மானகவசன் அன்று மாலை மட்டுமல்ல, மறுநாள் காலை வரையில் வரவே இல்லை. வேறு சில செய்திகள் பராபரியாக அவனுக்குத் தெரிந்தன.

கன்னியாகுமரிக் கோவிலில் யாரோ மகாராணியார் மேல் வேல் எறிந்து கொல்ல முயன்ற செய்தியைக் கேட்டபோதே அவன் மிகவும் கலங்கினான். அதன் பின் கூற்றத் தலைவர்கள் அரண்மனையில் ஒன்றுகூடித் தென்பாண்டி நாட்டின் எதிர்காலம் பற்றி விவாதிக்கப் போவதும் அவனுக்குத் தெரிந்திருந்தது. ஆனால் "இடையாற்றுமங்கலம் மாளிகையில் அந்நியர் அடிச்சுவடும் படமுடியாத பாதுகாப்பான இடத்திலிருந்து பாண்டிய மரபின் சுந்தரமுடியும், வீர வாளும் பொற் சிம்மாசனமும் கொள்ளை போய்விட்டன" — என்ற புதுச் செய்தியை அறிந்தபோது அவன் அடைந்த அதிர்ச்சி அவன் வாழ்நாளிலேயே பேரதிர்ச்சி.

"அடடா! வலிமையான தலைமையற்றிருக்கும் இந்த நாட்டுக்குத்தான் ஒரே சமயத்தில் எத்தனை சோதனைகள்? 'பட்ட காலிலேயே படும். கெட்ட குடியே கெடும்' என்பதுபோல் அடுத்தடுத்து வரும் இந்தத் துன்பங்களை யெல்லாம் மகாராணியார் எப்படித்தான் தாங்கிக் கொள்ளப் போகிறாரோ? கணவனை இழந்த கைம்மை நிலை. குமார பாண்டியர் காணாமற்போன துயரம்! பகைவர்களின் பலம் வாய்ந்த தொல்லைகள். அரசுரிமைப் பொருள்கள் கொள்ளை போன அவலம். ஐயோ, இந்தச் சமயத்திலா நான் போர்ச் செய்தியைப் பற்றிய திருமுகத்தைக் கொடுத்தனுப்ப வேண்டும்? இதை வேறு கேள்விப்பட்டால் அவர்கள் மனம் எவ்வளவு வேதனைப்படும்? தெய்வத்துக்குச் சமமான மகாராணியாரின் நெஞ்சம் இந்நாட்டையும், தம் புதல்வனையும், எதிர்கால ஆட்சியையும் பற்றி எத்தனை எத்தனை உயர்ந்த



எண்ணங்களை எண்ணிக் கொண்டிருக்கின்றது? ஐயோ! ஊழ்வினையே! எங்கள் மகாராணி 'பாண்டிமாதேவி'யின் எண்ணங்களுக்கு நீ என்ன முடிவு வகுத்து வைத்திருக்கிறாயோ?"—

இவ்வாறு எண்ணி நெடுமூச்செறிந்த பெரும் பெயர்ச் சாத்தனின் மனக் கண்களுக்கு முன்னால் ஒரு கணம் பாண்டிமாதேவியின் சாந்தம் தவழும் தெய்விக முகமண்டலம் தோன்றி மறைந்தது. ஏனோ, மகாராணி பாண்டிமாதேவியின் திருமுகம் தோன்றிய மறுகணமே அதை ஒட்டித் தோன்றினாற்போல் கன்னியாகுமரி அம்மனின் முகமும் தோன்றியது. மல்லிகை மணத்தை நுகர்ந்த அளவில் பூவின் உருவை மனம் உரு

வெளியில் கற்பித்துக் காண முயலுமே; அப்படிப்பட்ட ஒரு இயைபு அது.

பெரும் பெயர்ச் சாத்தன் அவன் தந்தையைப் போலவே அஞ்சாநெஞ்சம் படைத்த வீரன். அவன் தந்தை உக்கிரன் மகாமன்னரான பராந்தக பாண்டியரையே பல முறைகள் எதிர்த்துப் போரிட்டு அதன் பின்பே அவருக்குப் பணிந்து நண்பனுனன். அத்தகைய திடமான வீர பரம்பரையில் பிறந்திருந்தும் நல்லவர்களுக்கு வரும் துன்பங்களைக் காணும்போது அவன் மனம் நெகிழ்ந்து விடுகிறது.

ஒரு புறம் நாட்டின் சூழ்நிலைகளைப் பற்றிய தவிப்பு, மறுபுறம் தூது போன மானகவசன் இன்னும் ஏன் திரும்பி வரவில்லை என்ற கவலை. இரண்டும் பெரும் பெயர்ச் சாத்தனைப் பற்றிக் கொண்டு அவன் அமைதியைக் குலைத்தன.

"எதற்கும் இன்னொரு தூதனை அனுப்பி விட்டால் நல்லது. காரியம் பெரியது. மெத்தனமாக இருந்து விடக் கூடாது. மானகவசன் போய்ச் சேர்ந்தானே, போகவில்லையோ? போகும்போதோ, அல்லது திரும்பி வரும்போதோ இடைவழியில் அவனுக்கு என்ன நேர்ந்ததோ?"—என்று நினைத்துப் பார்க்குங்கால் பற்பல விதமான ஐயப்பாடுகள் அவனுக்கு உண்டாயின. உடனே மற்றொரு தூதனிடம் கொற்கையில் நடந்த குழப்பம், வடவெல்லையில் கொழுக் குத்துக் கற்கள் உடைபட்ட விவரம் எல்லாவற்றையும் விவரித்த திருமுகத்தை எழுதிக் கொடுத்து அனுப்பினுன். அப்புறமும் பெரும் பெயர்சாத்தனின் மனத்தில் நிம்மதி ஏற்படவில்லை. எண்ணங்களிலிருந்து விடுபட்டுச் சிந்தனைகளைத் தவிர்க்க முயன்றலும் மறுபடியும் அவன் மனம் வலுவில் சிந்தனைகளிலேயே போய் ஆழ்ந்தது.

கொற்கையில் புகுந்து குழப்பம் செய்ததுபோல் இடையாற்றுமங்கலத்தில் நடந்த கொள்ளைக்கும் எதிரிகள்தான் காரணமோ என்று நினைத்தது அவன் மனம். "இவ்வளவெல்லாம் இங்கே குழப்பங்கள், சூழ்ச்சிகள் நடக்கின்றனவே; குமார பாண்டியர் எங்கிருந்தால்தான் என்ன? ஏதாவது ஒரு குறிப்புக் கூடவா அவர் காதுக்கு எட்டாமல் இருக்கும்? தளபதி வல்லாள தேவனின் படைத்திறனும், இடையாற்றுமங்கலம் நம்பியின் இணையற்ற சாமர்த்தியமும் எங்கே போய் விட்டன?"

மகாமண்டலேசுவரரை அவன் என்றும் புரிந்துகொள்ள முடிந்ததில்லை. புரிந்து கொள்கிற அளவுக்கு அவனை அவர் நெருங்க விட்டதும் இல்லை. சாமர்த்தியமே உருவான ஒரு பெரும்புதிர் என்று அவரைப் பற்றி அவன் முடிவு செய்து வைத்திருந்தான். தளபதி வல்லாள தேவன் கடமையில் கருத்துள்ளவன், சிறிது உணர்ச்சித் துடிப்பு மிகுந்தவன் என்பது அவன் அறிந்த விவரமே. மகாராணியாரையும் குமார பாண்டியரையும் பொறுத்தமட்டில் அவனுக்கு ஒரேவிதமான எண்ணம்தான். "வணக்கத்துக்குரியவர்கள். அன்பும், அனுதாபமும் செலுத்தத் தக்கவர்கள்"-தன் உயிரின் இறுதித் துடிப்புவரை அந்தப் பேரரசியின் வாழ்வுக்குக் கட்டுப்பட்டு உதவ வேண்டுமென்ற அவன் எண்ணத்தை ஊழி பெயரினும் மாற்ற இயலாது. இல்லையானல் அவனைத் தங்களுடையவனுக்கிக் கொள்ள வடதிசை அரசர் பலமுறைகள் முயன்றும் அவன் மறுத்திருக்க மாட்டான்.

மனத்தின் தெளிவற்ற நிலையைச் சரிசெய்து கொள்வதற்கு எங்கேயாவது திறந்த வெளியில் காற்றுப் படும்படி உலாவ வேண்டும் போலிருந்தது.

"மானகவசனே, வேறு ஆட்களோ வந்தால் என்னிடம் அனுப்புங்கள்" என்று அங்கிருந்தவர்களிடம் சொல்லி விட்டு மேல்மாடத்துத் திறந்த வெளி முற்றத்துக்குச் சென்றுன் அவன்.

மேன்மாடத்தில் அந்தி மாலைக்காற்று சிலுசிலுவென்று வீசியது. 'காலத்தால் அழிக்க முடியாத பெருண்மை நான்' என்று கூறுவதுபோல் வடமேற்கே பொதியமலை பரந்து கிடந்தது. ஆகாயப் பெருங்குடையை அணைய முயலும் அந்த எழில் நீலப் பேரெழுச்சியை—காலத்தை வென்றுகொண்டு நிற்கும் கல்லின் எழுச்சியைத் திறந்த வெளியிடையே பார்க்கும்போது நம்பிக்கை பிறப்பதுபோல் இருந்தது பெரும் பெயர்ச் சாத்தனுக்கு. 'தன் பக்கத்தில் வடக்கு எல்லையில் போர் நெருங்கி வந்து கொண்டிருக்கிறதே' என்பதைப் பற்றி இந்த மலைக்குச் சிறிதும் வாட்டமிருப்பதாகத் தெரியவில்லையே என்று வேடிக்கையாக நினைத்தான். மேன்மாடத்துப் படிகளில் யாரோ வேகமாக ஏறி வரும் காலடியோசை கேட்டது. அவன் திரும்பிப் பார்த்தான். ஒரு சாதாரண வீரன் வந்து வணங்கி நின்றுன்.

"என்ன?"

"தூதன் மானகவசன் திரும்பி வந்திருக்கிறுன் ......ஆனல்....."

"ஆனல் என்ன?"

வந்த வீரன் பதில் சொல்வதற்குத் தயங்குவதுபோல் தெரிந்தது. (தொடரும்)

# தரத்திற்கும்
# உறுதிக்கும்
# நிகரற்றது



# ஹத்திபாயின்




## ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்
## பாத்திரங்கள்

உத்திரவாதமுள்ளவை

எப்பொழுதும் பிரகாசத்துடன், நீடித்து உழைப்பவை

* * *

## ஹத்திபாய் துளஸிதாஸ் & ஸன்ஸ்

122, கன்ஸரா சால், பம்பாய் 2.





# ஆவிகள் விஜயம்

**வ**தன சந்திர சௌத்ரி என்பவர் இப்பொழுதுதான் நரகத்துக்குப் புதிதாக வந்தவர். ரௌரவ நரகத்தில் அவருக்கு இடம் கிடைத்திருக்கிறது. எமதர்மராஜன் அன்று நரகத்தைப் பார்வையிடுவதற்காக விஜயம் செய்திருந்தார். அவரைப் பார்த்ததும் வதன சந்திரசௌத்ரி கைகுவித்து முழங்கால் மண்டியிட்டுத் தலைவணங்கி விநயமே உருவாக நின்று கொண்டிருந்தார்.

அந்த பவ்ய பாவத்தைக் கண்ணுற்ற எமதர்மன், "உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார்.

"சுவாமி! இரண்டே இரண்டு மணி நேரத்துக்கு எனக்கு விடுமுறை வேண்டும்!"

"நீ இங்கே எப்பொழுது வந்தாய்?"

"நான் இங்கே வந்து ஏறக்குறைய ஒரு மாதம் ஆகிறது!"

"அதற்குள் எதற்காக விடுமுறை வேண்டும் என்கிறாய்? விடுமுறை பெற்றுப் போய் என்ன செய்யப் போகிறாய்?"

"சுவாமி! ஒரே ஒரு தடவை மண்ணுலகம் போய் வர விரும்புகிறேன். இன்று மாலை ஐந்து மணிக்கு சர்வகலாசாலைக் கட்டடத்தில் என் மரணத்துக்குத் துயரம் தெரிவிப்பதற்காக வேண்டி ஒரு அநுதாபக் கூட்டம் கூடவிருக்கிறது. அதைப் பார்த்து வர வேண்டும் என்று வெகு ஆசையாக இருக்கிறது!"

எமலோகத்துப் பதிவாளர் அதாவது ரிஜிஸ்தராரான சித்திரகுப்தர் பக்கத்திலேயே தான் நின்று கொண்டிருந்தார். எமதர்மன் அவரைப் பார்த்து, "இந்த ஆவியின் பழைய பெயர் என்ன?" என்று கேட்டார்.

"இந்த ஆவியின் பழைய பெயர் வதன சந்திர சௌத்ரி என்பதாகும். இவனுடைய தொழில் வக்காலத்து, வியாபாரம் இன்னும் என்ன என்னவெல்லாமோ. கிட்டத்தட்ட பத்து வருஷங்கள் கார்ப்பரேஷன் அங்கத்தினனாகவும் ஐந்து வருஷங்கள் வரை சட்ட சபை அங்கத்தினனாகவும் இவன் இருந்திருக்கிறான். இவன் இங்கே வந்து ஒரு மாதம் ஆகிறது. இவன் எத்தனையோ விதமான தீச் செயல்கள் செய்திருக்கிறான். அதற்காக இவனுக்கு ஆயிரம் ஆண்டுகள் நரக வாசம் தண்டனையாக விதிக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது ரௌரவ நரகத்தின் 'க' வென்னும் பகுதியில் இவன் இருக்கிறான். இப்பொழுது இவன் நடந்து கொள்ளும் முறையில் குறை எதுவும் இல்லை. சரியாகத்தான் நடந்து கொள்கிறான். இரண்டு மணிநேரம் இவனுக்கு விடுமுறை அளிக்கலாம். அநுதாபக் கூட்டத்தில் அவன் நண்பர்களும் புகழ் பாடுபவர்களும் அவனைப் பற்றி என்ன சொல்கிறார்கள் என்பதைக் கேட்கஆசைப்படுகிறான். தன்னைப் பற்றிப் பிறர் சொல்வதைக் கேட்க ஆசைப்படுவது யாருக்குமே இயல்புதானே?" என்றார் சித்திர குப்தர்.

"இன்று அநுதாபக் கூட்டம் நடக்கவிருக்கிறது என்னும் செய்தி இவனுக்கு எப்படிக் கிடைத்தது?"

"செய்தி வருவதற்கு வேண்டிய வழி வகைகளில் என்ன குறைவு இருக்கிறது, தர்மராஜா? தினமும் எத்தனையோ பேர்கள் செத்து நேராக நரகத்துக்குத்தான் வருகிறார்கள். அவர்கள் மூலம்தான் இவனுக்கு இந்தச் செய்தி கிடைத்திருக்கிறது!" என்று கூறினார் சித்திரகுப்தர்.

"சரி, இரண்டு மணி நேரம் இவனை வெளியே விடலாம். ஆனால் இவனுடன் கூடவே கணமும் பிரியாமல் ஒரு காவலாளியும் இருக்க வேண்டும்!" என்று உத்தரவிட்டார் எமதர்மராஜன்.

சித்திரகுப்தர் குரல் கொடுத்ததும் காகஜங்கன் வந்து நின்றான். "காகஜங்கா! இந்தப் பாவியுடன் நீ மண்ணுலகம் வரை போய் வர வேண்டும். வழியில் இவன் புதிது தீச் செயல்கள் எதுவும் செய்யாமல் பார்த்துக் கொள். சரியாக இரண்டு மணி நேரத்துக்கெல்லாம் திரும்பவும் அழைத்துக் கொண்டு வந்து சேரு!" என்று உத்தரவிட்டார்.

"உத்தரவு" என்று சொல்லிக் காகஜங்கன் வதனசந்திர சௌத்ரியின் கையைப் பிடித்துக் கரகரவென இழுத்துக் கொண்டு எமலோகத்திலிருந்து பூவுலகத்துக்குப் புறப்பட்டான்.

**அ**டுத்த 'சில கணங்களுக்கெல்லாம்' எமதர்மன் இன்னொரு பகுதியைப் பார்வையிடுவதற்காக வந்தார். அவரைப் பார்த்ததும் கனசியாம கோஷால் கைகட்டி வாய் புதைத்து வணக்கம் தெரிவித்து நின்றார்.

"உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார் எமதர்மன்.

"சுவாமி! இரண்டு மணி நேரம் அவகாசம் அளிக்க வேண்டும். மண்ணுலகம் வரை போய் வர விரும்புகிறேன்!" என்றார் கனசியாம கோஷால்.

"உனக்கும் அநுதாபக் கூட்டம் நடக்கப் போகிறதா, என்ன?...நீ இங்கே வந்து எத்தனை காலமாகிறது?" என்று சௌத்ரியைக் கேட்டது போலவே கேட்டார் எமதர்மன்.

"நான் வந்து இரண்டு வருஷங்கள் ஆகின்றன. ரௌரவ நரகத்தின் 'த' பகுதியில் இருக்

கிறேன். எனக்காக யாருமே அனுதாபக் கூட்டம் கூட்டவில்லை, சுவாமி! என் நண்பர்களெவரும் நல்லெண்ணக்காரர்கள் இல்லை. சுத்தச் சுயவர்கள்; சுயநலமிகள். நான் இறந்த பிறகு என்னுடைய சொந்தப் பத்திரிகையாகிய 'காலகேது'விலேயே அரைக் காலம் செய்திதான் வெளியாகியிருந்தது. ஒரு நல்ல படம்கூடப் போடவில்லை. வதன சந்திர செளத்ரி எனக்கு மிகவும் ஆப்தர். அவருக்காக நடக்கவிருக்கும் அனுதாபக் கூட்டத்தில் கலந்து கொள்வதற்குத் தான் நான் விடுமுறை வேண்டுகிறேன்!'' என்றார் கனசியாம கோஷால்.

சித்திரகுப்தர் தமது கணக்குப் புஸ்தகத்தைப் புரட்டிப் பார்த்தார். பிறகு, ''நீ ரொம்ப ரொம்பக் கெட்டவன். எமலோகத்துக்கு வந்துங்கூடப் பொய் பேசுகிறாய். உன் பத்திரிகையில் எப்பொழுதும் நீ வதன சந்திர செளத்ரியைத் திட்டிக் கொண்டுதானே இருந்திருக்கிறாய்?'' என்று கேட்டார்.

''சுவாமி! ஆசிரியரின் பாரபட்சமற்ற கடமையை உத்தேசித்து அப்படிச் செய்ய நேர்ந்ததே யொழிய, வேறு ஒன்றும் இல்லை. ஆரம்பத்தில் எனக்கும் வதனுக்கும் வெகு சிநேகிதம். பிற்காலத்தில்தான் கொஞ்சம் மனத்தாங்கல் ஏற்பட்டது. இப்பொழுது இருவருமே இறந்து விட்டோம். எனவே, எங்கள் விரோதமும் இறந்துவிட்டது. மரணந்தானி வைராணி என்பது முதுமொழி யல்லவா? விரோதபாவங்கள் அனைத்தும் மரணத்தோடு கூடவே மூடிந்துவிட வேண்டியவை தானே? எனவே, நாங்கள் இருவரும் இப்பொழுது மறுபடியும் நண்பர்களாகி விட்டோம்!'' என்றார் கோஷால்.

''சரி, போனால் போகட்டும். இவனையும் இரண்டு மணி நேரம் விட்டுவிடு. ஆனால் கூடவே ஒரு காவலாளியை அனுப்ப மட்டும் மறந்துவிடாதே!'' என்றார் எமதர்மன்.

சித்திரகுப்தர் எப்படி மறுத்துச் சொல்வார்? எமதர்மனின் எண்ணப்படியே பிருங்கரோலன் என்னும் எமதூதனைக் கனசியாம கோஷாலுடன் அனுப்பி வைத்தார்.

★

காலஞ்சென்ற வதன சந்திர செளத்ரியின் அனுதாபக் கூட்டத்துக்காக நல்ல கூட்டம் கூடியிருந்தது. ஆயிரக்கணக்கான மக்கள் குழுமியிருந்தனர். அவைத் தலைவராக ஒய்வு பெற்ற மாவட்ட அதிகாரியும் ஸெஷன்ஸ் ஜட்ஜுமான ராய்பஹதூர் கோவர்த்தன மித்திரர் மேடையில் அமர்ந்திருந்தார். அவருக்கு வலதுபுறத்தில் முக்கிய பேச்சாளராகப் பேராசிரியர் ஆங்கிரஸ காங்குலி உட்கார்ந்திருந்தார். இடதுபுறத்தில் வதன செளத்ரியின் அத்யந்த நண்பரும் கூட்டம் கூட்டுவதற்குப் பொறுப்பாளருமான பாரிஸ்டர் கோகில்ஸென் அமர்ந்திருந்தார். இன்னும் மதிப்புக்கும் மரியாதைக்கும் உகந்த எத்தனையோ பேர்கள் பக்கத்திலேயே உட்கார்ந்திருந்தார்கள். பேச்சாளர்களுக்காக இரண்டு 'மைக்'குகள் வைக்கப்பட்டிருந்தன. கூட்டத்தின் பற்பல பகுதிகளிலும் பல ஒலி பெருக்கிகள் பொருத்தப்பட்டிருந்தன.

வதன சந்திர செளத்ரி தமது காவலாளியான எமதூதனுடன் மேடையிலேயே நின்று கொண்டிருந்தார். கனசியாம கோஷாலைப் பார்த்ததும், ''நீ என்ன நோக்கத்துடன் இங்கே வந்து நிற்கிறாய்? கூட்டத்தைக் கலைக்கவா? அல்லது குழப்பத்தை விளைவிக்கவா?'' என்று கேட்டார்.

''அடேடே! அப்படியெல்லாம் நான் எதற்காகச் செய்யப் போகிறேன்? நீ என்னுடைய பழைய நண்பன் இல்லையா? உன்னைப்பற்றிய புகழுரைகளைக் கேட்டு இருதயத்தைக் குளிரச் செய்து கொள்வதற்காகவே வந்திருக்கிறேன். இன்று எமதர்மன் இரக்கம் காட்டி நரகவாசிகளான நம் இருவருக்கும் மனமுவந்து விடுமுறை அளித்ததற்கு நாம் அவருக்கு நன்றிக்கடன் பட்டிருக்கிறோம்!'' என்றார் கனசியாம கோஷால்.

முக்கிய பேச்சாளரான ஆங்கிரஸ காங்குலிக்குப் பின்னால் வதன செளத்ரியும், தலைவரான கோவர்த்தன மித்திரருக்குப் பின்னால் கனசியாம கோஷாலும் நின்று கொண்டார்கள். இரண்டு எமதூதர்களும் தங்கள் தங்கள் கைதிகளின் தோள் பட்டைகள்மீது கைவைத்த வண்ணம் நின்று கொண்டிருந்தார்கள். சபையில் உள்ள யாருக்குமே அந்த நால்வரும் அங்கே அப்படி நின்று கொண்டிருந்தது தெரியாது. ஆவி உலகத்தவர்கள் நின்று கொண்டிருப்பது மானிட உலகத்தவர்களுக்கு எப்படித் தெரியமுடியும்?

எல்லாவற்றுக்கும் முதலாவதாகப் பூபாலி வஸுவின் பிரார்த்தனை கீதம் நடைபெற்றது. அதற்குப் பின் ஒரு பாடல்மூலம் வதன சந்திர செளத்ரியின் புகழ் பாடப்பட்டது.

'புண்ணிய மூர்த்தியான வதன சந்திர செளத்ரியை இன்று நினைவு கூருவோம். விண்ணுலகெய்திய அவர் ஒரு பெரிய ராஜரிஷி. லோகமான்யர். எல்லாருக்கும் முதன்மையானவர். கர்மயோகி. தர்மவீரர்' - இது போன்ற சொற்களைக் கொண்டு பாமாலை சூட்டிப் பாடப்பட்ட கவி அது.

பாடல்கள் முடிந்ததும் புல்லாங்குழலும் மிருதங்கமும் சோக கீதம் இசைக்கக் குமாரி ஷுலு சட்டர்ஜியின் துயர நிருத்தியம் ஒன்று நடந்தது. அது சந்தர்ப்பத்துக்கு மிகவும் உகந்ததாக அமைந்திருந்தது என்பதை இங்கு விளக்கிச் சொல்லத் தேவையில்லை.

★

அதற்குப் பிறகு தலைவர் கேட்டுக் கொண்ட பிரகாரம் பேராசிரியர் ஆங்கிரஸ காங்குலி மகாத்மாக்களைக் காட்டிலும் பல படிகள் மேலான காலஞ்சென்ற செளத்ரியின் வாழ்க்கை வரலாற்றினை வெகு விஸ்தாரமாக எடுத்துச் சொல்லலானார்.

''இன்று நாம் எவரை நினைவு கூருவதற்காக இங்கு கூடியிருக்கிறோமோ, அவர் நம்மைத் துயரக்கடலில் தத்தளிக்கும்படி விட்டு விட்டு





1958-ம் வருஷத்திய அகில இந்திய ரேடியோ லலித சங்கீதப் போட்டியில் குமாரி டி. கே. ராதா முதல் பரிசு பெற்ருள். இந்தப் பரிசை ஜனாதிபதி ராஜேந்திரப் பிரசா திடமிருந்து அவள் மகிழ்ச்சியோடு பெறும் காட்சியைப் படத்தில் காணலாம்.

தனயர்களாக விளங்கும் அவரது புத்திரர்கள் வருங்காலத்தில், புண்ணியமே உருவான தங்கள் தந்தையின் காலடி வழியைப் பின்பற்றுவார்கள் என்றே நம்பு கிறேன்.''

இம்மாதிரி இன்னும் எத்தனையோ விஷயங்களை ஆங்கிரஸ காங்குலி தமக்கே உரிய பாணியில் மணிக் கணக்காகப் பொழிந்து தள்ளினுர்.

*

அதைக் கேட்ட கனசியாம கோஷாக் மெதுவான குரலில், கூடியிருக்கும் மக்களின் காதில் விழாத வகையில் ''வதன்! இந்த ஆசாமி செவிகளில் தேன் மாரியே பொழிந்து விட்டார். பார்த்தாயா?'' என்ருர்.

அதற்குப் பிறகு உற்சாகமும் ஊக்கமும் ஒருங்கே அமைந்த ஒரு இளைஞன் - அவன் ஒரு பெரிய கவிஞன் — வசன கவிதை ஒன்றை வெகு அழகாகப் படித்தான்.

''வானவீதியிலே சொர்ணச் சுவடு படிந்திருக்கிறதே. அது எப்படி ஏற்பட்டது?

தேஜோமயமான திவ்ய ரதத்தின் டயர்கள் உராய்ந்து சென்றதனுல் ஏற்பட்டது!

அதே பாதை வழியாகத்தான் வதன சந்திரர் தெய்வ லோகத்துக்குச் சென்ருர்! அங்கே அவருக்காக யார் யார் வழிமேல் விழி வைத்துக் காத்திருக்கிருர்கள்? ஊர்வசி, ஆபரோதிதா முதலியவர்கள்!''

இம்மாதிரி அந்தக் கவிதை பக்கம் பக்கமாகப் போய்க் கொண்டிருந்தது.

அப்புறம் எத்தனையோ பேர் பேசினுர்கள். பிறகு பாரிஸ்டர் கோகில் ஸென் எழுந்தார். முன்னுல் பேசியவர்கள் மிச்சம் மீதி வைத்திருந்ததை விடாமல் வர்ணித்தார். பிறகு ''காலஞ்சென்ற அந்த மகானுக்குச் சலவைக் கல்லால் ஆன ஒரு சிலை செய்து தேச பந்து பார்க்கிலோ, தேசப் பிரியர் பூங்காவிலோ ஸ்தாபிக்க வேண்டும். இப்புனித காரியத்துக்குச் சந்தா வசூலிக்கவும் மற்றக் காரியங்களைக் கவனித்துக் கொள்ளவும் குறிப்பிட்ட பெரியார்களைக் கொண்ட ஒரு நிர்வாகக் கமிட்டி நிறுவப்பட வேண்டும். என் இந்த ஆலோசனையை எல்லாரும் ஆமோதிப்பார்கள் என்றே நம்புகிறேன்!'' என்ருர்.

பின் பக்கத்துப் பெஞ்சியில் உட்கார்ந்திருந்த ஒருவர் எழுந்து, ''வதன சந்திர சௌத்ரியை எங்களுக்கு நன்ருகத் தெரியும். எனவே, இறந்தவரை நாங்கள் பிழைக்க வைக்க விரும்பவில்லை. அதனுல் அவர் சிலைக்காக நாங்கள் யாரும் ஒரு தம்பிடி கூடத் தரமாட்டோம்'' என்ருர்.

கூட்டம் கலகலக்கும்படி கைதட்டும் சத்தம் எழுந்தது. முதலில் பயந்தாற்போலக் கொஞ்சமாக ஆரம்பித்தது. பின்னுல் கூட்டத்தினர் உற்சாகப் படுத்தவே வானம் அதிரும் அளவுக்கு ஏகமாக வலுத்து விட்டது.

மண்ணுலகை நீத்து விண்ணுலகெய்தி விட்டார். அவருடைய பூத உடல் மடிந்து ஒழிந்ததே ஒழியப் புகழ் உடல் மரிக்கவில்லை. மனிதன் இறந்து விட்டாலும் அவனுடைய ஆத்மா அமரத்துவம் பெற்றது. எனவே, நாம் பக்தி சிரத்தையுடன் சமர்ப்பிக்கும் நமது சிரத்தாஞ்சலியை ஏற்றுக் கொள்வதற்காக அவருடைய அமர ஆத்மா நம்மிடையே விஜயம் செய்திருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. என் உள் மனம் கூறுவதை என் வெளி மனம் ஆமோதிக்கிறது. காலஞ்சென்ற வதனசந்திர சௌத்ரி தூய ஒழுக்கம் படைத்தவர்; தர்ம கர்மங்களில் பெரும் சிரத்தை கொண்டவர். இம் மண்ணுலகத்துக்கு அப்பாற்பட்டவராக, மாந்தருக்குள் ஒரு தெய்வமாக அவர் விளங்கினுர்.

''இதோ நமக்கெதிரே காட்சியளிக்கும் இந்த எண்ணெய்ச் சித்திரத்தைக் கவனியுங்கள். இது அந்தப் பெரியாரின் திருவுருவம் தான். எத்தனை அழகான தேகக்கட்டு! ஆஜானுபாகுவான உடல் அமைப்பு! நீலமேக சியாமள வர்ணம்! அகன்று நீண்ட ஆலமரத்தை யொத்த மார்பு! பலாச இலையையும் தாமரை இதழையும் ஒருங்கே காணலாம், அவருடைய மலர் விழிகளில்! மார்பை மறைத்துக்கொண்டு தொங்கும் தாடியின் கம்பீரம் தான் எத்தகையது! அவர் ஏக காலத்தில் கர்மயோகியாகவும் தர்ம யோகியாகவும் ஞான யோகியாகவும் விளங்கினுர். மூன்றும் ஒருங்கே சேர்ந்த இந்த அற்புத நவீனக் கலவையைக் காண்பது அரிது. அரிது: அரிதிலும் அரிது.

''எந்த முறையில் பொருள் ஈட்டினுரோ, அதே முறையில் எத்தனையோ நல்ல காரியங்களுக்குப் பணத்தைப் பணம் என்று பாராமல் தண்ணீராகச் செலவிட்டிருக்கிருர்.

''சுருங்கக் கூறுமிடத்து, அவர் உண்மையில் ஒரு ராஜ ரிஷியாக வாழ்ந்தார் என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை. தந்தைக்கேற்ற

குழப்பம்! கொஞ்சம் குறைந்ததும் கோகில் ஸென், "எங்களுக்கு அசிரத்தையுடன் வழங்கும் எந்த நன்கொடையும் தேவை யில்லை. காலஞ்சென்ற பெரியாரின் குமாரர் களே எல்லாச் செலவையும் ஏற்றுக் கொள் வார்கள்" என்றார். மேடையில் இருந்த ஒருவர் மெதுவான குரலில், "ஹியர், ஹியர்!" என்று ஆமோதித்தார்.

அடுத்தபடியாகச் சபைத் தலைவர் கோவர்த்தன் மித்திரர் பேச எழுந்தார். நீதிபதியாக இருந்தபொழுது அவர் எத்தனை எத்தனையோ நீண்ட நீண்ட தீர்ப்புகள் எல் லாம் கூறியிருக்கிறார். இரண்டு மூன்று மரண தண்டனை வழக்குகளில் கூட அவர் தீர்ப்பு வழங்கியிருக்கிறார். ஆனால் கூட்டத்தில் பேச வ தென்றால் அவருக்குக் குளிர் ஜுரமே கண்டு விடும். நாக்கு உளறத் தொடங்கி விடும்; பற்கள் தந்தி வாசிக்க ஆரம்பித்து விடும்.

அவர் பேச வேண்டிய பிரசங்கத்தைக் கோகில் ஸென் தான் எழுதிக் கொடுத்திருந் தார். கோவர்த்தன் மித்திரர் எழுந்து அந்தப் பிரசங்கத்தைப் படிப்பதற்காகத் தொண் டையைக் கனைத்துக் கொண்டார். இதே சமயம் ஆவி உருவத்தில் வந்திருந்த கன சியாம கோஷால் 'டபக்' என்று தாவி அவர் தோள் மீது அமர்ந்து கொண் டார். எமதூதன் பிருங்க ராவன் அவரைத் தடுத்து நிறுத்தப் பார்த்தான். ஆனால் அதற்குள்ளாகவே கோவர்த்தன பாபுவின் காது வழியாகக் கன சியாம கோஷால் அவ ருடைய இருதயத்துள் புகுந்துவிட்டார். அப்புறம் எமதூதன் என்ன செய் வான், பாவம்!

மனித உடலில் ஆத்மா அடங்கக்கூடிய இடம் மிகச் சிறியது. இருதயத்தில் இருக்கும் இடத்தில் ஒரே ஒரு ஆத்மாதான் வாழ முடியுமே ஒழிய இரண்டு ஆத்மாக்கள் சேர்ந்து வாழ முடியாது. எனவே, கன சியாம கோஷாலின் ஆவி புகுந்ததும் கோவர்த்தன மித்திரரின் ஆத்மா ஒரு மூலையில் போய்ப் பதுங்கிக் கொண்டது. அதை அடக்கி ஒடுக்கி விட்டுக் கனசியாம கோஷாலின் ஆவி உரக் கப் பிரசங்கம் செய்யத் தொடங்கிவிட்டது.

"மதிப்புக் குரிய சகோ தரிகளே! சகோதரர்களே! நான் அதிகம் பேசப்போவ தில்லை. கடைசிப் பெஞ்சியி லிருந்து பேசினாரே, அவ ரின் பேச்சுத்தான் எழுத் துக்கு எழுத்து உண்மை. வதனசந்திர சௌத்ரியை நாம் எல்லோரும் நன்கு அறிவோம். உயிருடன் இருந்தவரை அவர் தம்மைப்பற்றித் தம்பட்டம் தட்டிக் கொள்வதில்தான் குறியாயிருந்தார். தற் புகழ்ச்சிக்கு ஒரு எடுத்துக்காட்டாக விளங்கி வந்தார். இறந்த பிறகும் அவரைப் புகழ்வதி லிருந்து நமக்கு விடுதலை கிடைக்கவில்லை.

"நம் துரதிர்ஷ்டத்தை என்ன வென்று சொல்வது? அவருடைய ஸ்துதி பாடும் உற்றார்களும் உறவினர்களும், அவரைத் தெய்வமாக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக் கிறார்கள். ஆனால் நான் சொல்கிறேன்; இனி அந்த ஏமாற்று வித்தை நம்மிடம் பலிக்காது. ஜம்பம் சாயாது! வதன் சொர்க்கத் துக்குச் செல்லவில்லை. நரகத்துக்குத்தான் போயிருக்கிறார். அவரைப் போன்ற—ஏன் அவனுக்கு எதற்கு மரியாதை கொடுக்க வேண்டும்? — அவனைப் போன்ற சூதாடி, குடிகாரன், காலாடி, போக்கிரி யாருமே இருக்க முடியாது. நண்பர்களே! அவன் எத்தனை கட்சிக்காரர்களின் குடியைக் கெடுத் திருக்கிறான், தெரியுமா? நகரசபை, சட்டசபை ஆகியவற்றில் இருக்கும்பொழுது கைக்கூலியாகவும் லஞ்சமாகவும் எத்தனை ஆயிரக்கணக்கான ரூபாய்கள் வாங்கித் தன் பையை நிரப்பிக் கொண்டிருக்கிறான் தெரி யுமா? 'பர்மிட்' வழங்கு வதிலும், கள்ள மார்க் கெட் வியாபாரத்திலும் அவன் எத்தனை லட்சக் கணக்காகச் சம்பாதித்திருக் கிறான், தெரியுமா? அவ னைப் போன்ற..."




அதற்குமேல் கனசியாம கோஷாலின் பேச்சைக் கேட்டுக் கொண்டு வதன சந்திர சௌத்ரியினால் பேசாமல் கையைக் கட்டிக் கொண்டு நிற்க முடிய வில்லை. எமதூதன் காக ஜங்கனை ஒரு தள்ளுத் தள்ளிவிட்டுப் பேராசிரியர் ஆங்கிரஸ காங்குலியின் உடலில் புகுந்து கொண் டார். அது மட்டும் அல்ல. பக்கத்திலிருந்த இன்னொரு 'மைக்'கைப் பிடுங்கிக் கொண்டு கூச்சலிடவும் தொடங்கிவிட்டார்.

"நமது மதிப்புக்குரிய அவைத்தலைவர் தம் சுய நிலையில் இல்லை என்பதை அவருடைய பேச்சைக் கொண்டே தாங்கள் அனை வரும் அறிந்திருப்பீர்கள். புண்ணிய புருஷரான ராஜ ரிஷி வதன சந்திரரின் பயங் கரச் சத்துருவாக இருந் தானே ஒரு போக்கிரி. தெரியுமா? 'காலகேது' பத்திரிகையின் ஆசிரியரான கனசியாம கோஷாலைத்

தான் சொல்கிறேன்! பத்திரிகையின் பெயரால் பேமானித்தனம் செய்தவன்! அவனுடைய ஆவிதான் சபைத்தலைவரின் மண்டையில் புகுந்து கொண்டிருக்கிறது. அவன்தான் பசுவைப் போன்ற சாதுவான நம் சபைத் தலைவரின் வாயிலாகக் காதுகொண்டு கேட்கத் தகாத சொற்களைச் சொல்லிக் கொண்டிருக்கிறான்!'' என்றார்.

சபைத் தலைவரின் வாய்மொழியாகக் கனசியாம் பேசினார்: ''இல்லை. இது முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கும் கதை; பச்சைப் பொய். துராத்மாவான வதன சந்திர சௌத்ரியின் ஆவிதான் நமது மதிப்புக்குகந்த பேராசிரியர் ஆங்கிரஸ காங்குலியின்மீது ஆவிர்ப்பவமாகி இப்படிக் கண்டபடி உளறிக் கொட்டிக் கிளறி மூடிக் கொண்டிருக்கிறது.''

ஆங்கிரஸ காங்குலியின் வாய் மூலமாக வதன சௌத்ரி பேசினார்: ''நீங்கள் 'பிளாக்மெயி'ரான துஷ்டன் கனசியாம கோஷாலை மறந்து விட்டீர்களா? அந்தப் பயல் கள்ள மார்க்கெட்காரர்களின் காசைத் தின்று விட்டு அவர்கள் புகழைப் பாடினான். பணம் கொடுக்காதவர்களைத் திட்டினான்; சந்திக்கு இழுத்தான். மந்திரிகளைப் பயமுறுத்தித் தனது உதவாக்கரைப் பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும் மைத்துனர்களுக்கும் மைத்துனிகளுக்கும் நல்ல நல்ல வேலைகளாக வாங்கிக் கொடுத்தான். காலஞ்சென்ற பெரியார் வதன சந்திர சௌத்ரி அவனுக்கு லஞ்சம் கொடுக்கவில்லை. அந்தக் கோபத்தில் கனசியாம கோஷாலின் ஆவி நரககுண்டத்திலிருந்து வெளியே வந்து இங்கே வதன சௌத்ரியை வைது கொண்டிருக்கிறது; நிந்தித்துக் கொண்டிருக்கிறது. அதன் அழுகல் நாற்றத்தினால் குலை நடுக்கம் எடுக்கிறதே, இங்குள்ள யாருக்கும் தெரியவில்லையா? ஆவி சொல்லும் இந்தப் பேச்சுக்கு யாரும் செவி மடுக்க வேண்டாம்.''

கூட்டத்தில் ஒரே குழப்பமாகி விட்டது. ஒரு தடியன் தன் நாற்காலியிலிருந்து எழுந்து, ''எனக்குப் பூதம், பிரேதம், ஆவி ஆகியவற்றின் மீது கொஞ்சமும் நம்பிக்கை இல்லை. என் பெயர் ராமலால் சிங். உண்மை என்னவெனில், நமது கோவர்த்தன பாபுவும், ஆங்கிரஸ பாபுவும் பெரிய மனிதர்கள். இன்று கொஞ்சம் அதிகமாகவே போட்டு விட்டு வந்திருக்கிறார்கள். வெறி மயக்கத்தில் கண்டதைப் பிதற்றுகிறார்கள். வதன சௌத்ரி இறந்து விட்டார். அதற்காக எல்லோரும் அநுதாபம் தெரிவிக்கக் கூட்டம் கூட்டியிருக்கிறோம். அது நல்லதே. அதைக் காட்டிலும் நல்ல விஷயம் இன்னொன்று இருக்கிறது. அநுதாபப்படுவதோடு சிறிதுநேரம் ஆனந்தமாகவும் பொழுதைப் போக்குவதற்கு வதன சௌத்ரி இறந்து வழி செய்து கொடுத்திருக்கிறார். அதற்காக அவருக்கு நம் நன்றி உரித்தாகும். அவர் பெயரைச் சொல்லிக் கொண்டு நாம் பாட்டும் கூத்தும் பார்க்கிறோம். அதற்காகவாவது அவருக்கு நாம் நன்றி செலுத்த வேண்டாமா? எனவே, சிறிது நேரம் பாட்டு கேளுங்கள், சிறிது நேரம் நடனம் பாருங்கள். இரண்டொரு தரம் 'ஐயோ, பாவம்!' என்று அங்கலாய்த்து வையுங்கள்; அழுது வையுங்கள்; இரண்டொரு சொட்டுக் கண்ணீர் வேண்டுமானாலும் சிந்தி வையுங்கள். இதெல்லாம் நல்லதுதான். ஆனால் ஒரே ஒரு விஷயம்தான் எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. இரண்டாயிரம் பேருக்கு எதிரே இந்தப் பெரிய மனிதர்கள் நாங்கள் போதை வெறியில் பேசுகிறோம் என்று ஏன் காட்டிக் கொள்ள வேண்டும்? சீச்சீ! என்ன அவமானம்! என்ன அவமானம்! சிறியோர்களாகிய நாங்கள் இம்மாதிரி காரியங்கள் செய்வதெல்லாம் எங்கள் வீட்டுக்குள்ளோ, அல்லது பேட்டைக்குள்ளோதான். ஆனால் இந்தப் படித்தவர்களைப் போல் இப்படி நடுச் சபையில் வந்து நின்று உளறுவதில்லை. எதற்காக ஒளித்து மறைக்க வேண்டும்? உண்மையைச் சொல்லப்போனால் உடம்பு எரிச்சல்தான். இருந்தாலும் பெரிய மனிதர்கள் என்று சொல்லிக் கொண்டு இப்படிச் சண்டை போடுபவர்களைக் காட்டிலும் ஏழை எளியவர்களாகிய நாங்கள் எத்தனையோ மடங்கு மேலானவர்கள்!'' என்றான்.

*

அதே சமயம் இரண்டு எமதூதர்களும் கோவர்த்தன மித்திரர், ஆங்கிரஸ காங்குலி இருவருடைய காதுக்கருகிலும் சென்று, ''சீக்கிரம் வெளியே வா. நாழிகை ஆகி விட்டது. இரண்டு மணி நேரம் முடியப் போகிறது!'' என்று எச்சரித்தார்கள். இரண்டு ஆவிகளும் உடனே வெளியே வந்தன. அவற்றை அழைத்துக் கொண்டு எமதூதர்கள் உடனே மறைந்து விட்டார்கள்.

உடலிலிருந்து ஆவிகள் வெளியேறியதும் கோவர்த்தன மித்திரரும் ஆங்கிரஸ காங்குலியும் மூர்ச்சையுற்று விழுந்து விட்டார்கள். நல்லவேளையாக அந்தக் கூட்டத்தில் ஒரு டாக்டரும் இருந்தார். அவருடைய முயற்சியினால் இருவரும் சீக்கிரமே மூர்ச்சை தெளிந்து உடல் நலமுற்றார்கள்.

''இந்த இரண்டு கிளாஸ் சர்பத்தையும் இவர்கள் குடித்திருக்கிறார்கள். இதைப் பரிசீலனை செய்து பார்க்க வேண்டும். இதில் ஏதோ சூது நடந்திருப்பதாகத் தோன்றுகிறது. யாரோ இந்தச் சர்பத்தில் ஊமத்தையையோ போதை தரும் பொருளையோ கலந்திருக்கிறார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது!'' என்றார் டாக்டர்.

பிரேத தத்துவ சாஸ்திரத்தில் வல்லுநரான ஹாராதன் தத்தர் கழுத்தை அசைத்து, ''அதெல்லாம் ஒன்றும் இல்லை; ஊமத்தையையும் கலக்கவில்லை; போதை தரும் பொருளையும் கலக்கவில்லை. இதை நான் நன்கு பரிசோதித்துப் பார்த்து விட்டேன். இது உண்மையில் பௌதிக சாஸ்திர சம்பந்தமான விஷயம். பெரியோர்களே! உண்மை என்னவென்றால், இன்று நீங்கள் உங்கள் காதுகளாலேயே ஆவிகளின் தகராறைக் கேட்டீர்கள். இதன் பலன் வெகு தீங்கானது. கெடுதியைத் தரக்கூடியது. எனவே, வீட்டுக்குப் போனதும் முதல் காரியமாகக் காதில் கொஞ்சம் துளசிச் சாற்றைப் பிழிந்து கொள்ளுங்கள்!'' என்றார். அதைக் கேட்டதும் சீக்கிரமே கூட்டம் கலைந்தது.

[பரசுராமின் வங்காளிக் கதை]




# மனச்சுமை

ஸ்ரீவத்ஸன்

சிறைச்சாலை சீர்திருத்தக் கமிட்டியார் ஒரு வார காலம் முகாம் போட்டுவிட்டு நேற்று மத்தியானம் அடுத்த ஜில்லாவுக்குப் போய் விட்டார்கள்.

படுக்கையை விட்டு எழுந்திருக்க ரொம்பவும் சோம்பலாக இருந்ததால் விழித்துக் கொண்டே பேசாமல் படுத்துக் கொண்டிருந்தேன்.

அந்தச் சமயம் வார்டர் அம்மாள் ஓடிவந்து, "தேவானை மாரடைப்பால் செத்துட்டுதுங்க நேற்று ராத்திரி. ஜெயில் டாக்டர் வந்து பார்த்தும் பிரயோசனம் இல்லைங்க" என்றாள்.

திடுக்கிட்டேன்.

தேவானையா இறந்து விட்டாள்? அவளுக்காகத்தானே சர்க்காருக்குப் பத்து நாட்கள் முன்பு அவளுடைய நன்னடத்தைக்காக அவளது தண்டனைக் காலம் முடிவதற்கு முன்பு அவளை விடுதலை செய்துவிடலாம் என்று எழுதி அனுப்பியிருந்தேன். ஜெயிலிலிருந்து விடுதலை அடைவாள் என்று நம்பினேன். இப்படி இவ்வுலகமாகிய சிறையிலிருந்து அவள் விடுதலை அடைந்துவிடப் போகிறாள் என்று யார் கண்டார்கள்?

தேவானை அந்தச் சிறையில் தண்டனை அனுபவித்து வரும் ஒரு பெண் குற்றவாளி.

• • •

ஆறு மாதங்களுக்கு முன்பு ஒரு நாள்.

"புதுக் கைதிங்க" என்று சொல்லி வார்டர் அம்மாள் ஒரு வாரண்டையும் ஒரு பெண் கைதியையும் கொண்டு வந்தாள்.

கைதியை நான் பார்த்தேன்.

எங்கோ பார்த்த முகமாக இருந்தது. எங்கே என்று நான் யோசிப்பதற்குள், "என்ன! நீங்களா? என்னைத் தெரியல்லீங்களா? கண்ணம்மாபேத்தி நான். பெரிய ஐயா, அம்மா எல்லோரும் சௌக்கியங்களா?" என்று கேட்டாள்.

எனக்குப் புரிந்து விட்டது.

ஆமாம். தேவானை எங்கள் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்தவள்.

"நீயா இருடினே, தேவானை? உனக்கா ஒருவருடச் சிறைவாசம்?" என்று கேட்டேன்.

"என்னங்க! நீங்க இப்படிக் கேட்கிறீங்க? சட்க ஐயா நான் இருடின்னு தீர்மானிச்சுத்தான் இங்கிட்டு அனுப்பிச்சாரு. அவர் என்ன சட்டம் தெரியாதவரா? மனுநீதிச் சோழன் பரம்பரையிலே வந்த சட்கங்க தப்பு செய்வார்களா?" என்றாள்.

அவள் பேசியதைக் கேட்டு வார்டர் அம்மாள் வியப்படைந்தாள்.



அவளைப் பற்றி எங்கள் குடும்பத்தில் எல்லோருக்கும் நன்கு தெரியும். அவளுக்கு இருக்கும் அறிவுக்கும் புத்திசாலித்தனத்துக்கும் அவள் பணக்காரர் வீட்டில் இருந்தால் அதன் மாதிரியே வேறுதான். ஆனால் அவள் ஏழை. குடத்தில் ஏற்றின விளக்குத்தான். காட்டில் எரிக்கும் நிலா மாதிரிதான்.

அவளை எட்டாவது அறைக்கு அனுப்பும்படி சொல்லிவிட்டு அவளைச் சிறைக்கு அனுப்பிய நீதிபதியின் தீர்ப்பைப் படித்தேன்.

காட்டிலாகா அதிகாரி ஒருவர் வீட்டில் பணம் திருடியதாகக் குற்றச்சாட்டு. அவள் குற்றத்தை ஒப்புக் கொண்டிருக்கிறாள். நீதிபதி அவளுக்கு ஒரு வருடக் கடுங்காவல் தண்டனை விதித்திருந்தார்.

தேவானையா திருடியிருப்பாள்?

என்னால் நம்ப முடியவில்லை.

* * *

என் தகப்பனார் ஒரு ஓய்வு பெற்ற ஜில்லா கல்வி அதிகாரி. எங்கள் "வீட்டில்தான் தேவானையின் பாட்டி கண்ணம்மா வேலை செய்து வந்தாள். கண்ணம்மாவின் பெண் தேவானைக்கு ஆறு வயதாக இருக்கும் போது மகமாயி வந்து குளிர்ந்து போய் விட்டாள். அது முதல் தேவானையைக் கண்ணம்மாதான் வளர்த்து வரலானாள்.

பாட்டியுடன் கூடத் தேவானையும் எங்கள் வீட்டில் வேலை செய்ய வருவாள்.

அவள் நல்ல குடிகையான பெண். வயதுக்கு மீறிய புத்திசாலி. கண் பார்த்ததைக் கை செய்யும். என் அம்மா கூட அடிக்கடி என் தங்கையைப் பார்த்து, "தேவானையைப் பாரேன். எவ்வளவு சுறுசுறுப்பாய் வேலை செய்கிறாள். எவ்வளவு விஷயம் தெரிந்தவளாக இருக்கிறாள். நீயும் இருக்கிறாயே ஜடம்" என்று சுட்டிக் காட்டுவாள். என் தங்கைக்குப் படிப்பு சொல்லிக் கொடுக்கும்போது பக்கத்தில் நின்றுகொண்டே படிப்பைக் கற்றுக் கொள்ளுவாள். அவளுக்குப் படிப்பில் உள்ள அக்கறையைக் கண்டு என் அப்பாகூட அவளைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்து விட்டார்.

நான் படித்துப் பாஸ் செய்து வேலைக்குப் போய் விட்டேன். ஒரு தடவை லீவில் ஊர் வந்திருந்தபோது தேவானையைக் காணோம். என் அம்மாவிடம் கேட்டபோது, அவளுக்குக் கலியாணம் ஆகிப் புருஷனுடன் போய்விட்டதாகச் சொன்னாள்.

அந்தத் தேவானையைத்தான் இன்று சிறைச் சாலையில் ஓர் கைதியாக ஏற்றுக்கொண்டேன்.

அவளைப் பற்றி நான் விசேஷ அக்கறை கொள்ள முடியுமா? மற்றக் கைதிகள் தவறாக நினைத்து விட்டால்?...

* * *

அவள் வந்து ஆறு மாதங்கள் ஓடி விட்டன. எல்லா வார்டர்களுமே தேவானையின் குணத்தையும் நடவடிக்கைகளையும் கண்டு அவள் பேரில் இரக்கப்படலானார்கள்.

அவளுக்குத் தண்டனைக் காலம் முடிய இன்னும் ஆறு மாதங்கள் இருந்தன. அவளுடைய நன்னடத்தை காரணமாக அவளை முன்கூட்டியே விடுதலை செய்யலாம் என்று சர்க்காருக்கு எழுதி அனுப்பி விட்டிருந்தேன். அவளைப் பற்றிக் கேட்டேன். அவள் மழுப்பி வந்தாள்.

கமிட்டி ஒரு வார காலம் முகாம் போட்டு விட்டுப் போய் விட்டார்கள். அன்று சாயங்காலம் எப்படியும் தேவானையிடம், அவள் கதையைக் கேட்டு விடுவதென்று எண்ணிக் கேட்டேன். அவள் இலேசில் சொல்ல இஷ்டப் படவில்லை. பிறகு சொன்னாள்.

அவள் சொன்ன கதை இதுதான்:—

உங்க வீட்டிலே வேலை செய்துக்கிட்டிருந்தேனா? ஐந்து வருடங்களுக்கு முன்பு என் புருசனைக் கைப்பிடிக்கக் குடும்பம் நடத்தப் புறப்பட்டேன்.

என் புருசனுக்குக் காட்டிலாகா அதிகாரி கிட்டே வேலை. காட்டிலாகா அதிகாரிக்குக் காட்டின் மத்தியில் ஒரு பங்களா. அதை ஒட்டிய 'அவுட்'டவுசிலே எங்களுக்கு வாசம்.

நான் கல்யாணம் செய்துக்கிட்டுப் போன போது ஒரு வயதான வெள்ளைக்காரர் காட்டிலாகா அதிகாரியாய் இருந்தார்.

அவர் ஓய்வுபெற்றதும் வேறு ஒரு வெள்ளைக்கார அதிகாரி அவர் இடத்துக்கு வந்தார். சின்ன வயது. அவருக்குக் கலியாணம் ஆகவில்லை. நல்ல தமிழ் பேசுவார்.

அவர் வந்து ஆறு மாதகாலமாகி விட்டது.

மறுநாள் பொழுது விடிந்தால் பொங்கல் பண்டிகை. என் புருசன் அவுங்க தங்கைக்குச் சீர் எடுத்துக்கொண்டு போனார்.

''தேவானை நாளைக்குப் பொழுது விடிஞ்சு ஒரு நாழிகைக்குள் வரேன்'' என்று சொல்லி விட்டுச் சீர் கொண்டு போனார்.

விடியற் காலம், வீட்டைப் பெருக்கிக் கிட்டிருந்தேன். அந்தச் சமயம் யாரோ வரும் காலடிச் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன்.

விளக்கு வெளிச்சத்திலே வாசற்படியைத் தாண்டி அதிகாரி நின்று கொண்டிருந்தார்.

''என்ன எசமான்?''

''ஒண்ணுமில்லே, தேவானை! நீ தனியாய் இருக்கிறயே? பயமாயில்லே?''

''பயமா? எதுக்கு எஜமான் பயம்?''

அவர் பதில் பேசாமல் அசட்டுச் சிரிப்பு சிரித்தது என்னை என்னவோ செய்தது.

''தேவானை தனியாய் இருக்கியேன்னு துணைக்கு வந்தேன்.''

''தனியா? துணையுடன் தானே இருக்கிறேன்'' என்று சொல்லித் தாலிச்சரட்டை எடுத்துக் காட்டினேன்.

''இது ஒரு துணையா?'' என்றார்.

''இதைவிட எங்களுக்கு வேறு துணை கிடையாதுங்க! அதுவும் புருசன் வீட்டில் இல்லாத போது இதுதாங்க துணை.''

''பேச நேரமில்லே, தேவானை! உன்னைப் போல் அழகியை நான் வேறு எங்குமே பார்த்ததில்லே!''

அவருக்கும் எனக்கும் உள்ள இடைவெளி நெருங்கி வந்தது.

கூச்சலிட முடியவில்லை. கூச்சலிட்டால் தான் என்ன? யார் காதில் விழப்போகிறது? என் புருசனும் இல்லே. அதிகாரிக்குச் சமையல் செய்துபோடும் பட்லர்கூட ஊரில் இல்லே.

அவருடைய கண்களில் தோன்றியுள்ள வெறிப் பார்வை என்னைக் கதிகலங்க வைத்து விட்டது. அவர் எப்படியும் என்னை நெருங்கி விடத்துடித்தார். வாசல் பக்கம் ஓடிவிடலாம் என்றால் அவர் வாசல்படி அருகில் வழியை மறித்துக் கொண்டு நின்றார்.

சரி! அவருடைய வெறிக்கு இரையாகி விட வேண்டியது தான் என்ற நிலைமை உண்டாகி விட்டது. திடீரென்று மூளையில் ஒரு பொறி தட்டியது. இப்படிச் செய்தால் என்ன?

சாணிச் கரைசலை எடுத்து அவருக்கும் எனக்கும் நடுவே ஒரு நீண்ட கோட்டை இழுத்தேன்.

''என்ன தேவானை இது?'' என்றார்.

''எசமான் அப்படியே இருங்க. அந்தக் கோட்டைத்தாண்டி வராதீங்க. அந்தக்கோடு என்ன தெரியுமா? தடுப்புக்கோடு. இதைத் தாண்டினால் என்ன நடக்கும், தெரியுமா? உங்க அழகான உடம்பிலே மகமாயி முத்தா பொழிய ஆரம்பிச்சுடுவா. அவ நினைச்சால் ஒங்களை ரொம்ப விகாரமாக ஆக்கிடுவா. சில சமயம் கண்ணைக்கூடப் பறிச்சிடுவா'' என்று சொல்லி விட்டுச் சாணி ஜலத்தைக் கையால் எடுத்துச் சட்டியிலேயே விட்டேன்.

அவ்வளவுதான்; அவர் முகம் பேயறைந்தது போல் ஆகிவிட்டது.

அவருடைய வெறி அந்தக் கோட்டைத் தாண்டத் திண்டாடியது. அந்தக் கோட்டையே வெறித்துப் பார்த்தார்.

மறு நிமிடம் ''தேவானை! என்னவோ என் புத்தி இப்படியாகி விட்டது. என்னை மன்னித்துவிடு. இந்த விஷயத்தை யாரிடமும் குறிப்பாக உன் கணவரிடம் சொல்லி விடாதே. நான் இனிமேல் எங்கேயாவது முறை தவறி நடக்க நினைத்தால் இந்தக் கோடு என் நினைவிலேயே இருந்து என்னைத் தடுக்கட்டும். உன்னிடம் மட்டும் அல்ல; இனி யாரிடமும் நான் தவறாக நடக்காமல் செய்யக்கூடிய சக்தி உன் கோட்டுக்கு உண்டு. இந்தச் சம்பவம் என் உயிர் உள்ளவரையில் என்னுடைய நினைவிலிருந்து அகற்ற முடியாது'' என்று கூறினார்.

திடுதிடு எனப் போய் விட்டார்.

ஏதோ கற்பனையாகச் சொன்னேன், கோட்டைத் தாண்டி வந்தால் மகமாயி தண்டித்து விடுவாள் என்று. அவர் அதற்குக் கட்டுப் பட்டு விட்டார். நான் சொன்னது பொருத்தமா, நடக்கக்கூடியதா என்று கேட்க வேண்டாம். சொன்னேன் நம்பினார்.

அந்தக்கோடு வெறி பிடித்தவரைத் தடுத்து நிறுத்தியது; என் கற்பையும் காத்தது.

அந்தச் சம்பவத்தை என் கணவரிடம் சொல்வதா வேண்டாமா? சொன்னால் அவர் ஒரு மூர்க்கர். ஏதாவது அந்த அதிகாரியைச் செய்து விட்டால் என்ன ஆகும்? அப்புறம் போலீஸ், கோர்ட்டு, ஜெயில், தூக்கு. அவர் தான் திருந்தி விட்டாரே. வீணாக இன்னும் சிக்கலையும் ஆபத்தையும் கொண்டுவந்துவிடக்

கூடாது என்று முடிவுசெய்து இதைப் பற்றி என் புருசனிடம் சொல்லவில்லை.

அதன் பிறகு அவரே மாற்றிக் கொண்டு போய் விட்டார்.

அதன்பின் யார் யாரோ வந்தார்கள்.

* * *

ஆறு மாதங்களுக்கு முன்பு ஒரு அதிகாரி வந்தார். அவர் நம்மவர்தான். வயதானவர்; மனைவியை இழந்தவர்.

அவர் தனியாக இருந்தார். பக்கத்து டவுன் ஹோட்டலிலிருந்து சாப்பாடு வரும்.

பொங்கலுக்கு முதல் நாள். கணவர் அன்றும் வெளியூர் போயிருந்தார்.

விடியற்காலம் நான்கு மணி. வீட்டைப் பெருக்கி மெழுகிக் கொண்டிருந்தேன். அப்போது எனக்குப்பழைய ஞாபகங்கள் வந்தன.

'அட ராமா? இது என்ன?'

முன்பு நடந்தது மாதிரியே. இது என்ன இப்போதுள்ள அதிகாரி ஏன் வருகிறார்? திடுக்கிட்டேன். கனவா நினைவா?

அவர் உள்ளே வந்து விட்டார். ஏதேதோ பிதற்றினார். உயர்ந்த உடுப்புக்களெல்லாம் அவர் போட்டிருந்தார்.

அவரை எவ்வளவோ கெஞ்சினேன். கூச்சல் போடவும் வழியில்லை. அந்த நடுக்காட்டில் கூச்சல் போட்டு யார் வர முடியும்! பங்களா ஆட்கள்கூட விடிந்துதானே வர முடியும்.

வாசல் பக்கம் ஓடி விடலாம் என்றால் வழியை அடைத்துக் கொண்டு நின்றார்.

அதே சமயம் முன்பு செய்தது ஞாபகம் வந்தது. சாணி ஜலத்தை எடுத்து அவருக்கும் எனக்கும் நடுவில் கோடு போட்டு விட்டு, "தாண்டி வராதீர்கள்!" என்றேன்.

அவர் ஒரு சிரிப்பு சிரித்தார்.

எனக்குப் பற்றி எரிந்தது.

"கோட்டைத் தாண்டத்தானே கூடாது. தாண்டவில்லை. மிதித்துக்கொண்டு வரலாம் அல்லவா?" என்று சொல்லிவிட்டு மிதித்துக் கொண்டே வந்து என்னை நெருங்கினார்.

கோட்டைப் போட்டு, 'தாண்டி வராதே' என்றேன். வெள்ளைக்காரர் அதை மீறவில்லை. நான் சொல்லியதை அவர் நம்பினார்; மதிப்பும் கொடுத்தார். ஆனால் நம்பவரோ நம்பிக்கை வைக்காததுடன் கோட்டை மிதித்துக் கொண்டே நம்பிக்கையையும் மிதித்தார்.

சாணி ஜலத்தைக் கரைத்து வைத்திருந்த பாத்திரத்தை அவர் தலையில் திடீரென்று சாய்த்து விட்டேன். அவ்வளவு ஜலமும் அவர் மேல் விழுந்து விட்டது. நான் வாசலுக்கு ஓடி வெளியே போய் விட்டேன். அரை மணி நேரம் கழித்து அவர் உடம்பு முழுதும், உயர்ந்த உடுப்புமுழுதும் சாணி ஜலம் வழிந்தபடியே வெளியே வந்தார்.

அவர் போய் விட்டதும் உள்ளே போனேன்.

உள்ளெல்லாம் சாணி ஜலம் கொட்டிக் கிடந்தது. எனக்கு ஒன்றுமே ஓடவில்லை.

ஒரேவிதமான ஆபத்து – இரண்டாவது தடவையாக. ஆனால் முதல் ஆபத்து மனத்தில் நிம்மதியை உண்டாக்கியது. ஆனால் இப்போது வந்ததோ?......

'கணவரிடம் சொல்வதா, வேண்டாமா? மறுபடியும் குழப்பம். சொல்லி விட்டால் அவர் அந்த அதிகாரியைக் கொலை செய்து விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பார். விளைவு? போலீஸார் என் புருசனைப் பிடித்துக் கொண்டு போய் விடுவார்கள். கொலைக்குக் கொலை. கணவருக்குத் தூக்குத் தண்டனை விதித்து விடுவார்கள். அவர் போன பிறகு எனக்கு ஏது வாழ்வு?'

'அதற்காக நடந்ததைக் கணவரிடம் சொல்லாமல் விடுவது கணவருக்குச் செய்யும் துரோகம் இல்லையா?'

கணவரிடம் சொல்லிப் பழிக்குப் பழி வாங்கி விட்டுக் கணவனைத் தூக்குமேடைக்கு வழியனுப்ப வேண்டுமா? அல்லது மூடி மறைத்துக் கணவருக்குத் துரோகம் செய்வதா? ஒரு விதமான முடிவும் தோன்றவில்லை. என் கணவர் அதற்குள் வந்து விட்டார்.

"ஏன் தேவானை சொரத்தாக இல்லை?" என்று கேட்டார்.

நான் சொல்வதா, வேண்டாமா என்று திகைத்த போது இரண்டு போலீஸார்கள் உள்பட அந்த அதிகாரியே வந்து விட்டார்.

"வீடு முழுவதும் சோதனை போடுங்கள்" என்றார் அதிகாரி.

அவர்கள் ஒவ்வொரு இடமாகத் தேடி விட்டுக் கடைசியில் அரிசிப் பானையிலிருந்து ஒரு மணிபர்ஸை எடுத்து வந்தார்கள்.

"பானையிலிருந்த உங்கள் பர்ஸ் இது தானே?" என்று போலீஸார் கேட்டனர்.

"ஆமாம். நேற்றிரவு நான் தூங்கப் போகும்போது இவள் மறைந்து மறைந்து என் வீட்டுக்குள் போய்த் திரும்பி வருவதைப் பார்த்தேன். சந்தேகப்பட்டேன். பிறகு பார்த்தால் பர்ஸைக் காணோம். இப்படி எனக்குத் தெரியாமல் எவ்வளவு திருடியிருக்கிறாளோ?" என்றார்.

நானும் என் கணவரும் திடுக்கிட்டோம்.

"திருடினியா தேவானை?" என்று என் புருசன் கேட்டார்.

"நான் எதைச் சொல்ல அத்தான்" என்றேன் கண்கள் கலங்க.

அப்போதுதான் எனக்கு அந்த அதிகாரியின்மேல் சாணி ஜலத்தைக் கவிழ்த்த போது, அவர் அரை மணி நேரம் என் வீட்டில் இருந்தபோது என்னைச் சூழ்ச்சி செய்து திருட்டுக் குற்றம் சாட்ட அவரே மணிபர்ஸை அரிசிப் பானையில் போட்டிருக்க வேணும் என்று தோன்றியது. எங்கே அவரை நான் காட்டிக் கொடுத்து விடுவேனோ என்று அவர் முந்திக் கொண்டார். வழக்கு நடந்தது. குற்றத்தை ஒப்புக் கொண்டேன். அப்புறம் நடந்தது உங்களுக்குத் தெரியும். இவைகளை என் கணவரிடம் சொல்லிவிட வேண்டாம். தெரிந்தால் மறுபடியும் அனர்த்தம் விளைந்து விடும். நான் வந்த விதி இப்படி" என்று முடித்தாள்.

நேற்றிரவு தன் கதை முழுதும் கூறியவள் தன் மனச் சுமையை இறக்கிவிட்டு இன்று காலமாகி விட்டாள். அவள் கணவனிடம் அவள் பிரேதம் ஒப்படைக்கப்பட்டு விட்டது. அவள் எரிந்து பிடி சாம்பல் ஆகி விட்டாள். ஆனால் அவளையும் அவள் சொன்ன சம்பவத்தையும் நான் எப்படி மறக்க முடியும்?

# அதிக விளைவு

# அதிக உணவு

## உங்களுக்கு இலாபம்—
## நாட்டுக்கு நன்மை

உங்கள் நிலத்தின் விளைச்சலை இன்னும் அதிகமாக்கலாம். சிறந்த பயிர்த்தொழில் முறைகளை மேற்கொள்ளுங்கள்; விளைவு அதிகரிப்பதைக் காண்பீர்கள்.

- நாற்றங்காலை நன்ருகப் பயன்படுத்துங்கள். சால் விதைப்பு (குழிவித்து) முறையைப் பின்பற்றுங்கள்.
- நவீன விவசாயக் கருவிகளைப் பயன்படுத்துங்கள்.
- தரமான வித்துக்களையே விதையுங்கள்.
- கழிவுப் பொருள்களை உரமாக்கிக் கொள்ளுங்கள்.
- நீர்ப்பாசன வசதிகளைப் பயன்படுத்துங்கள்.
- கால்நடைகளைப் பேணி வளருங்கள்.
- தவருமல் சேமியுங்கள். உங்கள் நன்மைக்கும் நாட்டின் முன்னேற்றத்துக்கும் உகந்த வகையில், உங்கள் சேமிப்பை முதலீடு செய்யுங்கள்.

## திட்டத்துக்கு
## உதவுங்கள்—
## முன்னேற்றம்
## அடையுங்கள்.



# மந்திரச் சாவி

① ②

பிறர் மனக் கதவைத் திறந்து அதன் உள்ளிருக்கும் ரகசியங்களை அறிந்து கொள்ள உதவும் இந்தச் சாவி. உங்கள் நண்பர்களை நீங்கள் இதைக் கொண்டு திகைக்க வைக்கலாம். மேலேயுள்ள சாவியில் பலவித அடையாளங்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன அல்லவா? இதில் 5 விதக் குறிகள் இருக்கின்றன. உங்கள் நண்பனை அழைத்துச் சாவியின் குச்சிப் பக்கத்தில் உள்ள 5 குறிகளில் ஏதாவது ஒன்றைத் தொடச் சொல்லுங்கள். பிறகு நீங்கள் இந்தப் படத்தையோ அவனையோ பார்க்காமல் திரும்பி நின்று கொண்டு பின்வருமாறு நண்பனுக்குக் கட்டளை யிடுங்கள். ''பத்துக்குமேல் ஏதாவது ஒரு லக்கத்தை நினைத்துக் கொள். நினைத்துக் கொண்டாயா? சரி, இனி நீ தொட்ட குறியிலிருந்து நினைத்துக் கொண்ட எண்ணிக்கையைச் சாவியின் குச்சிப் பாகத்திலிருந்து மேல் நோக்கி எண்ணிக் கொண்டே போ. ஒவ்வொரு எண்ணிக்கையின் போதும் ஒரு குறியை மௌனமாகத் தொட்டு மேலே எண்ணு. சாவியின் வட்டப் பகுதியின் இடப் பக்கமோ அல்லது வலப் பக்கமோ எப்படி வேண்டுமானாலும் எண்ணிக் கொண்டு போ. பெரிய எண்ணாக நினைத்திருந்தால் ஒரு சுற்றுக்குப் பிறகு மறுபடியும் குச்சிப் பகுதிக்கு வரவேண்டாம். வட்டப் பகுதியிலேயே நினைத்த எண்ணின் எண்ணிக்கை முடியும் வரை சுற்றிச் சுற்றி எண்ணு. முடிந்ததா?

''சரி! இனி முதலில் எண்ணிய திசையிலிருந்து எதிர்ப்பக்கமாக மறுபடியும் நீ எண்ணிய எண்ணிக்கையை ஒரு குறிக்கு ஒரு எண்ணாக எண்ணிக்கொண்டு வா. முடிவில் எந்தக் குறியில் வந்து முடிகிறதோ, அதை நன்றாக நினைவில் வைத்துக் கொள்'' என்று சொல்லிவிட்டு, ''அந்தக் குறியிலிருந்து உன் விரலை எடுத்துவிடு. அது என்ன அடையாளம் என்பதை நான் சொல்லுகிறேன்'' என்று சிறிது நேரம் நெற்றிப் பொட்டை அழுத்திச் சிந்திப்பது போல் இருந்து விட்டு 'டக்'கென்று அவன் கடைசியாகத் தொட்டு முடித்த அடையாளத்தை நீ சொல்லிவிடலாம். எப்படி என்று கேட்கிறாயா? உனக்கு மட்டும் இந்த ரகசியத்தைச் சொல்லித் தருகிறேன்! முதலில் அவன் தேர்ந்தெடுக்கும் அடையாளத்துக்கு மேல் என்ன குறி இருக்கிறதோ, அதை நீ சட்டென்று பார்த்து நினைவில் வைத்துக் கொள். அதுதான் அவன் கடைசியாக எண்ணி முடிக்கும் போது தொடும் குறியாக இருக்கும். உதாரணமாக அவன் வட்டத்தைத் தேர்ந்தெடுப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அதற்குமேலே உள்ளது முக்கோணம். இனி, அவன் நினைப்பது பதின்மூன்று. அவன் தொட்ட குறியிலிருந்து மேல்நோக்கி வலது கைப் பக்கமாக எண்ணிப் போனால் வந்து முடிவது சதுரத்தில். (படம் 1) அதிலிருந்து இடது கைப் பக்கமாக மறுபடியும் 13 எண்களை எண்ணினால் வந்து முடியும் இடம் முக்கோணம் (படம் 2). எப்படி? ஆகவே ரகசியம் இதுதான். அவன் எத்தனை பெரிய எண்ணை நினைத்துக் கொண்டாலும் சரி, முதலில் அவன் தேர்ந்தெடுக்கும் குறிக்கு மேலுள்ள குறிதான் அவன் சுற்றி வந்து முடிக்கும் குறியாக இருக்கும்!

—மூர்த்தி



# மூன்று நண்பர்கள்

## 15. நிலவறையில் போலீஸ்!

'டைம்பாம்' என்று பீதியடைந்து மணி தூக்கிச் சென்ற பெட்டியில் இருந்தது 'வெங்காய வெடி'தான் என்பதைக் கிட்டு விளக்கியும்கூட மணிக்குச் சிறிதும் நம்பிக்கை ஏற்படவில்லை.

''டேய்! 'காக்காய் உட்காரப் பனம் பழம் விழுந்தது போல' என்று பழமொழி கேள்விப் பட்டதில்லையா? நீ இருந்த அந்த நிலையில், பீதியும் கலவரமும் சேர்ந்து கொள்ள ஓட்டைக் கடிகாரத்தின் 'டிக் டிக்' ஒலியை 'டைம் பாமி'ன் விசை என்று கற்பனை செய்து கொண்டு விட்டாய். பெட்டியைச் சதிகாரர்களின் மோட்டார்மீது தூக்கி எறியவே அதிலுள்ள வெங்காய வெடி ஒன்று சேர்ந்து வெடித்த அதிர்ச்சியில்—அவர்கள் காருக்கு சடன் பிரேக் போட, கார் கவிழ்ந்து, பெட்ரோல் டாங்க் உடைந்து தீ பரவி விட்டது. இதுதான் நடந்திருக்கக் கூடியது'' என்றான் கிட்டு.

''சரி தம்பி! எப்படியோ போகட்டும். நேரமாவுது. வீட்டுக்குப் போவோம், வா. அம்மா உங்களைக் காணோமே என்று கவலைப்படுவதற்கு முன்னால், நீங்கள் நல்ல பிள்ளைகளாக வீட்டுக்குப் போய்ப் படுக்கை அறைக்குள்ளே நுழைஞ்சிடுங்க'' என்றான் ரங்கசாமி சிரித்தபடியே.

''ரைட்டோ, மணி! அப்போ நீ போய் நிம்மதியாகப் படுத்துத் தூங்கு. பகல் பன்னிரண்டு மணிக்கு எழுந்திருந்தால் போதும்'' என்று விடை கொடுத்தான் கிட்டு. பிறகு தன் தங்கையின் அருகில் போய் உட்கார்ந்து கொண்டான். ரங்கசாமி வண்டியை எடுத்தான்.

அசதி கொட்டாவியாக வெளிப்பட மணி தன் வீட்டுக்குத் திரும்பும்போது எதையோ நினைத்துக் கொண்டு, ''டேய்! டேய்! கிட்டு'' என்று கூவிக் கொண்டு கிளம்பத் தயாராக இருந்த காரின் அருகே வேகமாக ஓடி வந்தான்.

''என்ன?'' என்ற வினாக்குறியைப் பார்வையிலே பதித்தபடி மணியைப் பார்த்தார்கள் கிட்டுவும் ரங்கசாமியும்.

''அந்த வெடி விபத்தின்போது நான் நிலவறைக்குள் போய் ஒளிந்து கொண்டதாகச் சொன்னேனல்லவா? அப்போது அங்கு மூன்றாவது கூடத்தில் புழுதி படிந்த தரையிலே ஒரு செய்தி எழுதப்பட்டிருப்பதைக் கண்டேன். இந்த விஷயத்தை என் மாமா சேகரிடம் தெரிவித்து, அதைப் போய் ஆராயும்படி சொல்லி இருக்கிறேன். இத்தனை நேரம் சேகர் அதைக் கண்டுபிடித்திருப்பார் என்றே நினைக்கிறேன். இருந்தாலும் உங்களுக்கும் இதுபற்றி...''

''என்ன செய்தி? சொல் மணி சீக்கிரம்'' என்றான் கிட்டு பரபரப்புடன்.

''நான் காப்பாற்றியதாகச் சொன்னேனே ஒரு மனிதரை, அவர்தான் அதை எழுதி இருக்க வேண்டும். தந்தி பாஷை தெரியுமல்லவா உனக்கு?''

''கேள்விப்பட்டிருக்கிறேன். புள்ளியையும் கோடுகளையும் கொண்ட ஒரு சங்கேதம் என்று. அதற்கென்ன?''

''அப்படித்தான் அது எழுதப்பட்டிருந்தது. என் மாமா கொஞ்ச நாட்கள் இந்தக் 'கட்டு...கட...கட்டு' கற்றுக் கொண்டிருந்தார். அப்போது அதைக் கவனித்து எனக்கும் இதில் கொஞ்சம் பழக்கம் உண்டு. 'கோராவும் அவர்களில் ஒருவன்'. இது தான் அங்கு எழுதப்பட்டிருந்த செய்தி.''

''என்ன கோராவா? அப்படி என்றால்?...'' புரியாமல் புருவத்தை நெரித்துக் கொண்டு கேட்டான் ரங்கசாமி.

''அதுதான் எனக்கும் புரியவில்லை... சரி, போய் வா, எனக்குத் தூக்கம் கண்களைச் சுற்றுகிறது'' என்று தன் வீட்டை நோக்கி நடந்தான் மணி.

கிட்டு வரும்போதே மணியின் வீட்டுக் கதவைத் திறந்து வைத்து விட்டுத்தான் வந்தான். மணி உள்ளே போனபோது கூடத்தில் யாருமில்லை. அவன் அம்மா எழுந்திருந்தாலும் சமையலறையில் ஏதாவது காரியமாக இருப்பாள். ஓசைப்படாமல் தன் அறைக்குப் போன மணி ஒரு அட்டையை எடுத்து, 'அம்மாவுக்கு, மிகவும் அவசியமானால் மட்டும் என்னை எழுப்பு. இரவு முழுதும் நான் தூங்கவில்லை. உன் அன்புள்ள மணி' என்று எழுதி அதை ஒரு கயிற்றில் கட்டிக் கதவின் வெளியே அம்மாவின் கண்களில் படும்படி தொங்கவிட்டுவிட்டுக் கதவைச் சாத்திக் கொண்டு படுக்கையில் போய்ப் 'பொத்' தென்று விழுந்து — புரண்டு சோம்பல் முறித்துக் கொண்டான். ஒரு விநாடி சுவரில் மாட்டியிருந்த ஹனுமார் படத்தின் மீது அவன் கவனம் பதிந்தது. அவனையுமறியாமல் அவன் கரங்கள் கூப்பின. கண்களை மூடினான். 'இரவு நேர்ந்த விபத்துக்களிலே யாருக்கும் எவ்வித அபாயமும் இல்லை. பட்டுவைத் தவிர. ஹனுமார்தான் காப்பாற்றினார்' என்று எண்ணினான். அவனுக்கு ஆஞ்சநேயரிடம் அளவுகடந்த பக்தியுண்டு. அப்படியே கொஞ்ச நேரத்

தில் மணி தன்னை மறந்து தூக்கத்தில் மூழ்கிப் போனான்.

*

கிட்டுவின் வீட்டை நெருங்கும்போதே மோட்டார் எஞ்சினை நிறுத்தி விட்டான் ரங்கசாமி. ஒரு மூலையில் தோட்டக்காரன் செடிகளுக்கு நீர் ஊற்றும் வேலையில் ஈடுபட்டிருந்தான். ரங்கசாமி பட்டுவை அப்படியே நலுங்காமல் தூக்கிக் கொண்டு பின்னால் வரக் கிட்டு முன்னால் நடந்தான்.

பட்டுவைப் படுக்கையில் கிடத்திவிட்டு, ரங்கசாமி விடைபெற்றுக் கொண்டு போய் விட்டான். பட்டு கண்களை மூடியபடி படுத்திருந்தாள். இன்னும் அவளுக்கு அந்த அசதி மாறவில்லை. கிட்டு ஓசைப்படாமல் அம்மாவின் அறைக்குள் எட்டிப் பார்த்தான். கண் மூடிப் படுத்திருந்தாள். விடியற்காலம் எழுந்திருந்து பால்காரனிடம் பால் வாங்கி வைத்துவிட்டு மறுபடியும் படுத்துக் கொண்டிருக்க வேண்டும். அதுதான் வழக்கம். கிட்டுவுக்கு அது தெரியும். ஆகவே நேரே சமையலறைக்குப் போனான். 'ஸ்டவ்'வைப் பற்ற வைத்துக் காப்பி டிகாக்ஷனுக்கு நீர் கொதிக்க வைத்துப் பில்டரில் ஊற்றி விட்டு, பாலையும் காய்ச்சி இறக்கியபின் போய்த் தன் தாயாரை எழுப்பினான்.

"அம்மா! காப்பி தயார். எழுந்திரு" என்றான் கிட்டு.

கண் விழித்த அவன் தாயார் தன் மகனின் வார்த்தையைக் கேட்டு அதிக நேரம் தூங்கிவிட்டோமோ என்று பரபரப்புடன் சமையலறைப் பக்கம் ஓடினாள். காப்பி கலக்க எல்லாம் தயாராக இருப்பதைக் கண்ட அவள் முகம் மலர்ந்தது.

"ஏண்டா கிட்டு! நீ எப்போ எழுந்திருந்தாய்? இத்தனை பொறுப்பு உனக்கு எப்போ வந்தது?" என்றாள் மரகதம் பாலைக் கிளறிவிட்டுக் கொண்டே.

கிட்டுவுக்கு எப்போதுமே பொய் பேசும் பழக்கம் கிடையாது. ஆகவே முதல் நாள் நடந்த விவரங்களைச் சுருக்கமாகத் தன் தாயாரிடம் விளக்கினான். கிட்டு சொல்வதைக் கேட்கக் கேட்க மரகதத்தின் முகம் பீதியடையலாயிற்று. பட்டுவுக்கு மயக்க மருந்து கொடுக்கப்பட்டதைக் கேட்டதும், அவள் பதறிப்போய் விட்டாள்.

"என்ன...என்னடா...என் குழந்தை பட்டு எங்கேடா இப்போ?" என்றாள்.

"கவலைப்படாதே அம்மா—டாக்டர் ஜெயராமன்கிட்டே அவளைக் காட்டியாச்சு. அவளுக்கு ஒருவித அபாயமும் இல்லை என்று சொல்லி விட்டார். பட்டு அவள் அறையில்தான் படுத்துக் கொண்டிருக்கிறாள்" என்றான் கிட்டு. ஆனால் மரகதம் அவன் பேச்சைக் கேட்டுக் கொண்டு நிற்கவில்லை. பட்டுவின் அறைக்குப் பரபரப்புடன் ஓடினாள். தன் தாயாரின் பின்னா



லேயே பட்டுவின் அறைக்கு வந்த கிட்டு, தன் தாயார் உடல்பதற, கண்களில் நீர் துளிர்க்க, உதடு துடிக்கப் பட்டுவின் மீது குனிந்தபடி அவள் நெற்றியில் விழுந்த கேசத்தை ஒதுக்கியபடி "பட்டு, பட்டு! கண்ணே பட்டு" என்று கூப்பிட்டுக் கொண்டிருப்பதைக் கண்டான். பட்டு மெல்லக் கண் திறந்து இதழ் மலரத் தன் தாயாரைப் பார்த்துச் சிரித்தாள்.

கிட்டுவும் ஒரு பெருமூச்சுடன், "அம்மா! நான் எங்க சரித்திர வாத்தியார் வீட்டுக்குப் போகணும்" என்றான்.

"நீ எங்கேயும் போகக் கூடாது. ஆமாம், அப்பா வரட்டும் சொல்றேன்" என்றாள் மரகதம் தன் மகனைப் பாராமலேயே. ஆனால் அப்பாவின் செல்லப்பிள்ளை அவன். ஆகவே அதைப் பற்றி அவனுக்குக் கொஞ்சமும் பயமில்லை.

"அந்தச் சதிகாரர்களைப் பற்றி எல்லாம் நீ கவலைப்படாதே. அம்மா! எனக்கு எதுவும் நேராது" என்று சொல்லிக்கொண்டே பதிலுக்குக்கூடக் காத்திராமல் வெளியே வேகமாக ஓடினான்.

அவன் திட்டமெல்லாம்; மணி சொன்ன செய்தியிலுள்ள 'கோரா' என்ற வார்த்தையின் மர்மத்தை அறிய வேண்டும் என்பதுதான். அதை விடுவிக்கக் கூடிய ஒரே ஆசாமி சரித்திர வாத்தியார் சந்தானம்தான். அவருடைய அன்புக்குப் பாத்திரமானவன் கிட்டு. அவர் ரொம்பக் கெட்டிக்காரர். எப்படியும் இதன் பொருளை அறிந்து சொல்லி விடுவார் என்ற நம்பிக்கை இருந்தது கிட்டுவுக்கு.

ஆனால் அவரிடம் போவதற்குமுன் புலித்தேவன் தோப்புக்குப் போய் அந்தப் பாழடைந்த பங்களாவின் நிலவறைக்குள் மணி சொன்னபடிதான் அந்தச் செய்தி தரையில் எழுதப்பட்டிருக்கிறதா என்பதை நேரில் பார்த்து ஊர்ஜிதம் செய்து கொண்டுவிடத் தீர்மானித்தான். மணி ஒரு வேளை அவசரத்தில் சரியாகப் புரிந்து கொள்ளாமல் ஓரிரு வார்த்தைகளை விட்டிருக்கலாமல்லவா?

கிட்டு புலித்தேவன் தோப்புக்குப் போனபோது திடுக்கிட்டான். நீக்கிரையான பாழடைந்த பங்களா விகாரமாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தது. ஆனால் அங்கு காவலுக்கு ஒரு ஈ காக்கை கூட இல்லை. இது கிட்டுவுக்கு வியப்பை அளித்தது. கொலை, களவு, தீ விபத்து இப்படி ஏதாவது விபரீதங்கள் நடந்தால் அந்த இடத்தில் போலீஸ் பாரா இருப்பது வழக்கம். அப்படியிருக்க இங்கு ஒரு காவலையும் காணாதது வியப்பை அளித்தது அவனுக்கு. ஆனால் அதைப் பற்றி அதிகமாகக் குழப்பிக் கொள்ளாமல் நிலவறை மூடியை அகற்றி விட்டு அதனுள் இறங்கினான். பகல் வேளையாதலால் உள்ளே அத்தனை கும்மிருட்டாக இருக்கவில்லை.

இரண்டாவது கூடத்தைக் கடக்கும் போது கிட்டுவின் கால்களில் 'மொத்' தென்ற ஏதோ ஒன்று தட்டுப்பட்டது. நெஞ்சு படபடக்கக் குனிந்து கையால் துழாவினான். உடையணிந்த மனித உடல்!

திடுக்கிட்ட கிட்டு தன்னுடைய கைகளைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டான். டிராயர் பையில் 'பாட்டரி' விளக்கு இருப்பது நினைவுக்கு வரவே சட்டென்று அதை எடுத்து ஒளியைப் பரவ விட்டான். பிரமிப்பினால் தடுமாறி விழப்போன கிட்டுவைப் பின்னால் ஒரு தூண் தாங்கிக் கொண்டது.

'பாட்டரி லைட்' ஒளியில் அவன் கண்டதென்ன? அலங்கோலமாக விழுந்து கிடந்த ஒரு மனிதன். அதுவும் அவன் சாதாரண ஆளில்லை. ஒரு போலீஸ்காரன். அவன் தலையிலிருந்த தொப்பி ஒரு புறம் உருண்டு கிடந்தது. அவன் கை விரல்கள் தரையில் எதையோ எழுதிய நிலையிலேயே துவண்டு கிடந்தன. (தொடரும்)

## பலே, மந்திரவாதி!

★ நாலைந்து நண்பர்களுடன் இருக்கும்போது இந்தக் 'கணக்கைப் போட்டு அவர்களைப் பிரமிக்கவையுங்கள். உங்கள் நண்பர்களில் ஒருவனைப் பார்த்து, "மூன்று இலக்கங்களில் ஏதாவது ஒரு எண்ணை ஒரு காகிதத்தில் குறித்துக் கொள்ளச்சொல்லுங்கள். பிறகு அதே எண்ணை அதன் அருகில் மறுபடியும் ஒரு முறை எழுதச் சொல்லுங்கள். இப்போது அது ஆறு இலக்கமுள்ள ஒரு எண்ணாகிவிடும் இல்லையா? அந்தக் காகிதத் துண்டை அடுத்தவனிடம் கொடுக்கச் சொல்லுங்கள். இரண்டாவது நண்பனை, அந்த இலக்கத்தை '7 ஆல் வகு' என்று கட்டளையிடுங்கள். அவன் வகுத்ததும் வந்த விடையை ஒரு காகிதத்தில் எழுதி அடுத்த நண்பனிடம் கொடுக்கச்சொல்லுங்கள். அவனிடம், அந்த எண்ணைப் பதினொன்றால் வகுத்து வரும் ஈவை வேறொரு காகிதத்தில் எழுதி மற்றொரு நண்பனிடம் கொடுக்கச் சொல்லுங்கள். அந்த நண்பனை, அந்த எண்ணைப் பதின்மூன்றால் வகுக்கச் சொல்லி வரும் விடையைக் காகிதத்தில் எழுதி மடித்து முதலில் மூன்று இலக்க எண்ணை எழுதியவனிடம் கொடுக்கச் சொல்லுங்கள். இப்போது அவனிடம் 'நீ முதலில் எழுதிய எண் அந்தக் காகிதத்தில் இருக்கும் பார்' என்றதும் அவன் அதைப் பிரித்துப் பார்த்து வியப்பினால் அப்படியே திக்கு முக்காடிப் போய் உன்னைப் 'பலே! மந்திரவாதி' என்று நினைப்பான்.




# நான் வளர்த்த தங்கை

காந்தன்

"பல முறைகள் வெள்ளித் திரையிலும், நாடக மேடைகளிலும் நாம் ஏற்கனவே பார்த்து விட்ட கதைதான் 'நான் வளர்த்த தங்கை' என்ற படம். இதை மறுபடியும் சரவணபவா யூனிட்டி பிக்சர்ஸ் தயாரித்திருக்கிறார்கள் என்பதுதான் புதுமை!" என்று என் நண்பரிடம் கூறினேன்.

அவ்வளவுதான். அவருக்கு ஒரேயடியாகக் கோபம் வந்து விட்டது.

"என்ன ஸார் இது! எதைப் பார்த்தாலும் பழைய கதை என்று சொல்லி விட்டால் அப்புறம் படாதிபதிகள் போகிற வழி? நாம் தினம் சாப்பிடுகிற காப்பி பழைய தினுசில் தானே இருக்கிறது? இட்டிலி, தோசை முதலிய பலகாரங்களெல்லாம் பழைய மாதிரி தானே இருக்கின்றன? அப்படியிருக்க சினிமாக் கதையில் மாத்திரம் புதுமை, புதுமை என்று கதறுவானேன்...!" என்று என்னை அவர் வெளுத்து வாங்கி விட்டார்.

அவர் மீது குற்றம் இல்லை. தமிழ்ப்படங்கள் ஒன்றுகூட விடாமல் பார்க்கிறவர் அவர். அதனாலே அவருக்குத் தமிழ்ப் படங்கள் மீதும் படாதிபதிகள் மீதும் தமிழ்ப் பட நடிகர்கள் மீதும் அளவு கடந்த அநுதாபம் உண்டாகி விட்டது. அதனால்தான் தமிழ்ப் படங்களைப் பற்றி யாராவது குறை கூறினால் அவரால் தாங்க முடிவதில்லை.

அறுபது வருஷ காலமாக ஆடி, ஓடிக் கொண்டிருந்த டிராம் வண்டியிடம் எனக்கு எவ்வளவோ ஆத்திரம் இருந்த போதிலும் விடாமல் அதில் சவாரி செய்து தூங்கி வந்ததின் காரணமாக எனக்கு அதன் மீது இருதய ஆழத்தில் ஓர் அநுதாபம் இருந்து வந்தது. டிராம் வண்டியின் ஆயுட் காலம் முடிந்து போன போது என்னையும் அறியாமல் என் கண்கள் நீரை உகுத்தன. அதைப் போன்றது தான் என் நண்பரின் அநுதாபமும்.

நம் தமிழ்ப் படங்கள் சிறந்து விளங்க வேண்டும் என்னும் ஆர்வம்தான் படங்களைப் பற்றிய குற்றம், குறைகளை யெல்லாம் எடுத்துக் கூறத் தூண்டுகிறது. மக்கள் விரும்புகிறார்கள் என்ற மகத்தான பொய்யைக் கூறி மீண்டும் பழைய கதைகளையே படமாக்குவது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளுவதாகும்.

* * *

தங்கையிடம் எல்லையற்ற பாசம் வைத்து விட்ட ஒரு தமக்கை, தன் கணவனை இழந்து, தந்தையை இழந்து, குழந்தையுடன் வீட்டை விட்டு வெளியேறுகிறாள். திருவிழாக் கூட்டத்தில் குழந்தையை இழக்க நேர்ந்ததும், சித்த சுவாதீனத்தையும் இழந்து விடுகிறாள். (உறவுக்கார ஸ்திரீ ஒருத்தி அக்கா-தங்கை இருவரிடையேயும் நிலவிய நல்லுறவை நறுக்கி விடுகிறாள்.) மகன் காணமற் போவதற்கென்றே திருவிழாக் கூட்டம், குழப்பம் எல்லாம் வரும் போது, அந்த மகனை வெகு நாட்களுக்குப் பிறகு மீண்டும் கண்டு கொள்ளுவதற்கு என்றே அவன் முதுகில் மச்சம் இருப்பதில் என்ன தவறு?

சித்த ஸ்வாதீனத்தை இழந்த தமக்கையின் மண்டையில் அடிபட்டு, திரும்பவும் பழைய நிலையை அடைவது மிகமிகப் பழைய விஷயம். ஏற்கனவே பழைய படங்களில் பார்த்ததும் அல்லாமல் சமீபத்தில் "ஜிப்ஸோ"வில்கூட அதைப் பார்த்தோம். அதை வேறு விதமாக மாற்றுவதற்கு நம் தமிழ்ப்பட டைரக்டர்களுக்குத் தோன்றாதது துரதிர்ஷ்டம்தான்!

அக்கா தங்கையின் மேல் கொண்டிருந்த அன்பைக் காட்டுவதற்குப் படத்தின் முற்பகுதியில் சில காட்சிகள் வருகின்றன. தங்கையின் மனத்தில் பேதம் தோன்றியபிறகு சில காட்சிகள் வருகின்றன. கடைசியில் எல்லாரும் ஒன்று சேருகின்றனர். பதினேழாயிரத்து எழுபது அடி நீளம் கொண்ட இந்தப் படத்தில், வேறு சுவையான அம்சம் எதுவும் இல்லை. இந்த உண்மையை அறிந்த ஸ்ரீமான் பொதுஜனம் கச்சா பிலிம் கிடைக்காத சிரமத்துக்காக எப்படிக் கவலைப்படுவார்? கச்சா பிலிம் இறக்குமதிக் குறைவை எதிர்த்துப் போராடும் நம் படாதிபதிகள் அதை மக்கள் கிளர்ச்சியாக மாற்றப் பெரிதும் விரும்புகின்றனர். அது எப்படி நடைமுறையில் சாத்தியமாகும்? பிலிம் கிடைப்பது சிரமமாயிருக்கும் போதே இத்தனை ஆயிரம் அடிகளை அர்த்தம் இல்லாமல் வீணாக்கி வரும் படாதிபதிகளுக்கு மட்டும் சுலப

மாகப் பிலிம் கிடைத்தால் ஸ்ரீமான் பொது ஜனத்தைச் சும்மா விட்டு விடுவார்களா? இன்னும் சில ஆயிரம் அடிகளைச் சேர்த்து, ஸ்ரீமான் பொதுஜனத்தின் பிராணனை வாங்கி விட மாட்டார்களா?

நம் தமிழ்ப்பட நடிக, நடிகையர்களிடம் நடிப்புத் திறமை இல்லாமல் இல்லை. ஆனால் அந்தத் திறமை சரியான முறையில் பயன் படுத்தப்படாமல் வீணாகி விடுகிறது.

உதாரணமாக, பண்டரிபாய் ஒரு நல்ல நடிகை. ஆனால், அவருக்கு அளிக்கப்படும் பாகங்கள் ஒரே மாதிரியானவை. கணவனை இழந்து, கண்ணீர் விட்டு, ஊர் ஊராக அலைந்து அல்லற்படும் பாத்திரங்கள். "செங்கோட்டைச் சிங்க"த்தில் குழந்தையுடன் வெளியேறி அந்தக் குழந்தையையும் கைசோரவிட்டு, பிறகு பைத்தியமாகி விட்ட பண்டரி பாயை "நான் வளர்த்த தங்கை"யிலும் அதே கோலத்தில் பார்க்கும் போது தினம் சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து பெங்களூர் போகும் பெங்களூர் மெயிலின் நினைவுதான் வருகிறது. அதில் பாராட்ட என்ன இருக்கிறது?



தந்தையாக வந்த நாகையா படுத்த படுக்கையாகி இறந்து போனதும் பல முறை பார்த்த பழைய காட்சிதான்.

மைனாவதி 'நான் வளர்த்த தங்கை'யாக வந்து திருப்தி தரும் படி நன்றாய் நடித்திருக்கிறார்.

குழந்தை டெய்ஸி இரானி இந்தப் படத்தில் நிறைய நடித்திருக்கிறான். நன்றாகவும் நடித்திருக்கிறான். அவன் தங்கை ஹனி இரானியும் வெற்றிப் பாதையில் அடி எடுத்து வைத்து விட்டாள்.

தங்கையின் கணவனாக நடிக்கும் பிரேம் நஸீர் அசையாமல், அலுங்காமல் வருகிறார். மனைவியின் தமக்கையையும் குழந்தையையும் காணப்போன இடத்தில் அவருக்குக் கிடைத்த பயங்கர வசைச் சொல்லைக் கேட்டும்கூட அவர் அசையவில்லை. (இந்த நல்ல கட்டத்தில் ஒரு சிவாஜி இல்லாமற் போனாரே என்றுதான் வருத்தமாயிருந்தது.) அதற்குப் பிறகு வந்த காட்சிகளில் அவர் நடிப்பை அவரது தாடியும் மீசையும் காப்பாற்றி விட்டன! வாழ்க, தாடி—மீசை!

பார்வதி (பண்டரி பாய்)யின் கணவனாக வரும் டி. கே. ராமச்சந்திரன் தாம் ஏற்ற பாத்திரத்தை ஒருவாறு ஒப்பேற்றுகிறார்.

இந்தப் படத்தில் ஏழுமலை அநாவசியமாகக் குறுக்கிட்டுச் சிரமப்படுகிறார்; சிரமப்படுத்துகிறார். அவர் ஹாஸ்யமாக நினைத்துச் செய்தவை யெல்லாம் முழு அசட்டுத்தனம்!

வி. ஆர். ராஜகோபால் மாஜிக் வேலை செய்கிறார். சில இடங்களில் 'ஓவ'ராக இருந்தாலும் அவர் நடிப்பு நன்றாயிருக்கிறது.

வில்லியாகவந்து ராஜகோபாலுடன் கொட்டம் அடிக்கும் சூர்யகலா இந்தப் படத்தில் தேவையில்லாத பாத்திரம். அவரே தேவையில்லையென்றால், அவர் ஆடும் நடனங்களைப் பற்றி என்னத்தைச் சொல்ல! இந்த நடனம் போதாதகுறைக்கு, ஹெலன் வேறு வந்து பல நாட்டு நடனங்களை ஆடித் தீர்த்திருக்கிறார்!

"இன்ப முகம் ஒன்று கண்டேன்" என்ற பாட்டு ஜீவனோடு இருக்கிறது. பி. சுசீலா இனிமையாகக் குரல் கொடுத்திருக்கிறார். ரா. வே.யின் வசனம் கதைப் போக்கை அநுசரித்து மிகவும் நன்றாயிருக்கிறது.






## ஆறும் அத்தியாயம்

# பிறவிப் பயன்

**நீ**ம் மார்பை ஒரு விரலால் குத்திக் கொண்டிருந்த மணியினுடைய கையை இரும்புப் பிடியாகப் பிடித்து வேகமாக உதறித் தள்ளினார் சுகுமாரன். சேகரையும் மல்லிகாவையும் மணியையும் மாறி மாறிச் சில நிமிஷங்கள் பார்த்து விட்டு, திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவரைப்போல் வயிறு குலுங்கப் பெரிதாகச் சிரித்தார்.

"அப்பனே! உன்னை என்னவோ சாமான்யப்பட்ட ஆள் என்று நினைத்தேன். இவ்வளவு கெட்டிக்காரனாக இருப்பாய் என்று எதிர்பார்க்கவேயில்லை. ஏனப்பா உன் மூளை இத்தனை அபாரமாக வேலை செய்கிறது? வாயில் வந்ததை உளறி விட்டு விழிப்பது. அட, மண்டூகமே! என்னுடைய ஸ்டுடியோவுக்கு நானே தீ வைக்க எனக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது? நான் அப்படி நடந்து கொள்வதற்கு ஏதாவது ஒரு காரணமாவது உன்னால் சொல்ல முடியுமா?" என்றார் சுகுமாரன்.

"ஒன்றுக்கு இரண்டாகக் காரணங்கள் கூற முடியும், ஸார்! உங்களுக்குப் பண முடையாக இருக்கிறது. 'ஸ்டேஜ்' தீப் பற்றி எரிந்து விட்டது என்று சொல்லி இன்ஷூரன்ஸ் பணம் வாங்கலாம் என்ற நோக்கம் ஒரு பக்கம் இருக்கலாம். அதற்காகத்தானே இரண்டு நாட்களுக்கு முன்னால் அதில் இருந்த விலையுயர்ந்த பொருள்களையெல்லாம் அப்புறப்படுத்த ஏற்பாடு செய்தீர்கள்?

"வேலைநிறுத்தம் செய்த தொழிலாளர்கள் கூட்டாகவோ அல்லது அவர்களில் யாரோ ஒருவர்தான் தீ வைத்து விட்டார்கள் என்று குற்றம் சாட்டி அனைவரையுமே வீட்டுக்கு அனுப்பிவிட்டு, புது ஆட்களைக் குறைந்த சம்பளத்தில் அமர்த்திக் கொள்ளலாம் என்ற நீசத்தனமான எண்ணமும் மற்றொரு பக்கத்தில் இருக்கலாம்.

"நேற்று இரவு நான் தீயைத் தக்க சமயத்தில் அணைத்து விட்டுப் பார்த்ததில் கீழே ஒரு கறுப்புக் கண்ணாடி கிடந்தது. அதைக் கையில் எடுத்ததுமே இலங்கையிலிருந்து நீங்கள் புதிதாக வாங்கி வந்திருந்த கண்ணாடிதான் அது என்று தெரிந்து போயிற்று. உடனே நீங்கள்தான் இந்தச் செயலில் ஈடுபட்டிருக்க வேண்டும் என்று உணர்ந்தேன். எதற்கும் நிச்சயப்படுத்திக் கொள்ள விரும்பி உங்கள் வீட்டுக்கும் மல்லிகாவின் வீட்டுக்கும் டெலிபோன் செய்தேன். நீங்கள் அங்கெல்லாம் இருக்கவில்லை. எங்கே இருந்தீர்கள் என்று சொல்ல நீங்கள் தயங்கலாம். ஆனால் நான் தைரியமாகச் சொல்ல முடியும். என் கண்களில் படாமல் ஓடிச் சென்று தொலைவில் நிறுத்தியிருந்த காரில் ஏறிக் கொண்டு வீட்டுக்கு விரைந்து கொண்டிருந்தீர்கள்! உடனடியாக நான் போலீசுக்கு டெலிபோன் செய் திருக்கலாம். ஆனால் இந்தப் பாழாய்ப் போன மனம் கேட்க மாட்டேனென்கிறது. உங்களுக்காகப் பரிந்து பேசுகிறது. போனால் போகிறார் விட்டுவிடு என்று கெஞ்சுகிறது. அதனால்தான் உங்களிடமே இவற்றைச் சொல்கிறேன். இதற்கு மேலும் என்னைச்

# பெருநிலவு

கி. ராஜேந்திரன்





சோதிக்காதீர்கள். அடுத்த முறை உங்களைக் காட்டிக் கொடுத்துத் துரோகம் இழைத்தவனாகி விடுவேன். ஒன்று இம்மாதிரியான காரியங்களில் ஈடுபடுவதை நிறுத்தி விடுங்கள். அல்லது என்னை வேலையை விட்டு நீக்கி விடுங்கள். நிம்மதியாகப் போய்ச் சேருகிறேன்'' என்றான் மணி. அவன் குரல் தழதழத்தது.

அவனுடைய நன்றி நிறைந்த உள்ளமும் கடமை உணர்ச்சியும் சுகுமாரனுடைய உடலைக் கூன்றச் செய்தன. குனிந்த தலை நிமிராமல் கீழே நோக்கியவாறு கால் கட்டை விரலால் தரையைக் கீறினார்.

மணி திரும்பி நடக்க ஆரம்பித்தான். கதவைத் திறக்க இருந்த சமயத்தில், ''மணி!'' என்று அழைத்துக் கொண்டே அவனை நெருங்கினார் சுகுமாரன். அவன் விரல்களைப் பற்றி இலேசாக அழுத்தி வார்த்தைகளால் வடிக்க முடியாத தமது நன்றிப் பெருக்கைத் தெரிவித்து விட்டுத் திரும்பினார்.

''பிழைக்கத் தெரியாத மடையன்! வாயை மூடிக் கொண்டு போய் விட்டான். அவன் நிலையில் நான் இருந்திருக்க வேண்டும்'' என்று வாய்விட்டு வருத்தப்பட்டுக் கொண்ட சேகர், ''டைரக்டர் ஸார்! உங்கள் லீலைகளைப் பற்றி நான் போட்டிருக்கும் 'லிஸ்'டில் இன்னொரு 'ஐட்ட'மும் சேர்த்துக் கொள்ள வேண்டும் போலிருக்கிறதே?'' என்று தயங்காது கேட்டான்.

சுகுமாரன் பதில் பேசாமல் பற்களை நறநறவென்று கடித்தார். சேகர் சிரித்துக் கொண்டே, ''மணியிடம் இன்னும் கொஞ்சம் விவரமாகக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்'' என்று சொல்லி விட்டு எழுந்தான். மணியைத் தேடிக்கொண்டு வெளியே போனான்.

ஆனால் அவனுக்கு மணியிடம் ஏமாற்றமே ஏற்பட்டது. ''ரொம்ப அக்கறையாகக் கேள்வி கேட்க வந்து விட்டான்! உனக்கு அருகே வைத்துப் பார்க்கும் போது அவர் புண்ணியாத்மா! உன் யோக்கியதை எனக்குத் தெரியாது என்று நினைத்தாயா?' என்று பாய்ந்தான் மணிசேகரன்.

• • •

சுகுமாரனுடைய நடத்தையால் ஏற்கெனவே கலங்கிப் போயிருந்த உள்ளத்துடன் ஜாகைக்குத் திரும்பிய

மணிக்கு அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சியாக மரகதம்மாளும் விமலாவும் அவன் வருகைக்காகக் காத்திருந்தார்கள். அவர்களைப் பார்த்த உடனேயே ஏதோ விபரீதம் நடந்து விட்டது என்று அவனுடைய உள்ளுணர்வு அறிவித்தது.

"விமலா! என்ன நடந்தது?" என்று கவலையுடன் கேட்ட அவனுக்கு விமலாவின் விம்மலும் அழுகையும்தான் பதிலாகக் கிடைத்தன. அவன் மரகதம்மாளைத் திரும்பிப் பார்த்தான். நடந்ததையெல்லாம் விளக்கிச் சொன்னாள் அவள்.

மரகதம்மாள் சொன்னதெல்லாம் மணிக்குப் புரியவுமில்லை; பிடிக்கவும் இல்லை. திடுதிப்பென்று பெட்டியும் படுக்கையுமாக இப்படி வந்து நின்றால் அவர்களை எங்கே கொண்டு போய் வைப்பது? எப்படிச் சமாளிப்பது? அவனுக்குக் கோபம் கோபமாகத்தான் வந்தது.

எடுத்த எடுப்பிலேயே, "உங்களுக்கெல்லாம் மூளை கிடையாதா?" என்றான்.

ஆதரவு தேடி வந்த அவர்கள் மணிசேகரனின் ஆத்திரத்தைக் கண்டு ஒன்றும் புரியாமல் ஒரு அடி பின் வாங்கினார்கள்.

"ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கு மானம் என்ன? வெட்கம் என்ன வந்தது? வீடு, குடும்பம் என்றால் அப்படித்தான் இருக்கும். சண்டையும் சச்சரவும் தினமும்தான் நடக்கும். அதற்காகப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு வெளியேறி விடுவதா? இன்று ஓங்குகிற கையே நாளை அணைக்காதா? அவர்கள்தான் குழந்தைத்தனமாகச் சண்டை போட்டுக் கொண்டார்கள் என்றால் பெரியவராகிய உங்களுக்கு மூளை எங்கே போயிற்று? குடும்பம் நடத்தி அறியாதவரா நீங்கள்?

"ஒரு சமயம் சண்டையும் பூசலுமாக இருந்தால் இன்னொரு சமயம் சிரிப்பும் கும்மாளமுமாகத்தான் இருக்கும். வயது



வந்த பெண்ணை அழைத்துக் கொண்டு ரோசத்தோடு வந்து விட்டீர்களே? எங்கே தங்குவீர்கள்? என்னுடைய ஒரே ஒரு அறையில் மூன்று பேரும் இருக்க முடியுமா? நடராஜனைப் பற்றிப்



பேசிய சேகர் என்னைப் பற்றிச் சொல்ல மாட்டானா? வேறு வீடு பார்ப்போம் என்றால் சுலபமாக முடிகிற காரியமா? அப்படியே கிடைத்தாலும் இரண்டு பேரும் தனியாக வசிப்பீர்களா? வயிற்றுக்கு என்ன செய்வீர்கள்? எப்படிப் பிழைப்பீர்கள்?'' என்றெல்லாம் சரமாரியாகக் கேள்விகளை அடுக்கிக் கொண்டே போனான் மணிசேகரன்.

தான் செய்து விட்ட மிகப் பெரிய தவற்றை மணியினுடைய கேள்விகள் கொஞ்சம் கொஞ்சமாக மரகதத்துக்கு உணர்த்திக் கொண்டே வந்தன. அவன் பேசி முடித்ததும், ''உன்னை நம்பித்தானடா தைரியமாக வந்தேன்'' என்று புலம்பினாள் மரகதம்மாள்.

மணியினுடைய கோபத்தை இது மேலும் கிளறி விட்டது. ''நான் என்ன கோடீசுவரனா? மாளிகை கட்டிக் கொண்டிருக்கிறேனா? அல்லது மந்திரவாதியா? 'சூ மந்திரக்காளி' போட்டால் எல்லாம் சரியாகி விடும் என்று நினைத்தீர்களா? என்னை நம்பி ஓடி வந்தார்களாம் நம்பி! என்ன மூளை? அறிவுக் களஞ்சியம்!''

மணி சொல்வதில் நியாயம் இருப்பது விமலாவுக்குத் தெரிந்திருந்தது. ஆனால் அவன் தன் தாயாரிடம் இப்படிக் கத்தியது பிடிக்கவேயில்லை. கண்களைத் துடைத்துக் கொண்டு, ''அம்மா! நாம் இவரிடம் வந்ததே தப்பு. ரொம்ப நல்லவர் என்று சொல்லி நம்பிக்கை வைத்தாய். மண்குதிரையை நம்பி நட்டாற்றில் இறங்கிய கதையாக முடிந்தது. எதற்காக அம்மா, இவரிடம் கெஞ்ச வேண்டும்? வா, போகலாம்'' என்று தாயாரைப் பிடித்துத் தள்ளிக்கொண்டு போவதற்கு முயன்றாள் விமலா.

''எங்கேயடி நாம் போவது?'' என்று மகளைப் பரிதாபமாகப் பார்த்துக் கேட்டாள் மரகதம் நகர்ந்து கொடுக்காமல்.

''எங்கே வேண்டுமானாலும் போகலாம், அம்மா! இந்த ஊரை விட்டே, ஏன் இந்த உலகத்தை விட்டே வேண்டுமானாலும் போய் விடலாம். போவதற்குத்தானா இடமில்லை?'' என்று சொல்லிக் கொண்டு நடந்தாள் விமலா விரக்தியுடன்.



அகில இந்திய ரேடியோவின் 1958-ம் ஆண்டு கர்நாடக சங்கீதப் போட்டியில் வயலின் வாத்தியத்தில் முதல் பரிசு பெற்ற இளைஞர் சென்னை – எல். வைத்தியநாதன் ராஷ்டிரபதி அவர்களிடம் ரேடியோ சங்கீதசம்மேளனத் துவக்க விழாவில் பரிசு பெறுகிறார்.

---

'உன் மீது உள்ள வாஞ்சையினால், அன்பினால், பாசத்தினால், ஈடேறாத காதலினால், என் மனம் பாகாக உருகிக் கொதி விடுவதாலேயே அப்படிப் பேசினேன் நான் என்பதை நீ உணரவில்லையா விமலா?' என்று கேட்க விரும்பிய மணி, "கொஞ்சம் பொறு விமலா!" என்று அவளைத் தடுத்தான்.

அவன் முகத்தைப் பார்க்கவே 'ஐயோ, பாவம்!' என்று சொல்லும்படி இருந்தது விமலாவுக்கு. தான் படும் வேதனையை விடத் தன் பொருட்டு அவன் நூறு மடங்கு வேதனைப்படுகிறான் என்பது தெரிந்தது. ஆனால் விட்டுக் கொடுத்துப் பேசவில்லை அவள். ஒரு புன்சிரிப்புக்கூட மலரவிடாமல் அவள் உதடுகள் ஒரு நேர் கோடாக நிலைத்து நின்றன.

தன் அறையைத் திறந்து விட்டான் மணிசேகரன். "இங்கேயே கதவைச் சாத்திக் கொண்டு உட்கார்ந்திருங்கள். சற்று நேரத்தில் வந்து விடுகிறேன்" என்று சொல்லி விட்டுப் போனான்.

* * *

அந்தச் சின்னஞ் சிறிய அறையைச் சுற்றிலும் தன் பார்வையைச் செலுத்தினாள் விமலா. ஒரு மூலையில் சிறிய மேசை, நாற்காலி. மறு பக்கத்தில் பெட்டி, படுக்கை இவ்வளவுதான். மேசையருகே சென்றாள் அவள். அங்கே படித்துப் படித்துக் கந்தலாகிக் கிடந்த ஒரு புத்தகம் பிரித்தபடியே கவிழ்த்து வைக்கப்பட்டிருந்தது. அதைக் கையில் எடுத்துப் பார்த்தாள் விமலா. அவள் எதிர்பார்த்தபடியே கவிமணியின் 'உமார்கய்யாம் பாடல்கள்'தான். முன் எப்போதோ, கடந்து போன பிறவியில் கேட்டது போல் மணியின் குரலிலே அந்தப் பாடல் அவள் காதுகளில் அலை பாய்ந்தது:

அன்பே! யானும் நீயும்இசைந்து
அயலில் எவரும் அறியாமல்,
வன்பே உருவாம் விதியினையும்
வளைத்துன் னாக்கி முயல்வோமேல்
துன்பே தொடரும் இவ்வுலகைத்
துண்டு துண்டாய் உடைத்துப்பின்
இன்பே பெருகி வளர்ந்திடுமோர்
இடமாய்ச் செய்ய இயலாதோ?

புத்தகத்தை மறுபடியும் இருந்த படியே வைத்து விட்டு மேசையின் மீது கைகளை ஊன்றிக் கொண்டாள் அவள். வாழ்க்கையிலும் அவளுக்கு ஊன்று கோல் தேவைப்பட்டது. ஆனால் கிடைக்கவில்லை. 'மனதார நான் மணியைக் காதலித்திருந்தால் வாழ்க்கை எவ்வளவு இன்பமாக, கவலையின்றி நிம்மதியாக இருக்கும்? அதுவல்லாமல் இந்தப் பாழாய்ப் போன மனம் அவரையே சுற்றிச் சுற்றி அலைந்து துன்பத்திலும் துயரத்திலும் உழலுவானேன்?' விமலாவுக்குப் பெருமூச்சுக்களை வெளிப் படுத்துவதைத் தவிர வேறு எதுவும் செய்யத் தோன்றவில்லை.

* * *

நண்பனுடைய நண்பனுக்கு நண்பன் மூலமாக ஒரு வீட்டைத் தேடிப் பிடித்தான் மணி. தனிப்பட்ட சிறிய வீடாக எல்லாச் சௌகரியங்களுடனும் இருந்தது. வாடகை இருநூறு ரூபாய் என்றதும் அவன் மூர்ச்சையாகி விழாமல் இருந்தது அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது. எப்படியோ அதை நூற்று ஐம்பதாகக் குறைத்து இரண்டு மாத வாடகையை அட்வான்ஸாகக்கொடுத்ததோடு பாங்கியில் தன்னுடைய சேமிப்பு நிதியையும் பாதியாகக் குறைத்துக் கொண்டான் மணி.

மரகதத்தையும் விமலாவையும் அங்கு அழைத்துக் கொண்டு போய் விட்டான். தேவைப்பட்ட குறைந்தபட்ச சாமான்களை வாங்கி நிரப்பினான். கையில் செலவுக்குக் கொஞ்சம் பணமும் கொடுத்து விட்டு விடைபெற்றுக் கொண்டான் இரவு பத்து மணிக்கு.

'ஜாக்கிரதையாக இருங்கள். நான் காலையில் வந்து பார்க்கிறேன்" என்று சொல்லி விட்டுப் படிகளில் இறங்கிப் போன அவனை "அத்தான்!" என்ற அழைப்பு தடுத்து நிறுத்தியது.




முக்கிய அறிவிப்பு

49 ஆண்டுகளாகப் புகழ் பெற்றுள்ள எங்கள்

# ஆர். எஸ். பதி மருந்து

(REGD.)

தீபாவளி தினம் முதல்

புதிய அழகிய மூவர்ண அட்டைப் பெட்டியில் கிடைக்கும் என்பதை பொதுமக்களுக்கும் வணிகப் பெருமக்களுக்கும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்

## ஆர். எஸ். பதி அண்டு கோ.

(ஸ்தாபிதம்: 1909)

த. பெ. எண் 99

214 & 215. மேல மாசி வீதி மதுரை

மதுரை விற்பனை நிலையம்:
மேலக் கோபுரம் உட்புறம்
மீனாக்ஷி அம்மன் கோவில், மதுரை

சென்னை விற்பனை நிலையம்:
111, தேவராஜ முதலித் தெரு
(லாலா மார்க்கெட்)
சென்னை - 3







அவரது ஆஸ்த்மா உபாதை களைக் குணப்படுத்த எப்ரிலைம் மிகச் சிறந்தது. ஒரு பாட்டில் மருந்தை உபயோகித்தால் அதன் பூரண பலன்களைக் காண்பார்.

நீண்ட நாள்பட்டதும், மிக்க உபாதை தரக் கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த ஹானியற்ற மருந்து

யூனியன் டிரக் கம்பெனி, லிட்.
மதராஸ்டிப்போ. 2, ஜோன்ஸ்லேன், மதராஸ்-1

# S. S. L. C. 1959

AN IMPORTANT NEWS FOR ALL BOYS AND GIRLS — AND THEIR PARENTS TOO!

புது கேள்வி முறையில்

நிச்சயமான வெற்றி பெற

## லிப்கோ புதிய

# டெஸ்ட்-பேப்பர்கள்

[ விடைகளுடன் வினாத் தாள்கள் ]

*

1. ஆங்கிலம் (I & II Papers) ரூ. 1.25
2. சமூக பாடம் ரூ. 1.25
3. பொது விஞ்ஞானம் ரூ. 1.25
4. கணக்கு (General) ரூ. 1.25
5. கணக்கு (Composite) ரூ. 1.80
6. LIFCO New Model Essays & Letters for S. S. L. C. ரூ. 1.25

தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, சென்னை-17; எம். தாமோதரம் & கம்பெனி, அப்பா பில்டிங்ஸ், சென்னை-1; ஹிக்கின்பாதம்ஸ், சென்னை-2 & ரெயில்வே ஸ்டாள்கள்.

# என் சேலையைப் பார்!

## அது
TRAYONS
## "டிரேயான்ஸ்"
## ரேயான் நூல்களில் நெய்யப்பட்டது



உங்கள் ஆடைகளின் அழகிற்கும் உழைப்புக்கும் ''டிரேயான்ஸ்'' ரேயான் நூல்களே. நவீன முறையில் தயாரிக்கப்பட்ட இந்த ''டிரேயான்ஸ்'' ரேயான் நூல்கள் சிக்கன செலவில், பகட்டான ஆடைகள் அணிய உதவுகின்றது. ''டிரேயான்ஸ்'' ரேயான் நூல்கள் 120, 150 டினேயர்களில் தயாரிக்கப்பட்டு எங்களால் வினியோகிக்கப்படுகின்றன.



ஸ்டாக்கிஸ்டுகள் :

## ரேயான் டிரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்

61, செம்புதாஸ் தெரு, சென்னை-1

தந்தி : "CELYARN"

கிளைகள்

போன் 253.
தந்தி : "CELYARN"
68/416, மெயின் ரோடு
செவ்வாய்ப்பேட்டை
சேலம்.

போன் 598.
தந்தி : "CELYARN"
114-A, தெற்கு மாசி வீதி
மதுரை.

தந்தி, "RAYONS"
இந்தியா பில்டிங்
அவிநாசி ரோட்,
கோவை.

'விமலா உன்னை அழைத்து விட்டாளடா! 'அத்தான்' என்று உன்னைக் கூப்பிட்டு விட்டாளடா! மணி! நீ அதிர்ஷ்டசாலி. பிறவிப் பயனைப் பெற்று விட்டாய்! பெறற்கரிய பேறு பெற்று விட்டாய். பாக்கியசாலியே ஏன் நிற்கிறாய்? ஆனந்தக் கூத்தாடு! களிநடம் புரிந்து மகிழ்ந்து போ! தன் பவழச் செவ்வாயால் தேனினும் இனிய குரலினால் அமுதூறும் நாவினால் உன்னை அன்பு பொங்க 'அத்தான' என்று அழைக்க நீ என்ன உபகாரம் செய்து விட்டாய் அவளுக்கு? கத்தினாய்! திட்டினாய்! ஏசினாய்! ஆத்திரப்பட்டாய்! படபடத்துப் பொரிந்து தள்ளினாய்! திரும்பு! அவளிடம் உன்னுடைய கேவலமான நடத்தைக்கு மன்னிப்புக் கேள்!'

இருவருமே ஒருவரிடம் ஒருவர் மன்னிப்பு கேட்டுக் கொண்டார்கள். கண்களில் நீர் ததும்ப ஒருவரை யொருவர் மன்னிக்கவும் செய்தார்கள்.

''எவ்வளவோ உதவி செய்திருக்கிறீர்கள். இவை எல்லாவற்றையும்விட மிகப் பெரிய உதவியை எதிர்பார்க்கிறேன் உங்களிடம்'' என்றாள் விமலா.

''என்ன செய்ய வேண்டுமோ சொல். கட்டளையாக மதித்துச் செய்கிறேன். உதவி, மண்ணாங்கட்டி என்றெல்லாம் என்னிடம் பேசாதே!'' என்றான் மணிசேகரன் உற்சாகமாக.

''அத்தான் இந்தப் பக்கம் வராமல் இருந்துவிடப் போகிறார். எப்படியாவது என்னைக் காண வரச் செய்யுங்கள்'' என்றாள் விமலா.*

கரைபுரண்ட உற்சாகம் ஒருகணத்தில் வற்றிவிட்டது மணிக்கு. ''ஆகட்டும், விமலா!'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினான். உடலும் உள்ளமும் சோர்ந்து அவனைக்கீழே தள்ள ஒவ்வொரு அடிக்கும் கால்களை இழுத்து இழுத்து வைத்துக் கொண்டு நடந்தான்.

• •

அடுத்த நாள் நடராஜனைக் காணச் சென்றபோது மணிக்கு எங்கிருந்து தான் அவ்வளவு கோபமும் தைரியமும் வந்ததோ தெரியவில்லை. இரண்டு கன்னங்களிலும் மாறி மாறி நாலு இழுத்து விட்டான். தண்டனையை ஏற்றுக்கொள்வது என்று தீர்மானித்து விட்ட நடராஜன் பொறுமையை இழக்காமல் இருக்கத் தன் கையில் இருந்த கண்ணாடி காப்பி டம்ளரைக் கெட்டியாகப் பிடித்து அழுத்தினான். கலகல வென்ற ஓசையுடன் அது உடைந்து கீழே சிதறியது. ஒரு துகள் மட்டும் நடராஜனுடைய ஒரு விரலைப் பதம் பார்த்து விட்டது. காயத்திலிருந்து சொட்டுச் சொட்டாக சிந்திய ரத்தத்தைக் கண் கொட்டாமல் பார்த்தான் நடராஜன்.

## ஏழாம் அத்தியாயம்

# விழுந்த நட்சத்திரம்

மணியும் சேகரும் ஒருவர் பின் ஒருவராக அறையை விட்டுச் சென்ற பிறகு மல்லிகா சுகுமாரனுடைய மேஜையின் மீது உட்கார்ந்து கொண்டு அவர் முதுகைத் தடவிக் கொடுத்து ஆறுதலளிப்பதற்கு முயன்றாள்.

'' நான்தான் முன்னமேயே சொன்னேனே, மல்லிகா! 'திட்டமிட்டபடி எதுவுமே நடப்பதில்லை, எல்லாமே தலை கீழ்ப்பாடமாகத்தான் இருக்கிறது' என்று. அது எவ்வளவு உண்மை என்பது இப்போதாவது உனக்குத் தெரிகிறதா? நீதான் 'மகிழ்ச்சியும் துயரமும் நாமே ஏற்படுத்திக் கொள்வதுதானே அப்பா?' என்று கேட்டாய் குழந்தை போல. இப்படியே எல்லாக் காரியங்களும் நடந்து கொண்டு போனால் எப்படி சந்தோஷப்பட முடியும்? நீயே சொல்லு!'' என்று மனம் விட்டுக் கேட்டார் சுகுமாரன்.

'' நான் கூறியதில் தவறே கிடையாது, அப்பா! நீங்களாகவேதான் இந்தத் துயரத்தை வரவழைத்துக் கொண்டிருக்கிறீர்கள்'' என்றாள் மல்லிகா.

'' தப்போ சரியோ நடந்தது நடந்து விட்டது. மணியைப் பற்றி எனக்குக் கவலையில்லை. என்னை ஒரு நாளும் காட்டிக் கொடுக்க மாட்டான். சேகரை நினைத்தால்தான் வயிற்றைக் கலக்குகிறது. என்னைப் பற்றி ஏற்கெனவே அவன் தெரிந்து கொண்டிருக்கும் பல விஷயங்களுடன் இந்தச் சம்பவமும் சேர்ந்து கொள்ளும்!''

'' அவரைப் பற்றியும் நீங்கள் கவலைப்படவேண்டிய அவசியம் இல்லை, அப்பா! அவர்தான் என்னுடைய கணவராகப் போகிறாரே!''

சுகுமாரன் தலையை ஆட்டினார். ''கட்டிய மனைவியையும் மாமனாரையும் பற்றி அவதூறு சொல்ல மாட்டான் என்று நம்பலாம். ஆகவே கல்யாணம் ஆன பிறகு பணம் கேட்டால் கொடுக்க மறுத்து விடலாம். ஆனால் கல்யாணம் இன்னும் நடக்க வில்லையே, மல்லிகா?''

---

★ 'அத்தான் நடராஜன் தன்னைக் காண வரமாட்டாரா? வந்து தன் பின்னால் நிற்க மாட்டாரா?' என்று விமலா ஏங்கி நிற்கும் காட்சியைத்தான் இவ்வார அட்டைச் சித்திரமாக ஓவியர் லதா சித்திரித்திருக்கிறார்.



நெல்லை தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் ஆதரவில் சமீபத்தில் பாரதி விழா வெகு விமரிசையாக நடைபெற்றது. பேராசிரியர் அ. சீநிவாசராகவன் இவ்விழாவுக்குத் தலைமை வகித்துச் சிறப்பித்தார். திரு ந. சஞ்சீவி எம். ஏ. திரு எல். ஆர். ஜான் எம். ஏ., திரு தி. சேஷாத்திரி எம். ஏ., பொன்னரசு எம். ஏ., பி. டி., திரு ரகுநாதன் ஆகியோர் பாரதியாரின் பெருமையை எடுத்துரைத்தார்கள்.

குறும்புத்தனமாகச் சிரித்தாள் மல்லிகா. ''நல்ல மனிதரப்பா நீங்கள்! முன்பு 'சேகரைக் கல்யாணம் செய்துகொள்வதா? கூடவே கூடாது!' என்று சண்டை போட்டுத் தடுத்தீர்கள். இப்போது என்னடாவென்றால் 'இன்னும் திருமணம் நடக்கவில்லையே?' என்று கவலைப்படுகிறீர்கள்.''

''இப்போதுகூடச் சொல்கிறேன், மல்லிகா! என்னை ஒரு இக்கட்டான நிலையிலிருந்து தப்புவிப்பதற்காக நீ திருமணம் செய்துகொள்ள வேண்டாம். உனக்கே துன்பம் விளைவிக்கக் கூடிய அளவுக்கு நான் அவ்வளவு சுயநலப் பிசாசு அல்ல. அவன் விஷயத்தில் எதையுமே நிச்சயமாகச் சொல்ல முடியாது. நாம் அவனிடம் வைக்கும் நம்பிக்கை தவறாக முடிந்தாலும் முடியலாம் அல்லவா?'' என்றார் சுகுமாரன்.

நடராஜன் தன் வீட்டுக்கு வந்ததும், தன் காதலை ஏற்றுக் கொள்ளுமாறு வாதாடியதும், தன் இதய அந்தரங்கத்தின் விருப்பத்துக்கு மாறாக அந்தக் காதலை மறுதளித்ததும் மல்லிகாவின் கண் முன்னே தோன்றின.

''யோசித்துச் செய்யலாம், அப்பா! எதற்கும் பம்பாய் போய் வந்த பிறகு பார்த்துக் கொள்ளலாமே?'' என்று கூறினாள் அவள்.

சுகுமாரனுடைய முகம் தொங்கிவிட்டது. ''இவ்வளவுதானா? ஒரு முடிவுக்கு வந்து உறுதியாக இருந்தாய் என்றல்லவா நினைத்தேன்!'' என்று கேட்டார் ஏமாற்றம் நிறைந்த குரலில்.

'எது எப்படிப் போனாலும், நீங்கள் என்னதான் சொன்னாலும் நான் கண்டிப்பாகச் சேகரைத்தான் மணந்து கொள்ளப் போகிறேன்' என்று சொல்லியிருந்தால் சுகுமாரன் திருப்தி யடைந்திருப்பாரோ என்று தனக்குள் எண்ணமிட்டாள் மல்லிகா.

* * *

**ப**தினேழாயிரம் அடி உயரத்தில், மணிக்கு முந்நூற்றைம்பது மைல் வேகத்தில் பறந்துகொண்டிருந்தது விமானம். விமான இயந்திரங்களின் இடைவிடாத உறுமல் ஒலி காதுகளில் தொடர்ந்து பாய்ந்து சிந்தனையை மந்தப்படுத்தியது. மல்லிகாவின் கண்கள் தாமாகவே மூடிக் கொண்டு விட்டன. அவள் மீண்டும் கண் விழித்தபோது, நட்சத்திர மண்டலத்துக்கு மேலே தான் இருப்பதைக் கண்டு அதிசயித்தாள். தான் காண்பது கனவோ பிரமையோ அல்ல என்று நிச்சயப்படுத்திக்கொள்ள விரும்பித் தன் துடையைக் கிள்ளிப் பார்த்துக் கொண்டாள். 'ஆனால் இதோ எனக்குக் கீழே ஆயிரமாயிரம் நட்சத்திரங்கள் சிதறிக் கிடக்கின்றனவே? நட்சத்திர மண்டலமே பரந்து விரிந்து கிடக்கின்றதே? கண்ணைப் பறிக்கும் ஒளியுடன் மின்னுகின்றனவே? இதெல்லாம் எப்படி உண்மையாக இருக்க முடியும்?' என்று யோசித்தாள்.

அடுத்த கணமே விமானத்துக்குள்ளேயே பொருத்தப்பட்டிருந்த ஒலி பெருக்கி மூலம் விமான உபசரணைப் பெண் பிரயாணிகளுடன் பேச அவளுடைய சந்தேகங்கள் தீர்ந்தன. ''பம்பாய் நகரம் இரவில் அளிக்கும் ஜகஜ்ஜோதியான காட்சியை நீங்கள் பார்த்து அனுபவிக்க இத்தனை நேரம் விளக்குகளை அணைத்து வைத்திருந்தோம். இன்னும் சில விநாடிகளில் 'ஸான்டாக்ரூஸ்' விமான நிலையத்தில் இறங்கி விடுவோம். உங்களுக்கு எங்களுடைய மனமார்ந்த வந்தனங்கள்'' என்று ஒலிபெருக்கியில் அறிவித்தாள் உபசரணைப் பெண்.

**ப**ம்பாய் நகரம் மல்லிகாவைப் பிரமிப்பில் ஆழ்த்தியது. திரைப்படத் தொழிலுக்கு மத்தியகேந்திரமாக விளங்கும் அந்த நகரிலே எந்தப் பக்கம் திரும்பினாலும் சினிமா விளம்பரங்களில் அழகிய அல்லது அழகுபடுத்தப்பட்ட

நட்சத்திரங்கள் தெருவில் செல்பவர்களைப் பார்த்துச் சிரித்தார்கள். கேலி செய்தார்கள், கோபப்பட்டார்கள், அழுதார்கள், காதல் புரிந்தார்கள், அழைப்பு விடுத்தார்கள். இன்னும் பல விதமான தொந்தரவுகளும் செய்தார்கள். பலாச் சுளைகளில் ஈ மொய்ப்பது போல் வீதிகளில் ஜன நெரிசல். சட்டத்தையும், ஒழுங்கு, கட்டுப்பாடு முதலானவற்றையும் அடியோடு மறந்து விட்டு, பயத்தில் வயிற்றைக் கலக்கும் வேகத்தோடு விரைந்து செல்லும் கார்கள், மஞ்சள் நிற டாக்ஸிகள். பெட்டிபெட்டியாக அடுக்கி வைத்தது போல் வரிசை வரிசையான வானளாவ முயலும் வீடுகள். திலீப்குமாரைப் போல் கேசத்தை நெற்றியில் புரள விடும் இளைஞர்கள், ஜானிவாக்கரைப் போல நடக்க முயலும் யுவர்கள், மெல்லிய உடைகள் காற்றிலே படபடத்துப் பறக்கும்போது பண்பையும் பறக்கவிட்ட பெண்மணிகள், ஹாலிவுட் நட்சத்திரம் மெர்லீன் மன்ரோவின் நடையைப் பயிலும் நவநாகரிகத்தின் சின்னங்கள் முதலிய எல்லாவற்றையும் பார்த்து ஒரேயடியாக ஆச்சரியப்பட்டுப் போனாள் மல்லிகா. எங்கு பார்த்தாலும் ஒரே அவசரம் அவசரமாக இருக்கக் கண்டு தானும் பம்பாய் முழுவதையும் சுற்றிப் பார்த்து மகிழ அவசரப்பட்டாள். திரைப்பட வெளியீட்டு விழாவுக்கு இன்னும் இரண்டு தினங்கள் இருந்ததால் பம்பாய் நகரம் முழுவதையும் சுற்றிப் பார்த்தார்கள்.

பிளாட்பாரத்தில் இருந்து கொண்டு பூட்ஸுக்குப் பாலிஷ் போடுவதிலிருந்து பெரிய பெரிய உத்தியோகங்களில் ஆயிரக் கணக்கில் சம்பளம் வாங்கும் வரையில் தமிழர்களை அங்கே சந்திக்க முடிந்தது. சின்னச் சென்னை என்று அன்புடன் அழைக்கப்படும் பம்பாயின் ஒரு பகுதியான மாதுங்காவில் தமிழ்ப் பண்பாடும் கலாசாரமும் செழித்திருப்பது கண்டு மகிழ்ந்தார்கள்.

இன்னும் பம்பாய் நகரத்தில் பார்க்க வேண்டிய பல இடங்களையும் காட்சிகளையும் கண்டு களித்தார்கள்.

தாஜ்மஹால் ஓட்டலில் மிகப் பெரிய விருந்துக்கு ஏற்பாடு செய்தார் சுகுமாரன். திரைப்படத் தொழிலில் ஈடுபட்டிருந்த பல்வேறு தரப்பினரும் விருந்துக்கு வந்திருந்தார்கள். பத்திரிகை நிருபர்கள் விசேஷ அழைப்பின் பேரில் குழுமினார்கள். எல்லோருக்கும் மல்லிகாவை அறிமுகம் செய்து வைத்தார் சுகுமாரன். அதன் பிறகு திரைப் படத்தையும் பார்த்தார்கள்.

விமரிசனங்கள் வெளியாகிய எல்லாப் பத்திரிகைகளையும் அவர்கள் தங்கியிருந்த ஹோட்டல் அறைக்கு வரவழைத்தாள் மல்லிகா. ''விமர்சனங்களில் படிப்பதற்கு என்ன இருக்கிறது? எல்லோரும் 'பிரமாதம் அபாரம்' என்று புகழ்ந்திருப்பார்கள். வேறு எப்படி...'' என்று சொல்லிக் கொண்டே போன சுகுமாரன் மல்லிகாவின் முக மாறுதலைக் கண்டு சட்டென்று நிறுத்திக் கொண்டார்.

மல்லிகா விமர்சனத்தின் தலைப்பை உரக்கப் படித்தாள். ''சுகுமாரன் பிலிம்ஸ் 'ஆன்ஸு' மிகப் பெரிய ஏமாற்றம்!'' பத்திரிகையைத் 'தொப்'பென்று கீழே போட்டு விட்டு இன்னொரு பத்திரிகையை எடுத்தாள். ''வாளிப்பான உடற்கட்டும் வசீகரமான அழகும் இருந்தால் மட்டும் நட்சத்திரமாகிவிட முடியாது. அதற்கு நடிப்புத்திறனும் வேண்டும் என்பதை இந்தப் படம் சந்தேகமற நிரூபிக்கிறது!'' என்ற வரிகளைப் படித்ததும், கோபத்துடன் பத்திரிகையை வீசி எறிந்து விட்டு இன்னொரு பத்திரிகையைப் பிரித்தாள்.

ஒரு சோபாவில் காலை நீட்டிப் படுத்திருந்த சேகர் கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு, ''படிக்காதே, மல்லிகா! போதும்! எல்லாமே இந்த லட்சணத்தில்தான் இருக்கும்'' என்று எச்சரிக்கை செய்தான். அவன் இரக்கப்படாமல் பல்லை இளித்தது மல்லிகாவுக்கு எரிச்சலைத் தந்தது. எழுந்து நடந்து கொண்டே தலையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டுமீண்டும் வீம்புக்காகப் படித்தாள். ''கதாநாயகியாகத் தோன்றும் மல்லிகா, கட்டுக்கோப்பான உடல் நலுங்காமல் ஓடி ஆடி, நடிப்பதாகப் பெயர் பண்ணுகிறார். பல வருஷங்கள் விடாமுயற்சியுடன் பாடுபட்டால் முன்னுக்கு வரலாம் என்ற நம்பிக்கை ...''

சுகுமாரன் அவளிடமிருந்து பத்திரிகையைப் பிடுங்கிச் சுக்குநூறாகக் கிழித்தார். இத்தனை நேரமாக வைராக்கியத்துடன் கட்டுப்படுத்தியிருந்த அழுகை இப்போது பீறிக் கொண்டு வந்தது. மல்லிகாவுக்கு. முகத்தை மூடிக்கொண்டு அழுதாலும் விரல் இடுக்குகள் வழியே கண்ணீர் பெருகி வழிந்தது.

''மல்லிகா! அழாதே, அம்மா! இவர்கள் கிடக்கிறார்கள் பத்திரிகைகளைப் பார்த்துக் கொண்டு மக்கள் படம் பார்க்க வருவதில்லை. படம் பெரிய வெற்றியாக இருக்கும், பார்'' என்றார் சுகுமாரன் உறுதியுடன்.

மல்லிகா தலையை அசைத்தாள். ''பண விஷயத்தில் வெற்றியாகவேஇருக்கலாம், அப்பா! என் அழகைப் பார்க்கவே




செருப்புக் கடைக்காரர்:—ஏன் அவர் வேகமாக ஓடுகிறார்?

ஏப்பசாமி:—அவர் தம் கால் அளவுக்குச் செருப்பு கேட்டார்.

கடைக்காரர்:—அதற்கு ஏன் ஓடணும்!

ஏப்பசாமி:—தம் அளவை வீட்டில்வைத்து விட்டு வந்து விட்டாராம். அதை எடுத்து வரத்தான் ஓடுகிறார்!...

---

மக்கள் குழுமிவிடலாம். ஆனால் அது எத்தனை நாட்களுக்கு நீடிக்கும்? பத்திரிகைகளில் எழுதியிருப்பது எல்லாம் நிஜம்தான். எனக்கு நடிக்கத் தெரியவில்லை. இந்தத் துறையில் நான் புகுந்ததே பெரிய தவறு. செண்பகபுரம் கிராமத்தில் உழைத்து உழைத்து அலுத்துப் போனபோது சினிமா நட்சத்திரமாகி விட்டால் சுகவாழ்க்கை நடத்தலாம் என்று எண்ணினேன். அந்தப் பதவியை அடைவதே என்னுடைய லட்சியம் என்று தீர்மானித்தேன். ஆனால் அதற்கும் இடைவிடாத முயற்சியும் உழைப்பும் வேண்டும் என்று இப்போது உணர்கிறேன். அப்பா! இந்தத் தொழிலுக்கு நான் ஏற்றவளல்ல. இனிமேல் நீங்கள் நடிக்கச் சொன்னாலும்கூட நான் நடிக்க மாட்டேன் போதுமப்பா, நான் நட்சத்திரமாக விளங்கியது. போதும்! போதும்!" என்று விம்மி...ள் அவள்.

அவள் உள்ளத்தில் கட்டியிருந்த ஆசைக் கோட்டைகள் இடிந்து துகள் துகளாகச் சிதறிவிட்டதை உணர்ந்து வருந்தினார் சுகுமாரன்.

"ரொம்ப சரி, மல்லிகா! உனக்குப் பிடிக்க வில்லையென்றால் இந்தத் தொழிலையே விட்டு விடு. நான் வேண்டாம் என்று சொல்ல வில்லை. சென்னைக்குப் போனதும் ஒரு நல்ல நாளாகப் பார்த்து உனக்கும் சேகருக்கும் கல்யாணம் செய்து வைக்கிறேன். அந்த சந்தோஷத்தில் இந்தத் துயரத்தையெல்லாம் மறந்து விடுவாய். குடும்ப வாழ்க்கையில் ஈடுபடுவதால் திரைப்படத் தொழிலை விட்டு விடுவதும் சுலபமாகப் போகும். கண்ணைத் துடைத்துக் கொள்."

"ஸார்! ஸார்! ரொம்ப அவசரப் படுகிறீர்களே, ஸார்! கொஞ்சம் பொறுங்கள். என்னை ஒரு வார்த்தை கேட்காமலே நீங்கள் என் கலியாணத்துக்கு ஏற்பாடு செய்கிறீர்களே?" என்றான் சேகர்.

பத்திரிகை விமரிசனங்கள் அளித்த அதிர்ச்சியை விடச் சேகரின் பதில் சுகுமாரனைத் தூக்கிவாரிப் போடச் செய்தது. இந்தப் பதிலை அவர் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. ஆனால் மல்லிகா பொறுமையோடு இருந்தாள். அவள் முகத்தில் அதிர்ச்சியின் பிரதிபலிப்போ, துக்கமோ ஒன்றும் தெரியவில்லை.

வியப்புடன் சேகரைப் பார்த்து, "கல்யாணத்துக்கு நீ சம்மதித்து விட்டாயே, முன்பே நிச்சயம் செய்து விட்டோமே?" என்றார் சுகுமாரன்.

"ஆமாம் ஸார்! ஆனால் நான் அகில இந்தியப் புகழ்பெற்ற பிரபல நட்சத்திரம் மல்லிகாவைத்தானே கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதம் தெரிவித்தேன்! தோல்வியுற்ற மங்கும் நட்சத்திரத்தையோ அல்லது சினிமா வானில் வழுக்கி விழுந்த மாஜி நட்சத்திரத்தையோ மணந்துகொள்வதாகச்சொல்லவில்லையே? நட்சத்திரப் பதவி போன பிறகு மல்லிகா எனக்கு என்ன உபயோகம்!" என்று வாய் கூசாமல் கேட்டான் சேகர்.

இத்தனை நேரமும் அடக்கி வைத்திருந்த கோபம் அனைத்தும் பொங்கிப் பெருகியது டைரக்டர் சுகுமாரனுக்கு.

கொதித்து எழுந்தார் அவர். சேகருடைய முகத்தில் குத்துவதற்குக் கையை ஓங்கினார். சட்டென்று அவர் முன் போய் நின்று கொண்டாள் மல்லிகா. "அப்பா! அவர்மீது தவறில்லை. அவரைச் சரியாகப் புரிந்து கொள்ளாத நம்மீது தான் தப்பு. அவரை ஒன்றும் செய்யாதீர்கள்" என்று கேட்டுக் கொண்டாள்.

தன்னை அவமதித்து உதறித் தள்ளிய சேகர் மீது ஒரு பக்கம் கோபம் உண்டான போதிலும், மற்றொரு பக்கத்தில் நன்றி உணர்ச்சியும் பொங்கிக் கோபத்தை அடக்கித் தணித்தது மல்லிகாவுக்கு.

தனக்கு விடுதலையளித்ததன் மூலம் நடராஜனைத் தான் அடைய வழிவகுத்த சேகரை நன்றி நிறைந்த உள்ளத்துடன் பாராட்டினாள்.

(தொடரும்)

# அவனுக்கு ஜான்ஸன்ஸ் பேபி பவுடரே ஏற்றது




**இலவச புத்தகம்:** குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவசப் பிரதிக்கு 25 நயா பைசா ஸ்டாம்ப் வைத்து எழுதுங்கள். பெற்றோர்களுக்கு உபயோகமான அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. இங்கிலீஷ் அல்லது ஹிந்தி பிரதிகள் வேண்டுமென்று குறிப்பிடவும்!

**ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் ஆப் இந்தியா பிரைவேட் லிமிடெட்**

# கரும்பூனை காணவில்லை!

பிள்ளைவாளின் பூஜை பட்டணப் பிரசித்தி. அவருக்கு வயது அறுபதுக்கு மேல் இருக்கும். இதுவரை அவர் கடவுள் பாதாரவிந்தங்களில் சேர்ப்பித்த புஷ்பங்களைக் குவித்தால் கைலாசத்தையே எட்டி நிற்கும். ஆனால் ஏனோ கைலாயபதி இவர்பால் கருணை காட்டவில்லை. பணம், பாக்கியம் பதவிக்காக அவர் கடவுளைத் துதித்துப் பூஜை செய்து வந்தார் என்று எண்ணி விடாதீர்கள். நல்ல சொத்து, உயர்ந்த உத்தியோகம், மேலும் மனத்துக்குகந்த மனையாள் பிள்ளைவாளுக்கு வாய்த்திருந்த போதிலும் அவருக்குத் தீராக் குறையொன்று இருந்து வந்தது. இதற்காகத்தான் அவர் அல்லும் பகலும் பூஜை செய்து வந்தார். பாவம், அவருக்குப் புத்திரப்பேறு கிடையாது.

பிள்ளைவாள் பழைய காலத்து மனிதர். பிள்ளையில்லாத காரணத்தால் "புத்" என்னும் நரகத்திலிருந்து தப்ப முடியாது என்று நம்பி நடுநடுங்கி வந்தார். இவர் அந்திமகாலம் நெருங்க நெருங்கப் பூஜை புனஸ்காரங்களின் மும்முரம் அதிகரித்துக் கொண்டே வந்தன.

பிள்ளைவாளின் பக்தி ரதம் தங்குதடையின்றி உருண்டு ஓடிச்சென்று கொண்டிருக்கும் பொழுது ஒருநாள் ஒரு முடுக்கு குறுக்கிட்டு இடுக்கு செய்யத் தலைப்பட்டது. இவரின் நியமநிஷ்டைகளுக்குத்தடை செய்வது போல் மூலைமுடுக்காக முளைந்தது யார் என்று நினைக்கிறீர்கள்? சாஷாத் வருணபகவானே. பிள்ளைவாள் பூஜைகளில் வருண பகவான் பிரீதியில் ஏதாவது பங்கம் விளைந்ததோ என்னமோ? யார் கண்டது? வருண பகவானே இவர் பக்தி மார்க்கத்துக்கு முட்டுக்கட்டையாக வந்து முளைத்து விட்டார்!

கொட்டியது மழை. அற்ப சொற்ப மழையல்ல. கடலே பொங்கிக் கரைபுரண்டு வருவது போல் வானத்திலிருந்து மழை அளவு கடந்து கொட்டியது. ஊர் முழுவதும் வெள்ளக் காடு. பிள்ளைவாளின் மனைவி வேலையில்லாத காரணத்தால் வாயிலில் போய் நீர் ஓட்டத்தை வேடிக்கை பார்க்கச் சென்றாள். வந்தது வினை.

வெள்ளத்தில் குற்றுயிர் கொலை உயிராக ஒரு ஜீவன் அடித்துக் கொண்டு வந்தது. பிள்ளைவாளின் மனைவி வடிவாம்பாள் அந்த ஜீவனை மீட்டாள்.

"வடிவம்! வடிவம்! நைவேத்தியத்துக்குப் பால் கொண்டு வா" என்று பிள்ளைவாளின் குரல் கேட்கவே, ஒரு கையில் உயிருக்கு மன்றாடி வந்த ஜீவனையும் மற்றொரு கையில் நைவேத்தியத்துக்குப் பாலையும் எடுத்தவண்ணம் வடிவாம்பாள் பூஜைஅறையில் பிரசன்னமாகி விருந்தாள்.

"சிவ! சிவ!" என்று பிள்ளைவாள் தலையில் படபடவென்று அடித்துக்கொண்டு, "ஐயோ, கடவுளே! உனக்கென்ன புத்தி கெட்டு விட்டதா?" என்று கத்தினார்.

"ஒன்றுமில்லே, குத்துயிரும் கொலை உயிருமாக மழைத் தண்ணீரில் அடித்துக் கொண்டு போயிற்று. நான் இதைக் காப்பாற்றாவிட்டால் இது செத்துப் போயிருக்கும். ஐயோ, பாவம்" என்று பாலைக் கீழே வைத்தாள்.

உயிர்ப்பிச்சை அளித்த அம்மா சொல்வது உண்மை யென்று ஆமோதிப்பது போல் வடிவாம்பாளின் கையில் ஒண்டிக் கிடந்த ஜீவன் 'மியாவ்' 'மியாவ்' என்று மெல்லிய குரலில் ஓலமிட்டது.

பிள்ளைவாளுக்குக் கோபம் தலைக்கேறியது. அது கபால வழியாகப் பொங்காதபடி தடுக்



கவோ என்னவோ, அவர் தலையில் அடித்துக் கொண்டு, "குட்டிச்சுவருக்கு ஆகிற மாதிரி வயசு ஆச்சு. பூனைக்குட்டியை வாரி அணைத்துக் கொண்டு நைவேத்தியத்துக்குப் பால் கொண்டு வரியே? இது எந்தத் தெய்வத்துக்கு அடுக்கும்? போன ஜென்மத்தில் என்ன பாவம் செய்தாயோ, குழந்தைகுட்டி இல்லாமல் அவதிப்படுகிறாய். இன்னும் ஏழு ஜென்மங்களுக்கு ஏன் பாவத்தைத் தேடிக் கொள்கிறாய்? சிவ, சிவ, சிவ" என்று மேலும் தலையில் அடித்துக் கொண்டார்.

மலைகளை உடைத்து உருட்டுவது மழை நீர். இரும்பையே உருக்கும் தீயை அணைப்பது தண்ணீர். வடிவாம்பாளின் கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் உதிர ஆரம்பித்தன வென்றால், பிள்ளைவாளின் கோபம் தணியாமலா போகும்?

"அம்மா பரதேவதே! தயவுசெய்து நீ அழாதே. உன் இஷ்டப்படி செய். பூனையைத் தொட்டால் பாவம் வருமே என்று உன்னுடைய நல்லத்துக்காகச் சொன்னேன்" என்றார் பிள்ளைவாள்.

வடிவாம்பாள் இந்த நல்ல சந்தர்ப்பத்தை நழுவ விடாமல், "குழந்தைகுட்டி இல்லாமல் எனக்குப் பொழுதே போகவில்லை. பொழுது போக்குக்காக இந்தப் பூனைக் குட்டியை நான் வளர்க்கப் போகிறேன்" என்று சொல்லி முடித்தாள்.

"உன் இஷ்டப்படி செய். ஆனால் தயவுசெய்து என் பூஜை சாமான்களை மட்டும் தொடாதே" என்றார். அன்று முதல் பிள்ளைவாள், பூஜைக்கென்று தனி அறை ஒன்றை ஏற்பாடு செய்து கொண்டு பூஜைக்கான சாமக்கிரியைகளைத் தாமே எடுத்துக்கொள்வது என்று தீர்மானித்தார்.



வடிவாம்பாளோ வருஷக்கணக்கில் செலவிடப் பாத்திரமில்லாமல் சேகரித்து வந்த தாஸன்பைப் பூனைக்குட்டி மேல் கொட்டி வந்தாள். கேட்பானேன். பாலேடு ஊட்டப்பட்டு, பட்டு மெத்தையில் படுத்து வந்ததன் பயனாக உயிருக்கு மன்றாடிய பூனைக்குட்டி உருத்தெரியாமல் வளர்ந்துவிட்டது. அதற்குச் "சில்லி" என்று செல்லப் பெயர் வடிவாம்பாள் சூட்டியிருந்தாள்.

ஒருநாள் பிள்ளைவாள் பூஜை செய்துகொண்டிருந்த பொழுது "சில்லி" பூஜை அறையில் பூனைபோல் புகுந்து நைவேத்தியத்துக்கு வைத்திருந்த பாலில் சொல்லாமல் கொள்ளாமல் வாயை வைத்து விட்டது. பிள்ளைவாள் ஜபத்தை முடித்துக் கொண்டு கண்ணைத் திறந்தால் கடவுள் காட்சி அளிக்க வேண்டிய இடத்தில் கரும் பூனையைக் கண்டால் அலறாமல் என்ன செய்வார்?

பிள்ளைவாளின் அலறலைக் கேட்டு "என்ன? என்ன?" என்று வடிவாம்பாள் ஓடிவந்தாள். விஷயத்தை அறிந்த வடிவாம்பாள், "உம். இதற்காகவா இவ்வளவு கூச்சல்? என்ன முழுகிப் போய்விட்டது? வேறு பால் எடுத்து நைவேத்தியம் செய்தால் போகிறது" என்று பூனையை எடுத்து மார்புடன் அணைத்து முத்தமிட்டவண்ணம் மறைந்தாள், சகதர்மிணி.

பிள்ளைவாளுக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை. திரும்பவும் குளித்துவிட்டு மேலும் ஒருமுறை பூஜை தொடங்கினார். இவருக்கு இருந்த கோபத்தில் இவர் மனம் கடவுள் நாமத்தைப் பூஜிக்க மறுத்துப் பூனையை ஒழித்துக்கட்டும் சதியில் ஈடுபட்டது. ஜெபித்தார், ஜெபித்தார். கடைசியில் ஒரு முடிவுக்கும் வந்தார். இந்தச் சனியனைப் பாமைல்களுக்கப்பால் கொண்டு விட்டுவிடுவது என்று தீர்மானித்தார். அதற்கான தக்க சந்தர்ப்பத்தையும் எதிர்பார்த்திருந்தார்.

ஒருநாள் பிள்ளைவாளுக்கு நல்லதொரு வாய்ப்பு கிடைத்தது. வடிவாம்பாள், திருமணம் ஒன்றுக்கு வெளியூருக்குப் போகும்படி நேர்ந்தது. வடிவாம்பாள் தன் அருமைச் "சில்லி"யை எடுத்துச்செல்ல வழியில்லாமல் தோட்டக்கார முனியனிடம் அதற்கான சகல ஏற்பாடுகளையும் செய்துவிட்டுச் சென்றிருந்தாள்.

மனைவியின் தலை மறைந்ததும் பிள்ளைவாள் முனியனைக் கூப்பிட்டார். "பூனையைக் கூடையில் வைத்து இந்த நிமிஷமே தாம்பரத்தில் கொண்டு போய் விட்டு விட்டுவா" என்று உத்தரவிட்டார்.

முனியன் கையைப் பிசைந்து கொண்டே, "அம்மா ஏதாச்சும்......" என்று இழுத்தான்.

"அம்மாவாவது? அடுப்புக் கரியாவது? அம்மா இந்த வீட்டுக்கு அதிகாரியா, நான் அதிகாரியா?" என்று அதட்டினார்.

"அதுக்குச் சொல்லலீங்க, எசமான்! அம்மா வந்ததும் வராததுமாகச் "சில்லி" எங்கே என்று கேட்பாங்களே? அதுக்கு ஏதாச்சும் சாக்கு போக்கு சொல்லணும்னு சொன்னேன்" என்று கனைத்தான்.

"ஆமாம், ஆமாம்! பார்த்தியா, அதைப் பற்றி நான் யோசிக்கவே இல்லையே?" என்று ஆழ்ந்த சிந்தனையில் பிள்ளைவாள் மூழ்கினார்.

"எசமான், நான் ஒரு யோசனை ....." என்று மென்று விழுங்கினான் முனியன்.

"சொல்லு, சொல்லு" என்று பரபரப்புடன் கேட்டார் பிள்ளைவாள்.

"அம்மாவைக் காணாமல், "சில்லி" வீடு முழுதுக்கும் தேடித்தேடி அலைந்திச்சு. பாவம் "சில்லி" மியாவ் மியாவ்ன்னு வாய்விடாமல் கத்திக்கிட்டே இருந்துக்கிட்டு, அன்ன ஆகாரமே தொடமாட்டேன்னிச்சு. காலையில் பார்த்தால் காணலே. அது உங்களைத் தேடிக் கிட்டுத்தான் எங்கேயாச்சும் போயிடுச்சோ என்னமோன்னு சொல்லிப்பிடறேனுங்க, எசமான்!" என்றான்.

பிள்ளைவாளுக்குப் பொங்கி எழுந்த சந்தோஷத்தில் "பலே, பேஷ்! பலே பேஷ்!" என்று, முனியனைத் தோட்டக்காரன் என்பதைக் கூடக் கவனியாமல் தட்டிக் கொடுத்தார்.

"சதி நிறைவேறியது. ஆனால் கதை முடியவில்லை. அன்றிரவு பிள்ளைவாள் தூங்கச் சென்றார். "ஐயோ, பாவ! இப்படியும் செய்யலாமா?" என்று நூற்றுக்கணக்கான பூனைக் கண்கள் தூற்றுவதுபோல் கனவு கண்டார். பூனைகள் காலைச் சுற்றி அலைவது போல் தோன்றியது. திடுக்கிட்டு எழுந்தார். கண்ணைக் கசக்கிப் பார்த்தார். கண்டது கனவென்று உணர்ந்தார். கனவின் நினைவில் இவர் மூளையில் ஒரு சஞ்சலம் உதயமாயிற்று. ஒருவேளை 'சில்லி' இறந்து விட்டதா? 'சில்லி'யின் உயிருக்கு உலைவைத்த பாவம் தம்மைச் சுற்றப் போகிறதோ என்ற பயம் அவரைப் பிடித்துக் கொண்டது.

வடிவாம்பாள் வந்ததும் வராததுமாக, "சில்லி! சில்லி!" என்று கூப்பிட்ட வண்ணம் வீட்டுக்குள் நுழைந்தாள். தன் அருமைச் 'சில்லி'யைக் காணாமல் ஏக்கமுற்றாள். அன்ன ஆகாரமின்றிக் கிடந்தாள்.

பிள்ளைவாள் தலைவிதியை நொந்து கொண்டு பூனையைத் தேட ஆவலுடன் தாம்பரம் சென்றார். தாம்பரம் முழுவதையும் தேடிப் பார்த்தனர். வழியில் கண்டவர்களைப் பூனையின் அடையாளத்தைச் சொல்லி, "அந்தப் பூனையைப் பார்த்தீர்களா?" என்று கேட்டும் வந்தனர். அதன் விளைவாக விபரீதப் பார்வைக்கும், ஏளனச் சிரிப்புக்கும் ஆளானார்களே ஒழிய, 'சில்லி' கிடைத்தபாடில்லை.



இதற்குள் வடிவாம்பாளின் அருமைச் 'சில்லி' காணாமற் போன செய்தி அண்டை அயலார்க்கு எவ்விதமோ காட்டுத் தீயைப் போல் பரவிவிட்டது. அண்டை அயல் வீட்டுப் பெண்மணிகள் 'சில்லி'யின் மாய மறைவைப் பற்றித் துக்கம் விசாரிக்கக் கூட்டம் கூடிவிட்டனர். ஒரு பெண்மணி ஒரு நல்ல யோசனையைக் கொடுத்தாள். வடிவாம்பாளுக்குப் போன உயிர் திரும்பியது. கணவன் பூனையுடன் வந்தால் நல்லது. வராவிட்டாலும் எப்படியும் 'சில்லி' கிடைத்து விடும் என்ற நம்பிக்கையில் குதூகலம் அடைந்து விட்டாள்.

பிள்ளைவாள் தம் மனைவிக்கு என்ன சொல்வது? அவளை எவ்விதம் ஆறுதல் சொல்லிச் சாப்பிடச் செய்வது என்று ஏங்கிய மனத்துடன் வீடு திரும்பினார். அவர் எதிர்பார்த்ததற்கு விரோதமாக முகமலர்ச்சியுடன் மனைவியாள் அவரை எதிர் கொண்டு அழைத்தாள். அவருக்குத் தூக்கி வாரிப்போட்டது. "சில்லி திரும்பிவிட்டதா?" என்றுகேட்டார்.

"இல்லை, இல்லை. நீங்கள் தேடிப் போனீர்களே, உங்களுக்குக் கிடைக்கவில்லையா?" என்று வடிவாம்பாள் கேட்டாள்.

"அப்பப்பா, போதும், போதும்! என் உயிரே போய் விட்டது" என்று தம் இரு முட்டிகளின் மேலும் இரு கைகளை வைத்துச் சோபாவில் சாய்ந்தார்.

"பூனையை நீங்கள் தேட வேண்டியதில்லை. தினசரிப் பத்திரிகையில் நம் 'சில்லி'யைக் கொண்டு வந்து நம்மிடம் சேர்ப்பவர்களுக்கு நூறு ரூபாய் இனாம் என்று விளம்பரம் போட்டால் அந்தச் சிரமம் உங்களுக்கு இல்லாமல், யாராவது தேடி அலைந்து நம் பூனையைக் கண்டுபிடித்து விடுவார்கள். நல்ல காலம்! எதிர் வீட்டு ருக்கு இந்த யோசனையைச் சொன்னாள். மகராசி நன்றாக இருக்க வேணும்" என்று முடித்தாள் வடிவாம்பாள்.

மறுநாள் காலை "காணவில்லை" என்ற தலைப்பில் "கரும் பூனை காணவில்லை. உயரம் பத்து அங்குலம். உடலில் பல பாகங்களில் வெள்ளை பழுப்புத் திட்டுகள் காணும். வயது ஆறு மாதம். 'சில்லி' என்று அழைத்தால் தெரிந்து கொள்ளும். கண்டு பிடிப்பவர்களுக்கு ரூபாய் நூறு இனாம்....கீழ்க்கண்ட விலாசத்துக்குத் தெரியப்படுத்துங்கள்..... விலாசம் ....."

பிள்ளைவாள் அன்றிரவு நிம்மதியாகத் தூங்கினார். எட்டு மணிக்குத் திடுக்கிட்டு எழுந்து பல் துலக்கத் தண்ணீர் கேட்க, "வடிவம், வடிவம்" என்று குரல் கொடுத்தார். பல முறைகள் குரல் கொடுத்தும் வடிவாம்பாள் வந்தபாடில்லை. வடிவாம்பாளின் குரல் வாசற் பக்கத்தில் கேட்கவே, அங்கு தம் மனைவி என்ன செய்கிறாள் என்று பார்க்கப் போனார்.

பிள்ளைவாள் பங்களாவின் வாசலில் ஒரு பெரும் கூட்டம். கூட்டத்தார் ஒவ்வொருவர் கையிலும் ஒரு பூனை. பிள்ளைவாள் அன்று காலை எழுந்ததும் எழுந்திருக்காததுமாக நூறு 'சில்லி'களின் முகத்தில் விழிக்கும் பாக்கியம் கிடைத்தது.

நூறு ரூபாய் அற்ப சொற்பத் தொகையா? சுற்று வட்டாரத்தில் காணப்பட்ட பூனைக் குட்டிகள் பிள்ளைவாளின் வீட்டுக்குக் கொண்டு வரப்பட்டன. பூனைகளில் ஒன்றாவது வடிவாம்பாளின் அருமைச் 'சில்லி'யல்ல. இருந்தாலும் வந்த பூனைகளின் ஓலம் உள்ளத்தில் அடங்கியிருந்த தாயன்பைப் பொங்கி வழியச் செய்தது. வடிவாம்பாள் வந்த பூனைகளுக்குத் தாராளமாகப் பால் வழங்கினாள்.

வந்தவர்கள் வழியில் கிடைத்த பூனை அதிர்ஷ்டவசமாக விளம்பரதாரருடையதாக இருந்தால் கொடுத்துவிட்டு, நூறு ரூபாயைப் பெற்றுச் செல்லலாம் என்று வந்தார்களே ஒழிய, கொண்டுவந்த பூனையைத் திரும்ப எடுத்துச் செல்லும் எண்ணத்துடன் வரவில்லை.

வந்ததும் வராததுமாக வடிவாம்பாள் பூனைகளுக்குப் பால் வார்க்கவே, வந்த பூனைகளும் வடிவாம்பாளை விட்டுப் போவதற்கு மறுத்தன.

பிள்ளைவாள் "சில்லி"யை ஒழித்துக் கட்டினார். ஆனால் அந்தப் பாழும் பூனை ஆயிரம் ஆயிரம் 'சில்லி'களைத் தனக்குப் பதிலாக அனுப்பி வைக்கும் என்று அவர் சிறிதும் எதிர்பார்க்கவில்லை!

வியக்கத்தக்க
நீளமான
செழிப்பான
கூந்தல்




ராமா
கூந்தல் வளர்க்கும் டானிக்



அதிசயமும் அற்புதமுமான
சருமப் பாதுகாப்பு




மலபார்
லிம்டா
டாய்லெட் சோப்

தி வெஜிடபிள் சோப் ஒர்க்ஸ்
கோழிக்கோடு-1



உலகப்
பிரசித்திபெற்ற
தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக் குணமளிக்கும்
**பெப்ஸ்** வில்லைகளை உட்கொண்டதால், பிராங்கைடிஸ் விரைவில் அகன்றது

தொண்டைப்புண், பிராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷம் முதலியவை பெப்ஸ் தொண்டை மற்றும் மார்பு உபாதைகளுக்குக் குணமளிக்கும் வில்லைகளை உட்கொண்ட உடனேயே அகலுகின்றன. பெப்ஸ் வில்லைகளைச் சுவைத்து, நோய்க்குக் காரணமான கிருமிகளைக் கொல்லவும், வலியைக் குறைக்கவும் செய்யும். அதன் குணமளிக்கும் ஆவியை அனுபவியுங்கள்.




**பெப்ஸ்**
தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணம் அளிக்கும்
வில்லைகள்

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

ஸி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்.

FPY-56-TAM

சோல் ஏஜண்டுகள்: தாதா அண்டு கம்பெனி
86, நைனியப்ப நாயக் தெரு, சென்னை - 3

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 81 இன்னும் சில மருந்துகள்

**வில்வாதி லேஹியம்** :— வில்வத்தின் வேரைச் சிறு துண்டுகளாக நறுக்கிப் பிறகு அதை இடித்து ஒரு ராத்தல் (40 தோலா) எடுத்து 8 படி ஜலம் விட்டு 2 படி கஷாயமாகக் காய்ச்சிக் கொள்ளவும். மருந்தைக் கசக்கிப் பிழிந்து களைந்து கஷாயத்தை வடிகட்டி அதில் வெல்ல, சர்க்கரைகளையும், மேல் தூவும் சூர்ணங்களையும் ஆம்ரபல்லவாதி லேஹியத்துக்குச் சொன்னவிதமே தயாரித்துக் கொள்ளவும். இதையும் ஆம்ரபல்லவாதி லேஹியத்தைப் போலவே உபயோகிக்கலாம். சாஸ்திரங்களில் வெல்லம் மட்டுந்தான் சேர்க்கும்படி சொல்லியிருப்பது. சர்க்கரை சேர்ப்பது ஓரளவு உஷ்ணத்தைக் குறைக்கவும் மலபந்தத்தைத் தடுக்கவும் உதவுகிறது. இது எனது அனுபவம். எப்படியானாலும் வில்வாதி லேஹியத்தால் கடுமையான மலபந்தம் ஏற்படுகிறது. அவ்வளவு கடுமையான மலபந்தம் சில சந்தர்ப்பங்களில் புதிய உபாதைகளை உண்டாக்கவும் கூடுமாதலால் அதைக் குறைக்கவே சர்க்கரையை ஓரளவு சேர்த்துக் கொள்வது. ஆயினும், வில்வாதி லேஹியத்துக்குப் பதில் ஆம்ரபல்லவாதி லேஹியத்தை உபயோகிப்பது தான் நல்லதென்பது எனது அனுபவம்.

சித்தர் வகுத்த தமிழ் நூல்களிலிருந்தும் சில முறைகளைத் தெரிவிக்க வேணுமல்லவா?

'பழையமுது' என்பதை இன்று கேட்டவராவது இருப்பாரல்லவா? தண்ணீர்—அன்னத்திலின்றும் வார்த்தெடுத்த கஞ்சி ஆகியவற்றிலிட்டு வைத்த சோறு. இதைப் பழையது என்றும் பழஞ்சோறு என்றும் சொல்வர். காலையில் இதை ஒருகல் உப்புடன்சேர்த்துப்பிசைந்து சிறு புளிப்புடனுள்ள அன்னம் ஊறிய நீரையே விட்டுப் பிசைந்து, மாவடு அல்லது நார்த்தங்காய் ஊறுகாய் போன்றவற்றை அப்பழஞ் சோற்றுக்குச் கண்டாங்கியாக ஏற்றுச் சாப்பிடுவது ஒரு காலத்தில் நம் நாட்டிலிருந்து வந்த பழக்கம். இந்தச் சோற்றிலும் அது ஊறிய நீரிலும் உள்ள ஈஸ்டுவைடமின் முதலியவைகளை இன்றும் புகழ்வோர் இருக்கிறார்கள். ஆனால் ஏற்பவர் தான்...? நாகரிகத்துக்குக் குறைவுஎன்ற எண்ணம்.

இப் பழையமுதுடன் சிறிது நல்ல—சுத்தமான—எண்ணெய் விட்டுப் பிசைந்து சாப்பிட்டு வருவதால் உடலில் புஷ்டியும் பலமும் விருத்தியாகுமென்று தமிழ் நூல்கள் தெரிவிக்கின்றன. ''எண்ணெய்ப் பழையது'' என்று நேற்றுவரையில் நமது பழக்கத்தில் இருந்தது.

வடித்த கஞ்சியும் அன்னமும் சேர்த்துக் குடிப்பது [புளிக்காதது] நமது பழக்கமல்லவா? இதன் குணத்தைத் தேரையர் சொல்வதைக் கேளுங்கள் :

கேரளத்தவர் ''கஞ்சி வெள்ளம்'' என்கிறார்களே. கஞ்சியும் அன்னமும் கூட்டியதில் சிறிது நெய்யோ, வெண்ணெயோ சேர்த்து அவர்கள் குடிக்கின்றனர். அநேகமாக இப்பழக்கம் இல்லாத கேரளீயனே இல்லை என்று சொல்லலாம். இதன் பெருமையைத் தேரையர் சொல்லக் கேளுங்கள் :

> ''கஞ்சி யன்னத்தாற் காயம் பருத்திடு
> மஞ்சி வெப்பமகலுஞ் சிலேஷ்மமோ
> விஞ்சியுற்றிடு மேனி மினுத்திடும்
> பஞ்சிபோலப் பறந்திடும் பித்தமே.''

திரிதோஷங்கள் சமநிலையடையும். தேகத்தில் உஷ்ணம் தணியும். உடல் பருக்கும். தேகம் மினுமினுக்கும். எல்லாம் போலாகும். இன்னும் என்னவேணும்?

'டானிக்' வேணுமா? 'இது சிறந்த டானிக்' என்று யாராவது எதையாவது ஒருமருந்தைச் சொல்வாரானால், ''ஐயா! இந்த 'கஞ்சி அன்னம்' அதையும் விடச் சிறந்தது. வேணுமானால் 'டாடானிக்' என்று அழையுங்கள்'' என்று தைரியமாய்ச் சொல்லுங்கள்.



நாய் : நாம் எங்கே போனாலும் இந்த மனுஷன் நாய் மாதிரி பின்னாலேயே வந்துகொண்டிருக்கிறார், பார்த்தையா!



எழும்பூர் வேத சபையினர் நவராத்திரி விழாவை வெகு விமரிசையாக கொண்டாடினர். விஜயதசமி அன்று விழாவுக்குத் தலைமை வகித்த ஸ்ரீ. க. சுந்தரலம் அவர்கள் வேத சபையின் சேவையைப் பாராட்டிப் பேசிச் சிறுவர் சிறுமியருக்கு இதிகாச புராணப் பயிற்சி எவ்வளவு அவசியம் என்பதையும் அழகாக எடுத்துரைத்தார்.

"ஆமாம்! எண்ணெய் சேர்த்த அன்னத்தை யல்லவா சொன்னீர்கள்? அதன் குணத்தைச் சொல்லுங்கள். புளித்த சோறு—காடிச் சோறு—பழஞ் சோறு என்பதைப் பற்றியல்லவா சொன்னீர்கள்? அதன் குணத்தைச் சொல்லுங்கள். அதற்குப் பிறகு பழையமுதில் எண்ணெய் சேர்த்து புசிப்பதை கவனிக்கலாம்" என்கிறீர்களா?

அகத்தியமா முனிவர் சொல்கிறார்.

"எண்ணெயுஞ் சோறன்னில்
என்றைக்கும் மாபலமாம்..."

வன்மையும், வீர்யமும், நல்ல பசியும், உண்டாகும். மேலும் புளித்த பழஞ் காடிச்சோறு...? இது மந்தத்தினால் வெளுப்பாக இறங்கும் கழிச்சலையும் வாந்தியையும் போக்கும்.....சத்துப் பொருள்கள் உடலில் சேருமென்பதைச் சொல்லவும் வேணுமா?

இரவில் நீரூட்டிய சோற்றை [பழஞ் சோறு] அந்நீரோடு விடியற்காலையில் ஏற்க, ஆண்மை பெருகும், பசித் தீ யெழும், தேக ஒளி யுண்டாகும்...

"பழஞ்சோற்றை யந்நர்
பழையநீரா காரக்
கொழுஞ் சேர்க்கையோ
நேயம் கொள்ளில்—எழுந்தாது
பித்தவாதம் போம்
பெரும்பசியா மெய்யெங்கும்
மெத்தவொளி யுண்டாகுமே."

அரிசித் தவிடு மிகவும் சிறந்தது—அதில் வைட்டமின் பி. 1. இருக்கிறது. ஆகவே தவிடு போக்காத கைக்குத்தல் அரிசியைத்தான் சாப்பாட்டுக்கு ஏற்க வேணும், இயந்திரத்தில் அரைத்த அரிசியை விட அதில்தான் சத்து இருக்கிறது என்றெல்லாம் இன்று பலரும் சொல்வதிருக்கட்டும்.

அரிசித் தவிட்டையும் பனை வெல்லத்தையும் சேர்த்துப் பிசைந்ததில் தினம் ஒரு கொட்டைப் பாக்களவு சாப்பிட்டு வரப் பலம்பெருகி, உடல் பருத்து மெருகு இருகும் என்பது அகத்தியரின்கொள்கை.

ஏன்? "வாய்த் தவிடும் போய் அடுப்புத் தீயும் கெட்ட கதை" என்ற பழமொழியே இதற்குச் சான்றாகுமே!

இப்படித்தான் ஆகாரங்களைக் கொண்டே உடல்மெலிவு நலிவுகளைப் போக்கவும்—பலமும் புஷ்டியும் பெறவும் தக்க மார்க்கங்களை வகுத்துள்ளனர் தமிழ்ச் சித்தர்.

இதோ கீழே இன்னொரு மருந்தின் முறையைத் தருகிறேன்.

**ஏலநெய்** :—ஏலரிசியின் சூர்ணம் 8 பலத்தைப் பசுவின் பால் 1 படி, பசுவின் நெய் 1 படி, இளநீர் அரைப் படி ஆகிய வற்றுடன் சேர்த்துக் காய்ச்சி மெழுகு பதத்தில் வடிகட்டிக் கொள்ளவும். இந்த நெய்யுடன் வாள்மிளகுத் தூள் 1 பலம், ஜாதிக்காய், ஜாதிபத்திரி, கிராம்பு, சுக்கு, தனியா, கொப்பரை, திராக்ஷை ஆகியவைவகைக்குக்கால்பலம், கற்கண்டு 24 பலம் ஆகியவற்றைச் சேர்த்து மத்தினால் கடைந்து ஒன்றுபடச்செய்து எடுத்து வைத்துக் கொள்ளவும். இந்த நெய்யில் காலை மாலை ஒரு உச்சிக் கரண்டியளவு உட்கொண்டு வர வயிற்றில் வரும் பிணிகள் தீரும். ஜீர்ண பரிணாமம் இவை சீர்ப்படும். உறிஞ்சிகள் திறமையுடன் தம் செயலையாற்றும். உடல் குளிர்ச்சி யடையும். ரத்த விருத்தியாகும். பலமும் புஷ்டியும் பெருகும். —தேகம் கலகலப்பாக இருக்கும்.



ஊன்றிய
நம்பிக்கையோடு
நீங்கள் லோமா
உபயோகிக்க எவ்வயதும்
ஏற்ற வயதே







லோமா உபயோகிப்பதற்கு வயதுகணக்கான வரம்பே கிடையாது. விரும்பிய பயனை எய்திடுவோம் என்ற முழு நம்பிக்கையுடன் எல்லா வயதினரும் அதனை உபயோகிக்கலாம். ஏனெனில், கேசத்திற்குக் கருமையூட்டுவதில் தன்னிகரற்ற தைலம் என்பதோடு, தரத்திலுயர்ந்த கேச எண்ணெய்களில் பொதுவாக இடம் பெறும் பொருள்கள் அனைத்தும் லோமாவில் அடங்கியுள்ளன.

# லோமா

அகில உலகும் வியந்து போற்றிட
கேசத்திற்கு இயற்கைக் கருமை
யூட்டும் தைலம்

ஏகபோக ஏஜெண்டுகள் : எம். எம். கம்பாட்வாலா. அஹமதாபாத்-1.

ஏஜெண்டுகள் : வி. நரோத்தம் அண்ட் கோ., பம்பாய்-2

MPS-TAM

சென்னை ஏஜெண்டுகள் : ஜே. பாலபாய் & கம்பெனி, 260, எஸ்பிளனேட், மதராஸ்-1
இலங்கை ஏஜெண்டுகள் : சிர்கும் கதிர் & கோ., 41 & 43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11



# மழமழப்பான சுகமான க்ஷவரத்திற்கு..

வாழ்வில் வெற்றி கண்டவர்கள் வேறெந்த தயாரிப்பையும் நாடாமல்

# பாமாலிவ்

ஷேவிங் கிரீமைத்தான் உபயோகிக்கிறார்கள்







நுரையுடனோ அல்லது பிரஷ் இல்லாமலோ நீங்களே தேர்ந்தெடுங்கள்

பாமாலிவ் என்றாலே உயர்ந்த ரகம்!

PL51/4/2

---

# கால்கேட்டின்

## துப்புரவாக சுத்தம் செய்யும் வன்மை உங்களது பற்களையும் ஈறுகளையும் பாதுகாக்கிறது !

சாஸ்திரீயமாக அமைக்கப்பட்ட கால்கேட் டூத் பிரஷ் உங்கள் பற்களின் இடுக்குகளில் சுலபமாக நுழைகிறது ... உட்புறத்தையும், வெளிப்புறத்தையும் துப்புரவாக சுத்தம் செய்கிறது ... பல் ஈறுகளை மிருதுவாகத்தடவி உறுதிப்படுத்துகிறது! உங்கள் பற்களையும், ஈறுகளையும் கால்கேட் டூத் பிரஷ்ஷால் பாதுகாத்துக்கொள்ளுங்கள்.

4 சைஸ்கள் : ★ அடல்ட் ★ ஜூனியர் ★ சைல்ட் ★ பேபி

★ ஹார்ட் ★ மீடியம் ★ ஸாப்ட்




உலக்ஸ் சுகாதார பிளாஸ்டிக் குழாயில் கிடைக்கும். ரெகுலரும் கிடைக்கிறது.

அழகான பிளாஸ்டிக் பிடிகளில் உறுதியாகப் பொருத்தப்பட்ட ஸ்டரிலைஸ் செய்யப்பட்ட நைலான் பிரிஸல்கள்




இந்தியாவில் சிறந்த டூத்பேஸ்ட் செய்பவர்களால் தயாரிக்கப்படுகிறது!

# மனித மனம்



— சம்பந்தம் —

முருகப்பனுடைய ஏற்றப் பாட்டு நிற்ப தற்கும் மரத்தின் அடி 'டொக்'கென்று தரையில் வந்து முட்டுவதற்கும் சரியாயிருந்தது. உடம்பில் வழிந்தோடிய வியர்வையை உதறிக் கொண்டே பண்ணையாட்கள் இருவரும் கீழே இறங்கினார்கள்.

அப்பொழுது அடிவானத்தில் அருணன் அமிழ்ந்து கொண்டிருந்தான். எங்கும் தண்ணீர் பாய்ந்து 'ஜிலுஜிலு'வென்று இருந்தது. சுற்றிலும் கண்களை ஓட்டி மிகவும் மகிழ்ந்து கொண்டான் முருகப்பன். தூரத்தில் அவன் அண்ணன் நாகப்பனும் சளைக்காமல் மண் வெட்டியும் கையுமாக இன்னும் மடை மாற்றிக் கொண்டிருந்தான்.

கேணிக் கரையில் அவிழ்த்து வைத்திருந்த தன் தலை முண்டாசை ஜாக்கிரதையாய் எடுத்தான் முருகப்பன். உள்ளேயிருந்து வெற்றிலைப் பொட்டலம் விழுந்தது. அதைப் பிரித்து வைத்துக் கொண்டு அப்படியே சற்று உட்கார்ந்து விட்டான்.

அதற்குள் நாகப்பனும் அங்கு வந்து சேர்ந்தான். "ஏண்டா, முருகா! கேணியையே காலி பண்ணி விட்டாயா என்ன! நல்லதாகப் போச்சு. நாளைக்கே மற்றொரு தடவை சால் ஓட்டி விட்டு நடவு ஆரம்பித்து விடலாம் என்று பார்க்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே, வீட்டுக்குப் புறப்படும் பாவனையாயிருக்கவே, முருகப்பனும் எழுந்து கூடவே புறப்பட்டு விட்டான். அவர்கள் வீடும் அங்கேயே களத்து மேட்டுப் பக்கலில் தானேயிருந்தது.

• • •

ஆலமரத்து வீடு என்றால், அந்தப் பக்கத்தில் தெரியாதவர்கள் ஒருவருமே இருக்க மாட்டார்கள். அவ்வீட்டுக் கொல்லைப் புறத்திலேயிருந்த அந்த ஆலமரம் எப்பொழுதோ அடித்த பெரும் புயல் காற்றில் வேரோடு சாய்ந்து அழிந்து போயிருந்தும் கூட அந்தப் பெயர் என்னவோ இன்னும் மறையவே இல்லை. அதற்கேற்றாற் போல் நாகப்பனும் முருகப்பனும் அண்ணன் தம்பியாக அவ்வீட்டில் வாய்த்திருக்கவே, அந்தப் பழைய பெயர் மறையாமல் இருப்பதற்குக் கேட்பானேன்!

ஆலமரத்து வீட்டு அண்ணன் தம்பிகள் அந்தப் பக்கத்துக்கே சகோதர ஒற்றுமைக்கு அளவுகோலாக அமைந்திருந்தார்கள். நாகப்பனும் முருகப்பனும் திருமணம் செய்து கொண்ட பிறகும் சிறிதும் விகற்பம் இன்றி ஒரே வீட்டில் ஒற்றுமையாய் வாழ்ந்தார்கள். சேர்ந்தே உழைத்து அவர்கள் செல்வத்தையும் பெருக்கினார்கள்.

முருகப்பன் நாலெழுத்துப் படித்தவன். சற்று நாசூக்காய் நடந்து கொண்டு குடும்ப வேலைகளைக் கவனிக்க அவனே பொறுப்பேற்றுக் கொண்டான். அண்ணன் நாகப்பன் பண்ணையாட்களை வைத்துக் கொண்டு பயிர் வேலையைக் கவனித்துக் கொண்டான். இருந்தும் விதைப்பாடு காலத்திலேயும் அறுவடை காலத்திலேயும் முருகப்பன் இல்லாமல் எதுவும் ஆகாது. தன் வேட்டி சட்டையை அவிழ்த்து வைத்து விட்டு, ஆட்களோடு ஆட்களாய்க் குதித்து விடுவான். வேலையிலும் விடாமுயற்சிக்காரன். அண்ணன் சற்று மனம் சளைத்துப் போகிற சமயத்தில் தம்பியின் தைரியம் தானே தூக்கி நிறுத்தியது.

அதற்கேற்றாற் போல் ஓரகத்திகள் இருவரும் ஒற்றுமையோடு இருந்தார்கள். மூத்தவன் மனைவி முத்தம்மை, இளையவன் மனைவி மரகதத்தைத் தன் தங்கையாகவே பாவித்தாள். பிறகு மரகதம் மூத்தவளைத் தன் அக்காளாகப் பாவிக்கக் கேட்க வேண்டுமா? அண்ணன் தம்பி இருவரும் ஊரில் இல்லாவிட்டால் இந்த ஓரகத்திகளே களத்து மேட்டில் நின்று கொண்டு ஆட்களிடம் வேலை வாங்கி விடுவார்கள். வீட்டு வேலையிலேயும் அவர்கள் சளைத்தவர்கள் இல்லை. ஆட்களுக்குக் கூழ் காய்ச்சவோ, நெல் அவித்துக் கொட்டவோ, வீட்டை மெழுகிச் சுத்தம் செய்யவோ பம்பரமாய் வேலை பார்ப்பார்கள்.

கலியாணம் கட்டின கையோடு மரகதத்துக்குப் பையன் பிறந்து விட்டான்.

ஆனால் முத்தம்மாளுக்கு வெகுநாட்கள் வரையில் குழந்தை ஒன்றையும் காணோம். குல தெய்வத்துக்குப் பஞ்சுப் பாவாடை சுற்றிப் பிள்ளை வரம் கேட்டார்கள். அடுத்த வருஷத்துக்கடுத்த வருஷம் அந்தக் குறையும் நிவர்த்தியாயிற்று. முத்தம்மாளுக்குப் பூங்கோதை பிறந்தாள். குழந்தைகளுக்கு யார் சித்தப்பா, யார் பெரியப்பா என்றுகூடத் தெரியாது. பெற்றோர் இருவரும் அத்துணை ஒட்டுறவு!

• • •

தூரத்தில் இருவரும் வருவதைக் கண்டு விட்டு வாசலிலிருந்த மரகதம் உள்ளே ஓடினாள். அடுப்பிலிருந்த சுடு தண்ணீரை எடுத்து அவசரம் அவசரமாய் விளாவினாள். அதற்குள் நாகப்பன் அந்தப் பக்கம் வரவே, 'உங்களுக்கும் சுடுதண்ணீர் விளாவட்டுமா?' என்றாள். 'வேண்டாம் வேண்டாம்' என்றான் நாகப்பன். அப்பொழுது முத்தம்மா மட்டும் கொட்டிலில் வேலையாக இருந்தாள்.

"ஏன் அண்ணே! நாளைக்கே நடவு ஆரம்பிச்சடணும் என்கிறயே. நாத்து தயார் பண்ணி விட்டாயா?" என்று குளித்துக் கொண்டே கேட்டான் முருகப்பன்.

"ஏன்? நாம்தான் விதைச்சிருக்கோமே? அதிகாலை கோழி கூவுகிற வேளைக்கே சென்று, ஆட்களை வைத்துக் கொண்டு நாற்று பறிக்க ஆரம்பிச்சட மாட்டேன்?"

"அது சம்பா நாத்து. நம்ப ஓடை நாத்துக்குச் சிறுமணி நாத்துன்னு வேணும்?"



"சரியான சமயத்திலே நினைவூட்டினியே தம்பி! நான் கருக்கலிலேயே எழுந்து வழுதாவூருக்குப் போயிட்டு வரேன். பாலியான் வீட்டுப் பையனைப் பார்த்தால் ஏதாவது நினைவும். அவனிடத்தில் இல்லாவிட்டாலும் வேறு எங்கேயாவது அவன் வாங்கிக் கொடுப்பான் பாரு."

"அதுதான் சரி. அதற்குள்ளேயே இங்கிருந்து கொண்டு நாத்து பிடுங்குகிற வேலையை முடிக்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே குளித்து விட்டு வந்தான் முருகப்பன்.

அப்பொழுதுதான் மாட்டுக் கொட்டிலிருந்து வந்தாள் முத்தம்மா. அங்கு மரகதம் இல்லாததைக் கண்டு உலர்த்தி மடித்து வைத்திருந்த வேட்டியை எடுத்து முருகப்பனிடம் நீட்டினாள். "ஏன் நீங்களு குளிச்சாச்சா?" என்று அப்படியே தன் கணவனையும் கேட்டாள். "இன்னும் இல்லே. இதோ கேணிக்கே போயிட்டு வந்துடறேன்" என்று புறப்பட்டான் நாகப்பன். அவனுக்கு எப்பொழுதும் தண்ணீரில் இறங்கி ஆற அமரக் குளிக்க வேண்டும்.

நன்றாக விடிவதற்குள், நாலைந்து தடவை எழுந்து உட்கார்ந்துவிட்டான் நாகப்பன். கடைசியில் கோழி கூவின சத்தத்தைக் கேட்டதும், "ஏண்டா தம்பி! வழுதாவூருக்குப் போயிட்டு வரட்டுமா?" என்று எழுந்தான். "என்ன!" என்று அலறிக் கொண்டு எழுந்தான் முருகப்பன்.

அப்பொழுதுதான் பளிச்சென்று நினைவு வந்தது அவனுக்கு. "ஏன் அண்ணே! இன்றைக்குத் தேதி முப்பதுதானே! வேலுக்குடிக் கல்யாணத்துக்குப் போக வேண்டாமா? அந்தப் பெரியவர் வேறு என்னைச் சந்தையிலே கண்டு அவசியம் வந்தாகணும் என்றாரே!" என்றான் முருகப்பன்.

"ஆமாம் முருகப்பா! இன்றைக்குத்தான் அது!" என்று முன் வைத்த காலைச் சற்றுப் பின்னுக்கு இழுத்தான் நாகப்பன்.

"சரி, சரி. நீ போய் வருகிறபடி வா, அண்ணே! நான் கல்யாணத்துக்குப் போய்க்கிறேன்" என்றான் முருகப்பன். பிறகு, "மரகதம்! ஏய், மரகதம்" என்று தன் மனைவியை எழுப்பினான். "நான் கல்யாணத்துக்குப் போய் வருகிறதுக்குள்ளே ஆட்களை விட்டு நாத்து பிடுங்கச் சொல்றியா?" என்றான்.

"உம், உம். நீங்கள் போய் விட்டு வாங்க. நாங்க பார்த்துக்கிடறோம்" என்று அதற்கு முத்தம்மாளே குரல் கொடுத்தாள்.

நாகப்பன் வழுதாவூருக்குப் பயணமானான். வேலுக்குடி கல்யாணத்துக்குப் புறப்பட்டு விட்டான் முருகப்பன்.

• • •

சாலைத்து மேட்டுப் பக்கலிலேயே நாற்றங்கால் இருந்ததினால் மேற்பார்வை பார்க்க ஓரகத்திகளுக்குச் சற்றுச் சௌகரியமாகவே இருந்தது.

அந்தச் சமயத்தில் சாலை வழியாய் வேகமாக வந்து கொண்டிருந்த வண்டி திடுக்கென்று அந்த ஆலமரத்து வீட்டுக்கு நேரே நின்றது. அனைவருடைய கண்களும் அவ் வண்டியையே நோக்கின.

அட, முத்தம்மாளின் அண்ணனல்லவா இறங்கி வந்து கொண்டிருக்கிறான்? அவனைக் கண்டதும் முத்தம்மாளின் வாயெல்லாம் பல்லாகி விட்டது.

"மரகதம்! மரகதம்! என் அண்ணாச்சி வந்திருக்கு, பார்!" என்று உள்ளிருந்த தன் ஓரகத்தியைக் கூப்பிட்டாள்.

"எங்கேமச்சான்மார்கள் ஒருவரையும் காணோம்?" என்று கேட்டுக் கொண்டே வந்தான் முத்தம்மாளின் அண்ணன்.





"சின்னவரு வேளுக்குடி கல்யாணத்துக்குப் போயிருக்காரு. இவரு சிறுமணி நாத்துக்காக வழுதாவூர் போயிருக்காரு" என்றாள் மூத்தம்மாள்

"அட, நான்கூட நாத்துக்குத்தானே வந்திருக்கேன். ஆனால் சம்பா நாத்து இருந்தால் போதும் எனக்கு" என்றான் அவன்.

"அதுக்கென்ன? இதிலே இரண்டு கமை எடுத்துக் கொண்டால் போச்சு" என்று சொல்லிக் கொண்டே உள்ளே அழைத்துக் கொண்டுபோய்க் கொஞ்சம் பாலைக் காய்ச்சிக் கொடுத்தாள் மூத்தம்மாள்!

"அங்கேயும் இன்னிக்கு நடவு. நாத்துக் கொஞ்சம் குறைஞ்சு போச்சு. உடனே வண்டி கட்டினேன் இங்கே. ஆள் மாகாணத்துக்கு இத்தனை நாழிக்குள்ளே நாத்து இல்லாம வேலை வீணாய்ப் போகும்" என்று அவசரப்பட்டான் அவன் அண்ணன்

"அதுக்கென்ன, இதோ!" என்று ஆட்களை விட்டு இரண்டு கமை நாற்றுகளைத் தூக்கிக் கொண்டு போய் வண்டியில் வைக்கச் சொன்னாள் மூத்தம்மாள்.

"ஏன் அக்கா! நமக்கு நாத்து போதாமல் போய் விட்டால்......!" என்று இலேசாய் ஓரகத்தியின் காதைக் கடித்தாள் மரகதம்.

"நமக்குத்தான் சிறுமணி நாத்து வேறே வருதே" என்றாள் மூத்தம்மாள் அதே குரலில்.

"என்னமோ! அங்கு கிடைக்காவிட்டால்......?" என்று இழுத்தாள் மரகதம்.



அதற்குள் "போய் விட்டு வரேன், தங்கச்சிகளா! மச்சான் மார்கிட்டே சொல்லுங்கோ" என்று புறப்பட்டு விட்டான் மூத்தம்மாளின் அண்ணன். வந்த அவசரத்தை விடக் கனவேகமாய் வண்டி திரும்பி விட்டது.

சற்று நாழிகைக்குள் நாற்று பிடுங்கிமுடித்து நடவு ஆரம்பமாகியது.

"மரகதம்! அதோ மேலச் சதுக்கம் வரை போயிட்டுதே நடவு! நான் அந்தப் பக்கம்

சற்றுப் போயிட்டு வரட்டுமா?'' என்று புறப்பட்டாள் முத்தம்மாள் வேகமாக.

நாலடி எடுத்து வைத்தவள் சற்று உற்றுப் பார்த்தாள். ''அதோ வரப்பு மேலே இருக்கிறது யார் பார்? அவர்தான் வழுதாவூரிலிருந்து வந்துட்டடார் போலிருக்கு'' என்றாள்.

மரகதமும் நன்றாய்க் கூர்ந்து பார்த்து விட்டு, ''ஆமாம், ஆமாம், அவர்தான்'' என்று ஆமோதித்தாள்.

'இன்னும் இவரைக் காணுமே' என்று வாசலுக்கும் உள்ளுக்குமாக நடந்தாள் மரகதம். வெய்யில் ஏற ஏற. 'சரிதான் சாப்பாட்டுக்குத் தங்கிட்டாற் போலிருக்கு' என்று எண்ணினாள். அவள் நினைத்தபடியே முருகப்பன் விருந்து சாப்பிட்டுவிட்டு, அந்த வேகாத வெய்யிலில் வெற்றிலையும் கையுமாய்த் தலை தெறிக்க ஓடி வந்தான். அப்பொழுதுதான் நாகப்பனும் ஆட்களுக்குக் கஞ்சி அனுப்பி விட்டு அங்கு வந்தான்.

''ஏன் அண்ணா போன காரியம் காயா, பழமா?'' என்று விசாரித்தான் முருகப்பன்.

'பாலியார் ஊரிலில்லை. அவன் வந்தால் தான் கிடைக்கும் என்கிறார்கள். அவன் நிலத்துக்கே நாத்து காணாது என்கிறான் ஒருவன். சரி என்று நான் அப்பொழுதே திரும்பி விட்டேனே!'' என்றான்.

''சரி! சரி! ஓடை நிலத்துக்கும் சம்பா நாத்தையே நட்டுடுங்க'' என்றான் முருகப்பன். அதற்குள் அங்கிருந்த ஆள் ஒருவன் ''அப்படியென்றால் நாத்து காணாதுங்களே'' என்றான். ''என்ன! காணாதா?'' என்று திடுக்கிட்டான் முருகப்பன்.

உடனே நாகப்பனும் அங்கிருந்தபடியே ஒரு கண்ணோட்டம் விட்டு, ''ஆமாம், அவன் சொல்கிறதும் சரிதான். இன்னும் ஒரு களம் நாத்துத்தானே கிடக்குது!'' என்றான்.

''என்ன, அண்ணா புதிர் போடறே! கால்காணி நாத்து விட்டேனே!'' என்றான் முருகப்பன்.

''வண்டியிலே இரண்டு களம் நாத்து வெளியேறிட்டுது. அது இருந்தால் அநேகமாய்த் தன்னைக் கட்டிக் கொள்ளும்.''

'அது எங்கேடா போயிட்டுது இரண்டு களம்?'' என்று அண்ணன் தம்பி இருவருமே ஏககாலத்தில் கேட்டனர்.

''மனைவியிலிருந்து வண்டி கட்டிக்கொண்டு நாத்து கொஞ்சம் வேண்டுமென்று அண்ணாச்சி வந்திருந்தது. நான்தான் அனுப்பி வைச்சேன்'' என்றாள் முத்தம்மாள்.

'என்ன! பெத்த ஆத்தா சோத்துக்கு அழுதாளாம்; பிள்ளை கொடுக்கிறானாம், காசியிலே கோதானம். அதுமாதிரியில்லே அண்ணா இருக்கு இது. இது எத்தனை நாளா, ஆத்தா வீட்டுக்குச் சொத்து சேர்த்தாகிறது?'' என்று எகத்தாளமாய்க் கேட்டான் முருகப்பன்.

''ஐயோ! என்ன அபாண்டம்! இங்கே நாத்து ஏதேஷ்டமாகக் கிடக்கே! நீங்க வேறு சிறுமணி நாத்துக்குப் போயிருக்கீங்களே என்றல்லவா கொடுத்தேன்'' என்றாள் முத்தம்மாள்.

''அண்ணா! இதுமாதிரி விதைக் கோட்டையிலேயே எலியை வைத்துக் கொண்டு வாழ என்னாலாகாது!'' என்று இரைச்சல் போட்டான் முருகப்பன். சமயம் பார்த்து ''ஏன் அக்கா நான் அப்பொழுதே சொன்னேனல்லவா?'' என்று சொல்லி வைத்தாள் மரகதம்.



போலீஸ்காரர்: ஏன் ஸார்! உங்கள் நண்பர் ஒருவர் பாதசாரிகள் நடக்க வேண்டிய விதிகளைப் பற்றி ஒரு புஸ்தகம் எழுதினாரே, அவர் இப்பொழுது எங்கிருக்கிறார்?

மற்றவர்: ஆஸ்பத்திரியில் இருக்கிறார்; அவர் மீது ஒரு மோட்டார் ஏறிவிட்டது.

''இப்பொழுதுதான் எனக்கு ஒவ்வொன்றாய் விளங்குது! அன்றைக்கு அப்படி நடந்தது. இன்றைக்கு இப்படி நடந்தது'' என்று விஷமமாய்ப் பேசினான் முருகப்பன். மரகதமும் உள்ளிருந்தபடியே ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தாள். ஆற்று நீர் எத்தனை அழகாய்ச் சென்றாலும் அதனடியில் எத்தனை சுழல்கள்! மனதுக்குள் இவ்வளவையும் திணித்துக் கொண்டு இவர்களால் எப்படித்தான் ஒற்றுமையாய் வாழ முடிந்தது! ஆ! மனித மனமே! ஆச்சரியம்!

இத்தனை நாட்களாய் ஏர்கலப்பைகளையும் மண்வெட்டி, கடப்பாரைகளையும் வைத்துக் கொண்டிருந்த அந்தப் புளிய மரத்து வீட்டை ஒழித்துக்கொண்டு அன்று மாலையே தனிக் குடி புகுந்து விட்டான் முருகப்பன்.

அண்ணனும் அண்ணியும் வாய்மூடிருந்து ஒன்றுமே பேசவில்லை. அப்பொழுது பூங்கோதை ஏணையில் தூங்கிக்கொண்டிருந்தாள்.

ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்கு லாபந் தானே! உடனே பண்ணையாட்களும் பிரிந்து கொண்டார்கள். பிறகு எங்கெங்கேயோ நாற்றுக்காக அலைந்து, சிறுமணி நாற்றையே கொண்டு வந்து தன் நிலத்தில் நட்டுக்கொண்டான் முருகப்பன். ஆனால் தண்ணீர் பாய்ந்தாக வேண்டுமே! வெகு தூரத்திலிருந்து தண்ணீர் கொண்டுவர வேண்டியதாயிற்று. எத்தனை சிரமம்! எத்தனை பணச்செலவு!

வீட்டிலும் முருகப்பனுக்கு உற்சாகமில்லை. மரகதத்துக்கும் தனிக்குடித்தனம் செய்து பழக்கமில்லை. 'உம்'மென்று உட்கார்ந்திருந்தாள். ஆலமரத்து வீட்டுக்குப் போகக்கூடாதென்று பையனுக்கு வேறு கடுமையான உத்தரவு போட்டாகி விட்டது.

அதுமாதிரிதான் முத்தம்மாளும் அங்கு தன் பூங்கோதைக்குக் கடுமையான உத்தரவு போட்டிருப்பாளோ என்னவோ! இல்லாவிட்டால் சித்தப்பாவிடம் அத்தனை ஒட்டுறவாயிருந்த குழந்தை இத்தனை நாட்களாய்ச் சும்மாவா இருந்திருக்கும்!

ஒன்று, இரண்டு என்று நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. சரியான சம்ரட்சணையில்லாமல் முருகப்பன் சற்று இளைத்துக் கூடப் போய்விட்டான். அவன் அண்ணன் நாகப்பனுக்கோ ஏதோ இருட்டில் பிடித்து விட்டாற் போலிருந்தது. பயிர் பச்சைகளைக் கவனமாகப் பார்த்துக் கொண்டாலும், வரவு செலவுக் கணக்கு ஒன்றும் தெரியாதல்லவா! முத்தம்மாளுக்கு முதல் நாள் ஏற்பட்ட திகைப்பு இன்னும் மாறவில்லை. அதோடு பூங்கோதையின் கேள்விகளுக்கே அவளால் பதில் சொல்ல முடியவில்லையே!

அதற்குள் கிராமத்தில் அநேக கதைகள் கிளம்பி விட்டன. அண்ணன், தம்பியை மோசம் செய்து விட்டான் என்றார்கள் சிலர். தம்பி, அண்ணனை மோசம் செய்து விட்டான் என்றார்கள் சிலர். இப்படி இல்லாததும் பொல்லாததும் ஏகத்தாளமாய்ப் பேசிக் கொண்டார்கள். ஆனால் எவனும் நேரில் வந்து இவர்களை விசாரித்ததே கிடையாது.

தன் வீட்டிலிருந்தபடியே இலேசாய்த் தன் ஓரகத்தி வீட்டை எட்டிப் பார்த்தாள் மரகதம். 'ஏது! இன்றைக்கு எங்கேயோ புறப்படுகிறாப் போலிருக்கே உங்க அண்ணி. கொண்டையிலே பூ குலுங்குகிறதே! சரிதான் அதோ குழந்தையையும் அழைத்துக்கொண்டு குடும்பத்தோடு சந்தைக்குப் போகிறாப்போலிருக்கு'' என்றாள். ''ஏன்! உனக்கும் அப்படி போகணும்னு ஆசையாக இருக்கா? புறப்படேன். நாமும் ஒரு பக்கம் சந்தைக்குப் போயிட்டு வருவோம்'' என்றான் முருகப்பன். உடனே மரகதம் ஒரு பட்டுப் புடவையை யெடுத்துக் கட்டிக்கொண்டு புறப்பட்டாள். கூடவே முருகப்பனும் பையன் கையைப் பிடித்துக் கொண்டு புறப்பட்டான்.

அன்று சந்தையில் ஒரே கூட்டம். ஆனால் சாமான்களென்னவோ விதம் விதமாய் விற்றன. மரகதம் அடிக்கடி அப்படி வந்ததில்லையாதலால், அவைகளையெல்லாம் ஆவலாய் வாங்கினாள்.

சுற்றிச் சுற்றிச் சற்று அலுப்புத் தட்டியது. படியிலிருந்த கடலையைக் கொறித்துக் கொண்டே சற்று உட்கார்ந்தார்கள். அந்தச் சமயத்தில் ரயில்வே லயனுக்கு அக்கரையில் தன் அண்ணன் குடும்பத்துடன் அமர்ந்திருப்பதைப் பார்த்து விட்டான் முருகப்பன். ஆனால் அதை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளவில்லை.

என்ன ஆச்சரியம்! சற்று நேரத்துக்குள் குழந்தை பூங்கோதை முருகப்பனை இக்கரையில் கண்டு விட்டு ''அப்பா! அப்பா!'' என்று கத்திக் கொண்டே ஓடி வருகிறாளே! ஐயோ! அதே சமயத்தில் ரயில் வேறு ஜிகு ஜிகுவென்று வந்து கொண்டிருக்கிறதே! தண்டவாளத்தைத் தாண்டி யல்லவா குழந்தை வரவேண்டும்! அப்படியே அகப்பட்டுக் கொண்டு விட்டால்!.... முருகப்பன் மனம் புயலெனப் புழுங்கியது.

மறு கணம் பூங்கோதை தண்டவாளத்தை நெருங்கிவிட்டாளே! ரயிலும் அந்த இடத்தை நெருங்கிக் கொண்டிருந்ததைக் கண்டால் முருகப்பன் உடல் துடித்தது. 'ஐயோ! நம்ம பூங்கோதை யாச்சே!' என்று அலறிக் கொண்டே எழுந்து ஓடினான் முருகப்பன். ''என்னங்க அது?'' என்றாள் மரகதம்; அதற்குள் பூங்கோதை ஒரு லயனைக் கூடத் தாண்டி விட்டாளே! என்ஜின் டிரைவரும் குழந்தையைப் பார்த்து விட்டு பிரேக் போடத்தான் போட்டான். ஆனால் உடனே நிறுத்த முடியுமா!

ஆனால் அதற்குள் தன் உயிரையே துரும்பாக மதித்து, ஒரே தாண்டில் குழந்தையை வாரி யணைத்துக் கொண்டு அந்தப் பக்கம் போய்க் குதித்தான் முருகப்பன். தான் ஆடா விட்டாலும் தன் சதை ஆடாமலிருக்குமா! எல்லாம் கண் இமைக்கும் நேரத்தில் நடந்தது. முருகப்பனும் பூங்கோதையும் மயிரிழையில் உயிர் தப்பினார்கள். ஆபத்தொன்றுமில்லையென்று அறிந்து நிற்க வந்த ரயில் கூட வேகமாய் ஓடியே போய்விட்டது.

உடனே 'என்ன அது! என்ன அது!' என்று ஜனங்கள் 'ஜே ஜே' என்று கூடி விட்டார்கள். சந்தை இடத்தில் கூட்டத்துக்குக் கேட்கவா வேண்டும்! அப்பொழுதுதான் சுற்றுமுற்றும் பார்த்து விட்டு, ''எங்கே குழந்தையைக் காணுமே!'' என்றாள் முத்தம்மாள். ''இங்கே தானே இருந்தாள்'' என்றான் நாகப்பன். அதற்குள் 'ஏதோ குழந்தைமேலே ரயில் ஏறி விட்டதாமே' என்று ஓடினவனைக் கண்டு விட்டு, இருவரும் எழுந்தோடிவந்தார்கள். ''இல்லே இல்லே! ஏறப்பார்த்தது. அதற்குள் ஒருவர் ஓடி வந்து காப்பாத்திட்டாரு'' என்றான் மற்றொருவன். ''நம்ம பூங்கோதை தானே!'' என்று தலையிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டே ஓடி, அந்தக் கும்பலை நீந்திக் கொண்டு உள்ளே நுழைந்தார்கள்.

அப்பொழுது குழந்தை பூங்கோதை முருகப்பனுடைய கழுத்தைக் கட்டிக் கொண்டு, ''எங்கே போயிருந்தே அப்பா நீ இத்தனை நாளா? இந்த ரயிலில்தான் வந்தாயா? நீ இல்லாமல் எனக்கு ஒன்றுமே பிடிக்கல்லே, அப்பா! சாப்பிடக் கூடப் பிடிக்கலே' என்று தன் மழலைச் சொற்களால் சொல்லிக் கொண்டிருந்தாள். அமுத தாரையாயிருந்தன அவ்வார்த்தைகள் முருகப்பனுக்கு. கண்கள் கலங்கிப் போய்விட்டன.

அதற்குள் 'ஆ! குழந்தையைக் காப்பாற்றினது நீங்கள்தானா?' என்று அவன் முன் கண்ணீர் பெருக வந்து நின்றாள் முத்தம்மாள். ''தம்பி! என் குலவிளக்கை ஏற்றி வைத்தாயே!'' என்று குரல் தழுதழுத்தான் நாகப்பன். அதற்குள் மரகதமும் ஓடிவந்து விட்டாள். அங்கே உணர்ச்சிப் பெருக்கால் அனைவருடைய கண்களிலும் நீர் வழிந்தது.

'அவன் ஏதோ அறியாத்தனமாய்ச் செய்த தவறுக்காக, நீ இப்படித் தனியாகப் போயிட்டாயே, இது தகுமா? இத்தனை நாட்களாய் நான் சாப்பிட்ட சோறு என் உடலிலேயே ஒட்டலையே!' என்று தன் தம்பியின் கரத்தைப் பற்றினான் நாகப்பன். ''என்னை மன்னிச்சு, பிரிந்த குடும்பம் ஒன்று சேருகிறதைப் பாருங்கோ'' என்றாள் முத்தம்மா. இருவர் குரலும் பாகாய் உருகின.

பிறகு சந்தையிலிருந்து திரும்பின இரு குடும்பங்களும் ஒன்றாய்ச் சேர்ந்து, அந்த ஆலமரத்து வீட்டிலேயே நுழைந்தன.

# உணவு உற்பத்திப் பிரச்னைகள்

## Food Production in India

அன்னிய ஆட்சியிலிருந்து நாம் விடுதலையடைந்து விட்டாலும் அயல் நாட்டுக் கோதுமையிலிருந்து நாம் இன்னமும் விடுதலை பெறவில்லை. இவ்வாறு பத்து வருஷங்களுக்குப் பிறகு நிலைமையில் கணிசமான அபிவிருத்தி ஒன்றும் காணவில்லையென்றால் நாம் வகுத்த திட்டங்களிலோ, அல்லது அவற்றை அமுல் நடத்துவதிலோ அல்லது அவற்றை நிறைவேற்றி வைக்கும் ஸ்தாபனங்களிலோ அல்லது அடித்தளத்தில் இருக்கும் விவசாயிகளின் மனப்போக்கிலோ ஏதோ குறைபாடுகள் இருக்கத்தான் வேண்டும். குறைகள் எங்கே இருக்கின்றன? உற்பத்தி ஏன் பெருகவில்லை? தவறுகள் ஏற்பட்டிருந்தால் அவை ஏன் கவனிக்கப்படவில்லை? அவற்றுக்குப் பரிகாரம் காண முடியுமா? இம்மாதிரி விஷயங்களை ஆராய்ந்து உண்மையை விளக்கி வைக்கிறது இந்த ஆங்கிலப் புத்தகம்.

இதன் ஆசிரியர் திரு எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி அரசாங்க நிர்வாகத் துறையில் நீண்டகால அனுபவமுள்ளவர். உணவு உற்பத்தி சம்பந்தமாக நுட்பமான ஆராய்ச்சிகள் நடத்தியிருக்கிறார். விவசாயிகளின் நிலை, விவசாயத்தின் போக்கு, நிலப் பிரச்னை முதலியவை பற்றி அனுதாப உணர்ச்சியுடன் கவனித்திருக்கிறார். 'உணவு உற்பத்தியும், அதன் தத்துவங்களும், பிரச்னைகளும்' என்னும் விஷயம் பற்றிக் காலஞ்சென்ற வி. எஸ். சீனிவாஸ சாஸ்திரி ஞாபகார்த்த சாஸனத்தின் சார்பில் மார்ச்சு மாதம் இரண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். அவைதான் புத்தக வடிவில் வெளிவந்திருக்கின்றன.

புத்தகம் மூன்று பகுதிகளாகப் பாகுபாடு செய்யப்பட்டுள்ளது. முதல் பகுதியில் உணவு சம்பந்தப்பட்டவரையில் இப் பிரச்னையின் பிரதான அம்சங்கள் என்ன என்பது விளக்கிச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தியாவின் உணவுப் பிரச்னை முக்கியமாக அரிசிப் பிரச்னையே தவிர கோதுமைப் பிரச்னை அல்ல; தென் பிராந்தியத்தில்தான் இதைச் சமாளிக்கவேண்டுமே தவிர இதரப் பிராந்தியத்தில் அல்ல என்பதும், தென்னிந்தியர்கள் கோதுமை சாப்பிடும் பழக்கத்தை மேற்கொள்ள வேண்டுமென்ற பிரசாரம் அவசியமென்றாலும் காரிய சாத்தியமானதல்ல என்றும் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. அணைக்கட்டுகள் கட்டி முடித்து விட்டால் பருவ மழையைக் கட்டுப்படுத்தினதாக ஆகாது என்பதையும் மின்சார பம்புகள் மூலம் அதிகப்படி புதிய ஜல வசதிகள் உண்டாக்கப்படுவதில்லை என்பதையும் வெகு தெளிவுடன் விளக்குகிறார் ஆசிரியர். அதேபோல், சாகுபடிக்குக் கொண்டு வருவதற்கு ஏராளமான தரிசு நிலங்கள் நம் பாரதத்தில் இருக்கின்றன என்ற எண்ணம் தவறு என்பதையும் புள்ளி விவரங்கள் மூலம் நன்கு உணர்த்துகிறார். எனவே அதிக உற்பத்தி காணவேண்டுமென்றால் தரிசு நிலங்களுக்குச் சாகுபடியை விஸ்தரிப்பதுடன் இப்போது சாகுபடியாகும் நிலங்களிலிருந்து மகசூலை அதிகரிப்பதன் மூலமே பெற வேண்டும் என்பது ஆசிரியர் காணும் முடிவு.

இதை எப்படிச் செய்வது, நிர்வாக அமைப்பை எவ்வாறு மாற்றியமைத்தால் நல்லது என்பதை இரண்டாவது பகுதியில் மேல்நாட்டு அனுபவங்களைக் காட்டி விளக்கியிருக்கிறார். அதேபோல் உற்பத்தி முறைகளிலும் ஆசிரியர் பல அரிய யோசனைகளைக் கூறியுள்ளார். கங்கையையும் தென்னிந்திய நதிகளையும் இணைத்து நீர்ப்பாசனங்களை நிரந்தரமாக்கிக் கொள்ள வேண்டுமென்பது ஒன்று. சிறு நீர்ப்பாசனப் பராமரிப்பு விஷயத்தில் அதிக கவனம் செலுத்துவது மற்றொன்று. கமலையேற்றம் முதலியவைகளுக்காக ஏற்பட்ட கிணறுகளில் மின்சாரப் பம்புகள் வைக்கக் கூடாதென்பது மேலும் ஒன்று. ரசாயன உரங்களைத் தனித்தனி நிலங்களின் தேவைக்கும் தரத்துக்கும் ஏற்றவாறு உபயோகப்படுத்த வேண்டுமென்பது மற்றொன்று. யந்திர விவசாயம் சில இடங்களில் புன்செய் நிலங்களில் மட்டுமே மேற்கொள்ள ஏற்றது. அதிலும் ஜனத்தொகை அதிகமில்லாத பகுதிகளிலும் பூமியை ஆழமாக உழ வேண்டிய அவசியமில்லாத இடங்களிலும் மேற்கொள்ளக் கூடியது; நிலச் சீர்திருத்தம் சம்பந்தமாக உச்ச வரம்பு நிர்ணயிப்பதைக் காட்டிலும் குறைந்தபக்ஷ வரம்பை ஏற்படுத்திக் கொள்வது நல்லது; பெருங்குடிகளைச் சிறு குடிகளாகக் குறைப்பதைக் காட்டிலும் சிறுகுடியானவர்களை அடித்தளத்திலிருந்து உருவாக்குவது உகந்தது; கூட்டுறவு விவசாய முறையைக் கைவிட்டுத் தனிப்பட்ட விவசாயிகளுக்குக் கூட்டுறவு சங்கங்கள் மூலம் உதவி அளிப்பது மேலானது; நன்மை பயக்கும் என்பது மற்றொரு சிபாரிசு.

குறைகளை எடுத்துச் சொல்லும்போது தக்க ஆதாரங்களுடனும், புள்ளி விவரங்களுடனும் அரசாங்க யாதாஸ்துக்களையே துணையாகக் கொண்டு மனக் கசப்போ வெறுப்போ இல்லாமல் ஆராய்ச்சியாளரின் மனப்பான்மையுடன் சொல்லியிருப்பது குறிப்பிடத்தக்கது. இவற்றைக் குறைகள் என்று அரசாங்கம் ஏற்றுக் கொள்ளாமல்போனாலும் இப்பிரச்னையைப் பற்றிய ஆராய்ச்சிக்கு இவை வழிகாட்டக்கூடியவை என்பதில் சந்தேகமில்லை. பரிகாரமாகச் சொல்லப்பட்ட ஆலோசனைகளும் அதே போல் அரசாங்க நிர்வாகத்தினர்களால் ஏற்றுக் கொள்ளப்படாவிட்டாலும் கவனிக்கப்பட வேண்டியவை. உண்மையை விளக்கும் ஆராய்ச்சியில் விருப்பு வெறுப்புக்கு இடமில்லை. உணவுப் பிரச்னை பற்றிக் கவனம் செலுத்துபவர்கள் எல்லோரும் அவசியம் படிக்க வேண்டிய புத்தகம் இது. படிப்பதில் பலனுண்டு.

ஆசிரியர்: திரு எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி. கிடைக்குமிடம்: பாமதி புக்ஸ்; 3. கிழக்கு ஸர்க்குலர் ரோட், மந்தவெளிப்பாக்கம், சென்னை-28. விலை: ரூ. 3-75.





தீர்க்கமாக
உறுதியாக
வழுவழுப்பாக
எழுதக் கூடியது.

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்
ராஜேந்திரகுமார் & கோ.
236, அப்துல் ரஹ்மான்
வீதி, பம்பாய்-3

**RITESHARP** *Pens*
GHORUPDEV, BOMBAY 10

"விற்பனை மற்றும் சர்வீஸ்" செய்பவர்கள்:
ஜெம் அண்டு கம்பெனி
325/326, நேதாஜி போஸ் ரோடு, சென்னை-1

---

## புளோரோஸோன்
## கருமையான சரீரத்தை வெண்மையாக்குகிறது



புளோரோஸோன் உங்கள் சருமத்தை இதேபோல் வெண்மையாக்கி, முகப்பருக்கள் முதலிய சருமக் கோளாறுகளை அறவே போக்கி, மேனிக்கு மலர்போன்ற மென்மையையும், நீடித்த அழகையும் அளிக்கும்.

புளோரோஸோன் சோப் ஒரு பட்டி விலை ரூ. 4.25 சக்தி மிகுந்த புளோரோஸோன் கிரீம் ஒரு ஜாடி விலை ரூ. 5.50

வி. பி. சார்ஜ் தனி

கெமிஸ்டுகளிடமும் ஹைஜினிக் ரிசர்ச் இன்ஸ்டிட்யூட், த. பெ. 1192 பம்பாய்-1 விலாசத்திலும் பெறலாம்

*Florozone*
MIRACLE BEAUTY BLEACH

*Distributors of Madras:*
R. L. GOWDER & Co., 50, Bunder St., Madras

---

## நான்கு மருந்துகள் சேர்ந்துள்ள

# 'அனாஸின்'

## தலைவலி, ஜலதோஷம், ஜுரம் மற்றும் தசைவலிகளுக்கு

## சிறந்தது

ஞாபகத்தில் வையுங்கள்! ஒரே மருந்து கலந்துள்ள எந்த வலி நிவாரண மருந்தும், டாக்டரின் குறிப்பிற்கு ஒப்பான, விஞ்ஞான முறையில் தயாரித்துள்ள நான்கு மருந்துகளின் கலவையான 'அனாஸினைப்' போல் துரிதமாகவும் . . . அபாயமின்றியும் நிச்சயமாகவும் குணமளிக்க இயலாது. லட்சோப லட்சம் ஜனங்கள் 'அனாஸின்' தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைவலிகளிலிருந்து, துரிதமாயும், பூரண நிவாரணமளிப்பதிலும் சிறந்தது என்பதை அறிவார்கள். எப்பொழுதும் வீட்டில் 'அனாஸின்' வைத்திருங்கள்.






GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD. REGISTERED USER.

K. 68 (R) TAM.



# உப்பும் உவப்பும்

கே. ரகுபதி

"என்ன ஐயா, இது? எல்லாத்திலேயும் இப்படி உப்பை அள்ளிக் கொட்டியிருக்கிறீரே? வாயில் வைக்க வழங்கவில்லையே" என்று கத்தினான் நாராயணன் வாழைக்காய்க் கறியை ருசி பார்த்தபடியே.

"இன்றைக்குப் பரவாயில்லை என்று சொல்ல வேண்டும். கொஞ்சம் குறைச்சலாகப் போட்டிருக்கிறார்" என்றார் பஞ்சாயத்துச் சபை குமாஸ்தா பரமசிவம்.

"நாசமாய்ப் போச்சு! குறைச்சலா இது? சமுத்திரராஜனே இதில் பிரத்தியட்சமாகியிருக்கிறாரே" என்றான் நாராயணன்.

"அண்ணா! இங்கே அப்படியப்படித்தான் இருக்கும். இதுவரைக்கும் யாரும் குறை சொன்னது கிடையாது. இந்த அப்பாசாமி சமையலை! நீங்கள்தான் முதல் ஆசாமி" —தட்டில் சாதத்தை எடுத்து வந்தபடியே அப்பாசாமி சொன்னார்.

"நல்ல நியாயம் ஐயா இது? யாரும் குறை சொல்லவில்லை என்று உங்கள் இஷ்டத்துக்கு உப்பைப் போடுகிறதா? ஒரே உப்புக் கஷாயம். தூ. தூ!" என்று முகத்தை அஷ்ட கோணலாக்கிக் கொண்டு சொன்னான் நாராயணன்.

"நீங்கள் புதிசு! தவிர அளவாகத்தானே நான் உப்பு போட்டிருக்கிறேன். நீங்க மனுஷன் சாப்பிடுகிற அளவுக்கும் குறைவாக இதுவரையில் உப்பைச் சேர்த்து வந்திருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன்."

'சுரீர்' என்று அவன் இதயத்தைச் சுட்டது போலிருந்தது அந்தச் சொற்கள். முகம் கணத்தில் சிவந்து விட்டது.

"கையை உதறிவிட்டு எழுந்தவன், "உங்களை விட்டால் எனக்கு வேறே கதியில்லை என்று எண்ணிப் பேசுகிறீரா? நான் வரேன்" என்று கையைக் கழுவிக் கொண்டு நகர்ந்தான். அப்பாசாமி கையைப் பிசைந்தார்.

"அடாடா! தவறுதலாக, நினைத்துக் கொள்ளப் படாது. சுவாதீனமாகச் சொல்லி விட்டேன். இந்த ஊரிலே வேறே சாப்பாடு நல்லதாகக் கிடைக்காது. ஏதோ உங்க மாதிரி பேர்வழிகளை நம்பித்தான் என் பிழைப்பும் நடக்க வேணும்... ஹி... ஹி..."

'கோபிப்பதா அழுவதா?' என்று புரியவில்லை நாராயணனுக்கு.

"உங்களுக்கு வேண்டுமானால் இனிமேல் கொஞ்சம் தனியாக உப்பு போடாமல் சமைத்து வைத்து விடுகிறேன். அதற்காக நீங்கள் சாப்பிடாமல்......

''உப்பு போடாமல் சமைக்கிறீரா? என்ன பேத்தல் இது? அளவோடு போடும். நான் உப்பில்லாமல் சாப்பிடுகிறவன் என்று பார்த்தீரா? நான் வரேன்!''

எவ்வளவோ கெஞ்சினார். ஆனால் நாராயணனுக்குச் சாப்பிடப் பிடிக்கவில்லை.

''என்னங்க? அதற்குள்ளேயா சாப்பிட்டுட்டீங்க?'' என்று கேட்டான் தபால்காரத் தங்கவேலு, கடிதங்களையெல்லாம் முத்திரை விட்டபடியே.

''இல்லையப்பா, சாப்பாடே நல்லா இல்லே. ஒரே உப்பு மயம்!''

''எல்லாருக்கும் ரோசம் வரட்டுமின்னு, ஹோட்டல்காரர் அள்ளிக் கொட்டுறாரு. என்னமோ அவரை விட்டாலும் இந்த ஊரிலே வேறே வழியுமில்லே!''

''ஏன் தங்கவேலு? நல்ல ஓட்டல் வேறு கிடையாதா இங்கே?''

''ஓட்டல் வைக்கிற அளவுக்கு இங்கே பிஸினஸ் நடக்காதுங்களே....''




''உம்...'' என்று பெருமூச்சு விட்டபடியே தன் வேலையில் கருத்தைச் செலுத்தினான் நாராயணன். நேரம் ஆக ஆக அவனால் வேலை எதுவும் செய்ய முடியவில்லை. பசி கொல்ல ஆரம்பித்தது. தவிர, கொஞ்சம் தான் சாப்பிட்டான் என்றாலும், அந்த உப்பு வயிற்றை ஏதோ சங்கடம் செய்தது.

அவன் தவிப்பைப் பார்த்த தங்கவேலு, ''ஏங்க! ஏதாச்சும் வாழைப் பழமாவது வாங்கி வரட்டுங்களா?'' என்றான். ''சரி, வாங்கி வா'' என்று அவனை அனுப்பிவிட்டு நாற்காலியில் சாய்ந்தான் நாராயணன்.

மனம் நிலை கொள்ளாமல் அலை பாய ஆரம்பித்துவிட்டது.

''நீங்க மனுஷன் சாப்பிடுகிற அளவுக்கும் குறைவாக இதுவரை உப்பைச் சேர்த்து வந்திருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன்!''

அப்பாசாமி சொன்ன சொற்கள்...மனிதனுக்கும் மேலாக அல்லவா அவர் மதித்துவிட்டார்? சாப்பிடுகிற பாக்கியம் பேராவது நமக்குச் சாதகமாகப் பேசினார்களா? இல்லை, எல்லாம் ஒரே ரகம்!

இதே வார்த்தையைத்தான் லலிதாவும் அன்று கூறினாள். அதற்கு அவனுக்குக் கிடைத்த பரிசு...

அந்தமாதிரி அப்பாசாமியிடம் கோபித்துக் கொள்ள முடியுமா?

திடீரென்று வீசிய பலத்த காற்றில் மேஜையிலிருந்த காகிதங்கள் படபடத்துப் புரண்டன. அதைப் போல் அவன் நினைவுகளும் நடந்த நிகழ்ச்சிகளை நாடி நகர்ந்தன.

ஆறு மாதங்களுக்கு முன்.

திருமணம் ஆன புதிது. லலிதாவைக் கைப்பிடித்தபோது ''நம்மைவிட அதிர்ஷ்டசாலி இவ்வுலகில் இருக்கவே முடியாது என்று இறுமாந்து பூரித்துப் போனான் நாராயணன்.

ஆம்; லலிதா நல்ல அழகிதான். கவர்ச்சியான முகம்; வாளிப்பான தேகக்கட்டு; கலகலப்பான பேச்சு. இனிமையான குரல்.—

வாழ்க்கை ஒரே இனிப்பாக இருக்கப் போகிறது என்று எண்ணிப் பலவிதமாகவும் மனக்கோட்டை கட்டி வந்தான் அவன். ஆனால், அத்தனையும் தவிடு பொடியாகி விட்டன ஒரே நாளில்.

சிறு வயதிலேயே பெற்றோரை இழந்தவன் நாராயணன். தாய்மாமன் ஒருவர் உதவியால் ஸ்கூல் பைனல் பாஸ் செய்ததும் தபாலாபீஸில் குமாஸ்தா வேலைக்குச் சேர்ந்தான். பரீட்சைகள் சில தேர்ச்சியடைந்து போஸ்ட்மாஸ்டராகவும் ஆகிவிட்டான். ஊர் ஊராகச் சுற்றி வந்துகொண்டிருந்தான்.

தாய்மாமன்தான் வரன் தேடினர். லலிதாவைப் பார்த்த உடனேயே பிடித்துப் போய்விட்டது நாராயணனுக்கு. திருமணம் சிறப்பாக நடந்தது.

நல்ல இடம். ஒரே பெண். சொத்தும் இருந்தது. காட்மலாகாவி விருந்து ஓய்வு பெற்றவர் மாமனர். பங்களா வாசம். சமையலுக்கு ஆள். வெளியில் போக வரக் கார். எல்லாம் சிறப்பாக இருந்தன.

''சென்னையிலேயே வேலை தேடித் தந்து விடுகிறேன். இங்கேயே ஒன்ருக இருந்துவிடலாமே, மாப்பிள்ளை!'' என்ருர் மாமனர் நாராயணனிடம் ஒரு நாள்.

ஆனல் நாராயணன் அதற்குச் சம்மதிக்கவில்லை. மாமனர் வீட்டிலேயே இருந்தால் மரியாதை போய் விடும் என்பதை அவன் உணர்ந்திருந்தான்.

''அதெல்லாம் வேண்டாம். நம்ம இலாகாவில் கொஞ்ச நாட்கள் கஷ்டப்பட்டால் அப்புறம் சென்னைக்கே மாற்றிக்கொண்டு விடலாம்'' என்ருன்.

அதற்கு மேல் மாமனரும் அப்போது அவனை வற்புறுத்தவில்லை.



ஒவ்வொரு லீவுக்கும் மாமனர் வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தான் நாராயணன். லலிதாவுடன் உல்லாசமாகப் பொழுது இன்பகரமாகக் கழிந்து கொண்டிருந்தது.

அன்று அவன் போனபொழுது வழக்கமாக வரவேற்கும் லலிதாவைக் காணவில்லை.

மாமனர் மட்டும், ஈஸிசேரில் சாய்ந்து பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தவர், எழுந்திருந்தார்.

''வாங்கோ மாப்பிள்ளை!'' என்றவர், அவன் கண்கள் அலைபாய்வதை உணர்ந்ததும், ''லலிதாதான் இன்றைக்குச் சமையல்'' என்று கூறினர்.

'ஏன்? சமையல்காரன் என்ன ஆனன்?'' என்று வியப்புடன் கேட்டான் நாராயணன்.

''அந்தப் பயல் பாருங்கோ, இவ்வளவு நாட்களாக ஒழுங்காகத்தான் இருந்தான். எவனே ஓட்டல்காரன் நிறையச் சம்பளம் தரேன்னனும். திடீரென்று புறப்பட்டு விட்டான்'' என்று சமையல்காரர்களைப் பற்றி ஒரு பெரிய பிரசங்கமே செய்ய ஆரம்பித்து விட்டார் அவர்.

வேறு வழியில்லாமல் அவருடைய 'போரை'ச் சகித்துக் கொண்டிருந்தான் நாராயணன்.

இச்சமயத்தில் லலிதா அங்கே வந்து, ''இன்றைக்கு நான்தான் சமையல்'' என்ருள் பெருமிதத்துடன்.

''அடாடா! நான் இன்ஷ்யூர் செய்து கொள்ளாமல் வந்து விட்டேனே'' என்று நாராயணன் கேலியாகக் கூறினன்.

''அதென்ன மாப்பிள்ளை! லலிதா சமையலுக்குப் புதிசு என்று நினைக்கிறீர்களா? அவளுக்குப் பத்து வயதிலேயே எல்லாம் தெரியும். ஆள் இருந்தானே என்று சமைப்பதில்லை'' என்ருர்.

மாமனர் மறுபடியும் ஆரம்பித்துவிட்டார். பதார்த்தங்கள் எத்தனை வகை; அவைகளை எவ்வளவு விரைவில் கற்றுக் கொண்டாள் என்பதை விரிவாக விளக்கினர்.

''ம்'' என்று நீண்ட பெருமூச்சு விட்டான் நாராயணன்.

தம் பேச்சு அதிகமாகப் போய் விட்டது என்பதை உணர்ந்தார். நாராயணன் ஏதாவது நினைத்துக் கொள்ளப் போகிருனே என்று பயந்தாரோ என்னவோ தெரியவில்லை. சட்டென்று ''லலி! மணி பத்தரையாச்சே, இலை போட்டு விடேன்'' என்ருர்.

அவர்கள் சாப்பிட உட்கார்ந்தார்கள்.

லலிதாதான் பரிமாறத் தொடங்கினள்.

ஒவ்வொரு முறை குனியும் போதும் சாட்டை இழுக்கும் பின்னல் தரையில் புரளுவதும், அதை லாகவமாக எடுத்துப் போட்டுக் கொள்வதுமாக இருந்த லலிதாவின் எழில் உருவத்தை ரசித்தபடி வாழைக்காய்க் கறியை எடுத்து வாயில் போட்டுக் கொண்ட நாராயணனின் முகம் சரேலென்று கடுகடுப்பாக மாறியது.

அதுதான் அப்படியிருக்கிறதே என்று பக்கத்தில் இருந்த வெண்டைக்காய்க் கறியை எடுத்துப் போட்டுக் கொண்டான். அதுவும் அப்படியே. பச்சடி கேட்கவே வேண்டாம். கடைசியில் சாம்பார் வந்தது. அதிலும்—

'' மாப்பிள்ளைக்கு என்ன வேணும்?''

கதவிடுக்கால் எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த மாமியார் சொன்னாள்.

சப்புக் கொட்டியபடி, ''இன்றைக்குச் சமையல் பிரமாதம்'' என்று கூறி மாமனார், மாப்பிள்ளை பக்கம் திரும்பி, '' மாப்பிள்ளை? ஏன் சாப்பிடாமல் உட்கார்ந்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

''உப்பு வேணுமா?'' என்று கேட்டபடியே வந்தாள் லலிதா.

நாராயணன் பெருத்த முகமாறுதலுடன், ''உப்பு வேணுமாவா? ஏகத்துக்குத்தான் கொட்டியிருக்கிறாயே?'' என்றான்.

'' இல்லையே! அளவோடுதானே இருக்கு. எனக்குக் கொஞ்சம் கூட வேணும்னு இலையிலே தனியாகப் போட்டுக் கொண்டிருக்கிறேன்'' என்று விவரித்தார் மாமனார்.

''இதுதான் அளவா? ஒரே உப்புக் கஷாயமாக இருக்கிறது. எப்படிச் சாப்பிடுவது?''

லலிதா கையைப் பிசைந்தாள்.

''இந்த உப்புக்கூடப் போடாவிட்டால் எப்படி? சமையல்காரன் போடவே மாட்டான். அப்புறம் நாங்கள் தனியாகச் சேர்த்துக் கொள்வோம். உங்களுக்கும் அது சரியாக இருக்கும் என்று .....''

பசியும், அவர்கள் கூறும் சமாதானமும், கொஞ்சம் சாப்பிட்டதால் உள்ளே போய் என்னவோ செய்தன. எழுந்து விட்டான்.

'' வாயில் வைக்கவே வழங்கவில்லையே? என்னமாகச் சாப்பிடுவது?''

லலிதாவுக்கு அவன் படும் அவஸ்தையைப் பார்த்துச் சிரிப்பாக இருந்தது.

''சாதாரணமாக மனிதன் சாப்பிட வேண்டிய அளவு உப்புக்கூட நீங்கள் சாப்பிடறதில்லை போல் இருக்கு'' என்றாள் லலிதா நகைத்தவண்ணம்.

மாமனாரும் 'ஹோ ஹோ' என்று நகைத்தார் பெரிதாக.

அடுத்த நிமிடம்—

தன் நிலையை மறந்தான் நாராயணன்.

'பளார்' என்று ஒரு அறை!

மாம்பழக் கதுப்பு மாதிரி சிவந்து காணும் அழகான பட்டுக் கன்னம் பின்னும் சிவந்து போய்விட்டது.

'ஐயோ!' என்று அப்படியே உட்கார்ந்து விட்டாள் லலிதா.

செய்வதறியாது அப்படியே ஒரு கணம் திகைத்து விட்டனர் மாமனாரும் மாமியாரும்.

சுய உணர்வு வரவே அவர்களுக்குச் சில விநாடிகள் பிடித்தன.

லலிதாவின் தாய் ஓடி வந்து லலிதாவைத் தூக்கினாள். மாமனாரும் எழுந்து விட்டார்.

ஆனால்...

நாராயணன்தான் இதற்குள் தெருக்கோடி போய் விட்டிருந்தானே!

'' இருந்தாலும் நீ அப்படிச் சொல்லியிருக்கக் கூடாது, லலிதா துடுக்காக. மாப்பிள்ளைக்குக் கோபம் வந்து விட்டதே!'' என்றாள் லலிதாவின் தாயார் மெதுவாக.

''என்ன சொல்லி விட்டாள் அப்படி? தனக்குத்தான் பலமிருக்கிறதென்று அறைந்து விட்டுப் போகிறான் ராஸ்கல்! ஒரு நிமிஷம் எனக்கு என்ன செய்கிறதென்று புரியாமலே போய்விட்டது. இல்லேன்னா, அவனை நொறுக்கித் தள்ளியிருப்பேன்.''

''அவரை ஒண்ணும் சொல்லாதீர்கள், அப்பா!'' என்றபடி பொங்கிவந்த அழுகையை அடக்க மாட்டாதவளாய்த் தன் அறைக்கு ஓடினாள் லலிதா.

ரயிலில் ஏறி உட்கார்ந்த பிறகும் கூட நாராயணன் நிம்மதியடையவில்லை.

'என்ன வார்த்தை சொல்லி விட்டாள் லலிதா? மாமனாரும் அல்லவா விட்டுக் கொடுக்காமல் அவளுக்கு ஒத்துப் பாடி நம்மைப் பைத்தியக்காரனாக்கி விட்டார்.

'அகம்பாவத்திலேயே பிறந்து, வளர்ந்து ஊறி விட்டதால் துடுக்கானபேச்சு தானாகவே வருகிறது. தன் குற்றத்தை உணர்ந்து வருந்தி வருந்தித் துன்பப்படட்டும். அப்போதுதான் அவளுக்குப் புத்தி வரும்.

'இருந்தாலும் நமக்கும் இவ்வளவு முன் கோபம் எப்படி வந்தது? அவசரப்பட்டுக் கன்னத்தில் அறைந்தது தவறுதானே?'

ஒருவிதமாகவும் அவனுக்கு மனம் சமாதான மடையவில்லை.

ஆறுமாத காலம் பல ஊர்கள் சுற்றி விட்டான். லீவு போடுபவர்களின் தாற்காலிக வேலைகளையெல்லாம் ஏற்றுக் கொண்டு ஊர் ஊராகப் போனான்.

ஆனால் அவன் மனத்தில் மட்டும் நிம்மதியில்லை. தவிர, லலிதாவிடமிருந்து தினம் ஒரு கடிதம் வந்து கொண்டே இருந்தது, பலவிதமாக மன்னிப்புக் கோரி.

ஒன்றுக்காவது அவன் பதில் போடவேயில்லை. ஏதோ ஒரு பிடிவாதம், அவனைக் கல்நெஞ்சனாக்கியிருந்தது.

மாமனாரேகூட லலிதா ரொம்பவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பதாகவும், குற்றங்குறைகளையெல்லாம் மன்னித்து விடும்படியும் கடிதம் எழுதினார்.

அதற்கும் அவன் இளகவில்லை.

இந்தச் சமயத்தில்தான்—

புளியங்குடி என்ற கிராமத்துக்கு 'ஆக்டிங்' போகும்படி உத்தரவு வந்தது.

கிராமவாசம் தனக்கு நிம்மதி தரும் எனக் கருதி அதை மனமுவந்து ஏற்றுக் கொண்டு வந்தான். ஆனால்—

வாய்க்கு ருசியான சாப்பாடும், அமைதியான சூழ்நிலையும் உல்லாசமாக இருக்கும் எனக் கருதியதற்கு மாறாக—

எந்த உப்பு உபத்திரவத்தைக் கொடுத்து நிம்மதியைக் கெடுத்து விட்டதோ, அதே உப்பு, அப்பாசாமியின் சமையலைச் சாப்பிட்டதில் வயிற்றைக் கெடுத்து, மனத்தையும் பாழ்படுத்திவிட்டதே?

'' சார்! வாழைப்பழம் நல்லதா, கனிஞ்சதாகக் கிடைக்கலீங்க. சாயந்திரத்துக்குத்தான் கிடைக்கும். கொஞ்சம் பிஸ்கோத்து வாங்கியாந்தேன்.''

சிந்தனையைக் கலைத்தான் தங்கவேலு.

''சரி, கொண்டா. ஏதாவது தின்னு தொலைப்போம்'' என்று எரிச்சலுடன் கூறியபடியே அந்தப் பொட்டலத்தைக் கையில் வாங்கிப் பிரித்தான் நாராயணன்.



**என் குடும்பத்துக்கு இனி என்னால் கஷ்டமே இல்லை —**

**போர்ன்–விடாவுக்கு எனது நன்றி**



சென்ற வருஷம் நான் ஒரு அபாய விபத்துக்குள்ளாகி வெகு நாட்கள் ஆஸ்பத்திரியில் இருந்தேன். நான் வீட்டுக்கு திரும்பி வந்தும் கூட எனது உடம்பு சீக்கிரத்தில் சௌகர்யமாகவில்லை, குடும்பத்தில் என்னால் நேர்ந்த கஷ்டத்தை எண்ணி நான் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். இப்படியிருக்க தினமும் இரவில் படுக்கப்போகுமுன் **போர்ன்-விடா** சாப்பிடும்படி எனது டாக்டர் சொன்னார். சீக்கிரத்திலேயே முன்னைக்காட்டிலும் அதிக சக்தியையும் பலத்தையும் அடையப் பெற்றேன். **போர்ன்-விடா** எனக்கு புத்துயிர் அளித்தது. இப்பொழுது எனது குடும்பத்தினர் யாவரும் சக்திக்காகவும், வலிமைக்காகவும் தினந்தோறும் இரவில் **போர்ன்–விடாவைச்** சாப்பிடுகிறோம்.




*For Strength and Vigour*

# BOURN-VITA

MADE BY *Cadbury's*



மனைவி:—அட, கஷ்டமே! இது என் போட்டோவா? ஹாரம்! நான் இவ்வளவு மோசமாக இல்லவே இல்லை.

கணவர்:—என் காமிரா பொய் சொல்லாது தெரியுமா?

மனைவி:—அப்படின்னு உடனே போய்க் கொஞ்சம் பொய் சொல்லுகிற காமிராவாகப் பார்த்து வாங்கி வாங்க!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''என்னங்க. இளைக்கப் போயிட்டீங்க? நல்லா இருக்குங்களே, உப்பு பிஸ்கோத்து!''

''நாசமாய்ப் போச்சு'' என்றான் நாராயணன், அதை அப்படியே மேஜையின்மேல் வைத்து விட்டு.

ஏது. உப்புக்கும் நமக்கும் உறவு விடாது போல் இருக்கிறதே?

''என்னப்பா இது? உப்பு செய்யற சங்கடத்துக்காகத்தானே சோறுகூடத் திங்காமே ஓடி வந்தேன்? நீ என்னடாவென்றால், உப்பு பிஸ்கோத்து வாங்கி வந்திருக்கிறாய்!''

''ஆமாங்க. மறந்து விட்டேன்'' என்று தலையைச் சொறிந்தான் தங்கவேலு.

பானைத் தண்ணீரை இரண்டு டம்ளர் தாராளமாகக் குடித்து விட்டு இடத்தில் வந்து அமர்ந்தான் நாராயணன்.

நல்ல வேளை! தண்ணீராவது கல்கண்டாக இருக்கிறதே, சமுத்திரஜலமாக இராமல்?

வேலையில் கருத்தைச் செலுத்த முடியாமல் தலை சுற்றியது; அதோடு இலேசான தலைவலியும் வந்து விட்டது.

''இதுக்குத்தாங்க வீட்டுச் சாப்பாடாக இருக்க வேணும். நம்ம இஷ்டத்துக்கு வாய்க்கு ருசியா செய்து போடச் சொல்லலாம். ஹோட்டல்காரங்க தயவே தேவையில்லாமல் போயிடும். ஏங்க நீங்க ஒரு கல்யாணம் கட்டிக்கிடுங்களேன்!'' என்றான் தபால்காரத் தங்கவேலு.

'ம்' என்று பெருமூச்செறிந்தான் நாராயணன் தங்கவேலுவின் பேச்சைக் கேட்டு.

''கல்யாணம் ஆகிவிட்டது, அப்பா!''

''அப்ப, வீட்டம்மாவை அழைச்சாந்து வெச்சுக்கிடுங்க. சாப்பாட்டுக்குக் கஷ்டமில்லாமல் போயிடும்.''

சிரிப்பு வந்தது நாராயணனுக்கு. அதே சமயம் லலிதாவின் அழகிய முகம் கண் முன் வந்து நின்றது. லலிதா இங்கு இருந்தால் பொழுது உல்லாசமாகத்தான் கழியும், இந்தப் பட்டிக்காட்டில்.

அன்றுகூட ஒரு கடிதம் அவளிடமிருந்து. எங்கெங்கோ ஊர்கள் சுற்றி ஏராளமான முத்திரைகளுடன் வந்து சேர்ந்திருக்கிறது.

''என் தவறுகள் எதுவாக இருந்தாலும், மன்னித்து விடுங்கள். இந்தக் கடிதத்துக்காவது உங்களிடமிருந்து அவசியம் ஒரு வரியாவது பதில் வரவேண்டும். இல்லாவிட்டால் நான் சாப்பிடக்கூடப் போவதில்லை''

'பாவம்! அவள் செய்த குற்றம்தான் என்ன? நாமும் எதற்காக வீம்பு பிடிக்க வேண்டும்? முன் கோபத்தில் அவள் கன்னத்தில் கூட அறைந்து விட்டேனே.'

பலவிதமான போராட்டத்தில் பொழுது கழிந்தது. ஒரு வாரம் சென்றது. இதற்குள் அப்பாசாமியின் சமையல் நாராயணனுக்கு ஒத்துக்கொண்டு விட்டது. பழக்கமாகி விட்டதால் அதிகமான உப்பு, அவனுக்குச் சங்கடம் எதுவும் செய்யவில்லை.

அன்று அவனுக்கு இரண்டு கடிதங்கள், ஒன்று சென்னைக்கு மாற்றல் உத்தரவு.

மற்றொன்று தீபாவளிக்கு அவசியம் வந்து விடவேண்டும் என்ற மாமனாரின் அழைப்பு.

இம்முறை தைரியமாக மாமனார் வீட்டுச் சாப்பாட்டைச் சாப்பிடும் துணிவு ஏற்படுத்தி விட்ட அப்பாசாமியின் சமையலை வாழ்த்தி விட்டுப் புறப்பட்டான் நாராயணன்.

லலிதா துரும்பாக இளைத்துப் போயிருந்தாள். நாராயணனைக் கண்டதும்தான் அவள் முகத்தில் மலர்ச்சி ஏற்பட்டது

தனிமையில் இருந்தபோது, ''இந்தக் கன்னத்தில்தானே அடித்து விட்டேன்? நான் செய்தது பெரிய தவறு'' என்று இலேசாக வருடினான் நாராயணன்.

''ஏன் அதைப்பற்றியெல்லாம் இப்போது? சாப்பிட வாருங்கள்.''

''உன் சமையல்தானே?''

''ஆமாம். உங்களுக்குப் பிடித்தமாக இருக்கும். உப்பே போடவில்லை!''

''ஐயையோ! நான் இப்போது நிறைய உப்பு சாப்பிடுவதற்குப் பழகிக் கொண்டு விட்டேனே!'' என்றான் நாராயணன்.

'அடாடா! உங்களுடன் குடித்தனம் நடத்தவேண்டும் என்று நானும் உப்பைக் குறைத்துச் சாப்பிடப் பழகி விட்டேனே'' என்று கூறிச் சிரித்தாள் லலிதா.

''நல்ல வேடிக்கைதான்!'' என்றார், அவர்களது பேச்சைக் கேட்டுக் கொண்டே வந்த நாராயணனின் மாமனார்.

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

# உங்கள் கேசத்திற்கு உரிய

# பராமரிப்பை அளிக்கிறீர்களா?




இராஸ்மிக் பர்ப்யூம்ட் கோகனட் ஹேர் ஆயில் உபயோகித்து அன்றாடம் பராமரித்துவந்தால் உங்கள் கேசம் அடர்த்தியாகவும், பளபளப்புடனும் மிளிரும். சுத்தமான தேங்காயெண்ணெயான இராஸ்மிக், கேசத்திற்கு போஷாக்களித்து சம்ரட்சிக்கும். உங்களுக்குப் பிடித்தமான—ரோஜா அல்லது மல்லிகை—நறு மணத்துடன் கிடைக்கும் சீசா ஒன்றை இன்றே வாங்கி உபயோகித்துப் பாருங்கள்.

## இராஸ்மிக்

**பர்ப்யூம்ட்**

**கோகனட் ஹேர் ஆயில்**

பரிசுத்தத்திற்கு உத்தரவாதம்

புதுமை மாறாமல் நீடித்திருக்கும்

ECH. 3-50 TM

லண்டனிலுள்ள இராஸ்மிக் கம்பெனி லிமிடெட் சார்பாக
ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட்டினால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon